'இப்படியாப்பட்ட புள்ளையோட
ஈடுகுடுக்கறதுன்னு...'

'இப்படியாப்பட்ட புள்ளையோட ஈடுகுடுக்கற துன்னு... கைகொள்ளாத வேலைதான் போங்க. பயலைப் பளிச்சுன்னு சுத்தமா வெச்சுக்கணும்னு, எப்பப் பாருங்க, துணிதோவக்கற வேலைதான்... நல்ல வேளை, ஸன்லைட்தான் தெனம் காப்பாத்துது. வளப்பமா நுரை... துப்புரவாத் துணி வெளுக்குது தொல்லையில்லாம. சுத்தமான சோப்புக்கு அடையாளமே அதானே!'

புது டில்லிவாசியான ஸ்ரீமதி கமலா வாத்வானி கூறுகிறார்: 'ஸன்லைட்டுக்கு எந்த சோப்பும் ஈடாகவே ஆகாது!'

# ஸன்லைட்




ஸன்லைட் அருமை -- நம் துணிகளுக்கு நன்மை!

L31-X52 TM

இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு

# பி. ஓ. ஏ. ஸி. யின் காமெட் — ஜெட் விமானம் உங்களைக் கீழ்க்கண்ட இடங்களுக்கு அழைத்துச் செல்லுகிறது:



பெருட்



ரோம்



லண்டன்



ஹாங்காங்



டோகியோ



ஸிட்னி




தவணை முறைப்படி டிக்கட் வழங்கும் பி. ஓ. ஏ. ஸி. திட்டத்தைப் பயன்படுத்திக் கொள்ளுங்கள்.

**பயணம் முந்தி**
**பணம் பிந்தி!**

பி. ஓ. ஏ. ஸி. யினால் நியமிக்கப்பட்ட உள்ளூர் ட்ராவல் ஏஜெண்டும், தவிர எங்கெங்குமுள்ள பி. ஓ. ஏ. ஸி. அலுவலகங்களும் உங்களுக்குப் பணிபுரியக் காத்திருக்கின்றன.

உலகம் முழுவதும் பி. ஓ. ஏ. ஸி. **B·O·A·C** உங்களை நன்கு பேணுகிறது.

ஏர் இந்தியா மற்றும் க்வான்டாஸ் அவர்களோடு கூட்டமைந்த பிரிட்டிஷ் ஓவர்ஸீஸ் ஏர்வேஸ் கார்ப்பொரேஷன்.

பிலவ, மார்கழி 2



டிசம்பர் 17. 1961

# பொருளடக்கம்



'' கல்கி ''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே ; சம்பவங்களும் கற்பனையே.

வர்ஜீனியா புகையிலை இறக்குமதியாகும் விதேசிப் பண்டமென்றே கருதப்படுகி றது. உண்மையில், நிலமும் சீதோஷ்ண நிலையும் ஒத்துக்கொள்ளுமேயானால், உலகின் எப்பகுதியிலும் உற்பத்தி செய்து கொள்ளக்கூடிய ஒருவகைப் புகையிலையே வர்ஜீனியா. இன்று சிகரெட் உற்பத்தியில் முதன்மையான நாடுகள் இந்தியப் புகையிலையைப் பெருமளவில் வாங்கிச் செல்வதைப் பார்க்கையில், இந்தியாவின் வர்ஜீனியா புகையிலை அதி உன்னதமானது என்பது நிரூபணமாகிறது



# புகையிலையின் வரலாறு...6

Panama

20

CIGARETTES



பம்பாய்—57.

பாரதத்தில் இத்தகைய தேசிய ஸ்தாபனங்களில் மிகப் பெரியது.

# பனாமா

ஒரு நல்ல சிகரெட்—
இறுதிவரை இன்பமூட்டுவது

GT.706 TM

Greens' Advtg.



மலர் 21 | தமிழ்த்திரு நாடுதன்னைப்—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 20

# உழைப்பும் செல்வமுமே சமுதாயத்தின் அஸ்திவாரம்

ராஜாஜி

பொருளாதாரத் துறையில் மேலும்மேலும் முன்னேற வேண்டும் என்று வெறி பிடித்த மேல்நாட்டு வல்லரசுகள் ஒன்றோடொன்று நடத்திவரும் போட்டா போட்டியால்தான் இன்று அவை ஒன்றைக் கண்டு மற்றது நடுங்கும் நிலை ஏற்பட்டிருக்கிறது. அவை நடத்திய விஞ்ஞான ஆராய்ச்சிகளின் விளைவே இது. அணுயுகம் என்று சொல்லப்படும் இந்த விஞ்ஞான சகாப்தத்தில் மேல்நாடுகள் தங்கள் ஆத்மாவை இழந்துவிட்டன. மனிதனை மிருகங்களிலிருந்து வேறுபடுத்தும் தார்மீக உணர்ச்சியை அவை இழந்துவிட்டன. இதனால்தான் அவை சிறிதும் கூச்சமின்றி உலகச் சூழ்நிலை முழுவதையும் விஷமயமாக்கி வருகின்றன. தங்களுக்குள் பனிப்போர் நடத்திக் கொண்டிருக்கும்போதே, தங்களுக்கு ஒரு தீங்கும் எண்ணாத இதர உலக நாடுகளின் மீது நஞ்சைப் பரப்பி அசல் யுத்தம் புரிந்து வருகின்றன. ஆத்மாவைக் கொலை செய்துகொள்பவர்களுக்கு உரியதாக ஈசோபநிஷதம் கூறும் இருள் சூழ்ந்த உலகை நோக்கித்தான் இந்த வல்லரசுகள் செல்கின்றன.

असुर्या नाम ते लोका अन्धेन तमसाऽवृताः ।
तां स्ते प्रेत्याभिगच्छन्ति ये के चात्महनो जनाः ॥

பொருளாதார சுபிட்சமே குறியாக இருந்து, விஞ்ஞான ரீதியில் அதனை அடைய முயலுவதுதான் இத்தனை அனர்த்தத்துக்கும் மூலகாரணம். இந்தப் பொருளாதார வியாதி நம்மையும் தொத்திக் கொள்ளாமல் நாமாவது காப்புப் பெறுவோம். மற்ற நாடுகள் பரப்பும் விஷத்தினால் நாம் நாசமடைந்தால் கூடப் பாதகமில்லை; அவர்கள் செல்லும் வழியில் நாமும் சென்று நாமாகவே ஆத்ம நாசமடைவது விஷ மரணத்தை விடப் பயங்கரமானது. நாம் உயிரோடு உள்ள வரையில், நாம் உயிரோடு இருப்பதற்குப் பிறர் நம்மை அநுமதிக்கும் வரையில், நிர்ப்பயமாகச் சுதந்திர வாழ்வு நடத்தும் ஆனந்தத்தை நாம் பெறுவோம். அந்த வாழ்வுக்கு வழிகூறுவது, நம்முடைய புராதனப் பண்பாடுதான்; எந்த வல்லரசுக் கோஷ்டியுமல்ல.

சர்வதேச சகோதரத்துவத்தை நாம் போற்றுவோம்; மற்ற நாடுகளுடன் நட்புக் கொண்டாடுவோம்; ராஜரீகக் காரியங்களுக்கு உகந்த முறையில் அவர்களோடு கூட்டுச் சேருவோம்; சுயமரியாதைக்குப் பங்கமில்லாத வகையில் நம்முடைய பொருளாதார முன்னேற்றத்துக்கு அவர்கள் ஒத்துழைப்பை நாடுவோம். ஆனால் பொருளாதாரத்துடனும், அரசியலுடனும் வாழ்வு நிறைவு பெற்று விட்டதாக மயங்காதிருப்போம். நண்பர்களாகவும், ஆதரவாளர்களாகவும், உதவியளிப்பவர்களாகவும் காணவேண்டிய மேல் நாட்டினரை ஒருபோதும் நம்முடைய ஆன்மீக ஆசாரியனாக ஏற்றுக் கொள்ளாமலிருப்போம். மேல் நாடுகளுக்கு நாம் சிஷ்யப்பிள்ளை யாகாமலிருப்பதற்கு முதல்படி அவைகளிடம் நாம் கடனாளியாகாமலிருப்பதுதான். பனிப்போரை நம்பி, எதிரெதிர் கோஷ்டிகளுக்கு ஏற்றபடி விதம்விதமாக நாடகமாடி நன்மை தேடும் வரையில் நாம்

எப்படி உலக அரங்கில் தர்மத்தை எடுத்துச் சொல்ல முடியும்? இந்த நாட்டில் தொன்றுதொட்டு வந்த பண்பாகிய உண்மையான சாந்தியை உலகில் எப்படி நிலைநாட்ட முடியும்? ஒவ்வொருவருக்கும் உள்ளே அடங்கியிருக்கும் ஆத்மாவின் பலத்தினால் பயத்தை வெற்றி காண்பது எப்படி என்பதை உலகுக்கு எடுத்துக் காட்டுவதுதான் இந்தியாவுக்கு ஏற்பட்டுள்ள தனிப் பணி. இன்று அந்த ஆத்மாவை மறுத்தோ, உதாசீனப்படுத்தியோ தற்கொலை செய்து கொள்ளாமல் நம்மையே நாம் ரக்ஷித்துக்கொள்ள வேண்டும். ஈசோபநிஷதம் எச்சரிக்கும் இருள்வாழ்வு இந்தியாவுக்கு வேண்டாம்.

அதே உபநிஷத்தின் முதல் இரு மந்திரங்களின் உபதேசம் இதுவே:

'உலகில் காண்பதெல்லாம் ஆண்டவனுக்கு உரியதே. அதில் உனக்குக் கிட்டியதை அவனுடைய பிரசாதமாகக் கருதி அநுபவிப்பாய்! பிறருடைய பொருட்களுக்குப் பேராசைப்படாதே.

'கர்மங்களைச் செய்து கொண்டே ஆயுள் முழுவதையும் கழிப்பாய். உயிர் வாழுவதற்கு, உழைப்பதன்றி வேறு வழி இடையாது. பலனில் பற்று வைக்காமல் தொழில் படுவதே உபாயம்.'

ईशावास्यमिदं सर्वं यत्किं च जगत्यां जगत् ।
तेन त्यक्तेन भुञ्जीथा मा गृधः कस्यस्विद्धनम् ॥
कुर्वन्नेवेह कर्माणि जिजीविषेच्छतं समाः ।
एवं त्वयि नान्यथेतोऽस्ति न कर्म लिप्यते नरे ॥

பற்றும், பேராசையும்தான் விரோதம், பயம், ஆத்ம நாசம் இவற்றுக்குக் காரணமாகி நம்மை இருளில் தள்ளுகின்றன. பெரிய பெரிய பலன்களைக் காண வேண்டும் என்று போட்டி போட்டுக் கொண்டு உழைத்த மேல் நாடுகளின் நிலையைக் கண்டு நாம் விழித்துக் கொள்ள வேண்டும்.

பலனை நினைக்காமல், பொறுமையில்லாமல் நாம் உழைப்போம். உழைப்பு மனித வாழ்க்கைக்கு அவசியம். பற்றற்ற கருமம் மனிதன் பிறக்கும்போதே அவனுக்கு ஏற்பட்ட கடமையாகும். இயற்கையே விதித்துள்ள கடமையாகிய கர்மத்தைச் செய்து நேர்மையான முறையில் செல்வம் சேர்ப்பதில் தவறில்லை. அதனைக்கண்டு பொறுமைப்படக்கூடாது. அதனைப் பறிக்கக்கூடாது என்பதற்காகவே 'பிறர் பொருளில் பேராசை வைக்காதே' என்கிறது உபநிஷதம்.

நாடுகளுக்கிடையே அநுஷ்டிக்க வேண்டிய இந்தத் தர்ம நெறியை ஒவ்வொரு நாடும் அதன் பிரஜைகள் விஷயத்தில் கடைப்பிடிக்க வேண்டும். அவரவர்களுக்கு உகந்த கர்மத்தைச் செய்தே மக்கள் உய்ய உதவும் அரசாட்சிதான் தர்மத்துக்கு உகந்ததாகும். நியாயமாக உழைத்து நேர்மையாக ஈட்டிய செல்வம் புனிதமானது. இந்த உழைப்பும், செல்வமும்தான் நாகரீக சமுதாயத்தின் அஸ்திவாரமாகும். இவை இல்லாவிட்டால் ஒழுங்கான சமூகம் ஏற்படாது; சுதந்திரம் இராது; மேலும் உழைத்து நாட்டைச் செழிக்கச் செய்வதற்கான ஊக்கமும் இருக்காது. முடிவில் நாகரீகமே அழிந்து போகும். இதையெல்லாம் மனத்தில் கொண்டுதான் உழைக்கவும், பொருள் ஈட்டவும், ஈட்டிய பொருளைப் பராமரிக்கவும், பறிமுதலாகாமல் அதனைப் பாதுகாக்கவும் அரசியல் நிர்ணயச் சட்டம் உரிமை வழங்கிற்று.

இந்த உரிமையெல்லாம் இன்று கேலிக்கூத்தாகி விட்டன. பாரதப் பண்புக்குகந்த சமுதாய வாழ்வின் அஸ்திவாரத்தைப் பறிப்பவையே இன்றைய பறிமுதல் சட்டங்கள். இந்தச் சட்டங்களை செய்த காங்கிரஸ் மீண்டும் ஆட்சிக்கு வராமல் செய்வதே அடுத்ததேர்தலில் மக்கள் ஏற்க வேண்டிய பொறுப்பாகும்.

## சீனு வெடி!

அசல் குண்டுபோட்டு ஆக்கிரமிக்கக் கூடிய சீனு அதைவிடப் பெரிய குற்றச் சாட்டுக் குண்டொன்றை இந்தியாமீது வீசியிருக்கிறது. தாங்கள் செய்யும் தவறுகளை யெல்லாம் இந்தியாவின் மீது ஏற்றிப் பார்த்து வசைமாரி பொழிந்திருக்கிறது. 'தனது எல்லைப் பகுதியில் இந்தியா ராணுவ நடவடிக்கையை மும்மரப் படுத்தினால் மக்மாஹன் கோட்டைத் தாண்டிப் பிரவேசிப்போம்' என மிரட்டுகிறது. தனது எல்லை என்னவென்பது பற்றி அது தரும் விளக்கம் உலகம் காணாத புதுமை. மலைத் தொடர்கள் இரு நாட்டைப் பிரிக்கும் போது அவற்றின் சிகரங்களே அவ்விரு நாடுகளின் எல்லைக் கோடாகும் என்ற உலகச் சட்டத்தை மீறி விட்டது சீனு. இந்தியாவைச் சேர்ந்த இமய மலையின் தெற்கு அடிவாரம் வரை பாத்தியதை கொண்டாடி 'மன்னும் இமய மலை எங்கள் மலையே!' என்று மிரட்டுகிறது.




ஏன் மிரட்டாது? இன்று இந்தியாவில் நடக்கும் அழகான நிர்வாகத்தைக் கண்டால் ஏகாதிபத்தியப் பசி கொண்ட எந்த நாட்டுக்குத்தான் நாக்கில் நீர் சுரக்காது? சமாதானம் சமாதானம் என்ற பெயரில் செயலற்று ஸ்தம்பித்து நிற்கும் இந்திய சர்க்கார் சீனாவின் மன்னுசைக்கு நன்றாகத் தூபம் போட்டு விட்டது. இப்பொழுதும்கூட நேரு அவர்களும், அவரால் பாதுகாக்கப்படும் பாதுகாப்பு மந்திரி அவர்களும் உறுதியான எதிர் நடவடிக்கை எடுக்க முற்படவில்லை. 'சீனா இப்படியெல்லாம் மிரட்டியிருந்தாலும் இதைக் கண்டு இந்தியா ஏமாந்து விடாது' என்று கூறிச் சீனர்களின் சாந்த இதயத்தைக் கண்டு களிக்கிறார் நேருஜி. ஆனால் இந்த நாட்டின் சேனாதிபதியாக இருந்த ஸ்ரீ கரியப்பா அவர்களோ, 'செயலில் இறங்குவதற்கும் தயாராக இருந்தாலன்றி மக்மாஹன் எல்லையைக் கடப்பதாகச் சீனா மிரட்டாது' என்று எச்சரிக்கிறார். ''இப்போது சீனாவுடன் போரில் இறங்கினால் உலக யுத்தம் ஏற்படும். சீனாவுடன் போர் புரிய இன்னும் இந்தியா போதிய ராணுவ பலம் பெறவில்லை'' என்கிறார் பிரதமர். அப்படியானால், இந்திய ராணுவம் தங்களை எதிர்க்கச் சக்தி பெறும் வரை சீனா பெருந்தன்மையுடன் பொறுத்திருக்கும் என்று பிரதமர் எதிர்பார்க்கிறாரா? இன்று நாம் பலமிழந்து நிற்பதைக் காணும் போது முன்பு ராஜாஜி கூறிய ஓர் அறிவுரையை ஆட்சி பீடத்திலுள்ளோர் ஏற்றுக் கொள்ளாததன் விபரீத விளைவே இது என்பது தெரிகிறது. ராணுவக் கூட்டு சேருவதொன்றே இந்தியா கடைப்பிடிக்க வேண்டிய வழி என்று அவர் கூறியதை நாம் ஏற்காமல் போனதுதான் சீனாவுக்கு ஓர் ஊன்றுகோலாக அமைந்து விட்டது.

ருஷியாவின் நிர்ப்பந்தம் காரணமாகச் சீனாவே தனது போக்கை மாற்றிக் கொள்ள நேரிடும் என்று நேருஜி

சுட்டிக் காட்டியிருக்கிறார். நம் எல்லையின் விதியை ருஷியாவின் கருணைக்குப் பிரதமர் விட்டு வைத்திருக்கும் அதே நேரத்தில், திபெத்தில் ஒன்றரை லட்சம் சீனத் துருப்புக்கள் குவிந்திருப்பதாகவும் அவர்களிடம் நவீனமான ருஷிய ஆயுதங்கள் இருப்பதாகவும் ஒரு செய்தி வந்துள்ளதை நாம் மறப்பதற்கில்லை. ருஷியா - சீனா உறவு விண்டு கூற முடியாத ஒரு விந்தை. மேலும் பாகிஸ்தான் அதிபருடன் சீனா புது உறவு கொண்டாடி இழைவதாகத் தகவல்கள் வந்தபடி இருக்கின்றன. 'அவர்களுக்குத் துணை கிடையாது; ஆகவே நமக்கும் துணை வேண்டாம்' என்ற நேரு சர்க்கார் கொள்கை எவ்வளவு அர்த்தமற்றது என்பதை ஸ்ரீ ஜி. எல். மேத்தா அவர்கள் விளக்கியிருக்கிறார். சோவியத் ஆதரவு பெற்ற மங்கோலியாவிலோ, அமெரிக்க பலம் பெற்ற பார்மோசாவிலோ சீனா வாலாட்ட முடியவில்லை என்பதை அவர் எடுத்துக் காட்டியிருக்கிறார்.

மா பெரும் சாம்ராஜ்யமான சீனா நம் மீது குற்றம் சாட்டுவதுபோலவே சுண்டைக்காய் நாடான போர்ச்சுகலும் இந்தியாவின் 'ஆக்கிரமிப்பு' பற்றிப் புகார் விடுத்துள்ளது. போர்ச்சுகலின் வெளியேற்றம் தவிர வேறு எவ்விதத்திலும் தீர்க்க முடியாத காலனிப் பிரச்னையை பிரிட்டனின் மத்தியஸ்தத்துக்கு விடவேண்டுமென்கிறது அது. இப்படி சமாதானப் பேச்சு பேசும்போதே இந்தியத் திட்டுக்களில் கப்பல்களையும், விமானங்களையும், துருப்புக்களையும் கொண்டு வந்து குவிக்கிறது. தேச பக்தியுள்ள மக்களைச் சித்திரவதை செய்கிறது. தன் ஆதிக்கத்திலுள்ள பிரதேசம் முழுவதையும் ராணுவ முகாமாக மாற்றியிருக்கிறது. இதில் இந்திய சர்க்காரின் கண்களைத் திறக்க வேண்டிய விஷயம் போர்ச்சுகீஸிய துருப்புக்களிடம் நாட்டோ ஆயுதங்கள் உள்ளதாகப் பரவியுள்ள செய்திதான். பாகிஸ்தானும் போர்ச்சுகலுக்கு உதவி அளிக்கக் கூடும் என்பதற்கு முகாந்திரங்கள் கிடைத்திருக்கின்றன. நாம் நழுவவிட்ட வாய்ப்புகளே எதிரிகளின் கைகளுக்கு வலு வளித்திருக்கின்றன.

எவ்வளவுதான் சொன்னாலும் கோவா விவகாரம் சிறிய பிரச்னையே. தக்க நடவடிக்கை எடுத்தால் நொடியில் தவிடு பொடியாக்கி விடக் கூடிய எதிர்ப்பே அது. நகத்தால் கிள்ள வேண்டியதை நேரு சர்க்கார்தான் கோடரியால் பிளக்க வேண்டிய விஷயமாக முற்றவைத்திருக்கிறது. கோவா விவகாரத்தை யொட்டிச் சீன அபாயத்தை மறப்பதோ, மறுப்பதோ, மறைப்பதோ விநாசகரமாக முடியும். எல்லையிலுள்ள துருப்புக்களை அளவுக்கு மீறிப் போர்ச்சுகீஸியத் திட்டுக்களுக்கு அனுப்பி வைப்பதன் அபாயத்தை ராஜாஜி அறிவுறுத்தி வருகிறார். ஆனால் வேண்டுமென்றே கோவாப் பிரச்னையை நீடித்து, இறுதியில் அங்கு தாங்கள் ஏதோ பெரிய சாகஸம் செய்து விட்டதாக வாக்காளர்களை நம்பவைத்து, வட எல்லைத் தோல்வியைப் பூசி மெழுகக் காங்கிரஸ் எண்ணம் கொண்டிருக்கலாம். இதைக் கூறாமல் கூறி ஒரு தேர்தல் பிரச்னையாகவும் ஆக்கலாம். இதே சமயத்தில் சீனத் தகராறைத் தேர்தல் பிரச்னையாக்கக் கூடாது என்று ஸ்ரீ கிருஷ்ண மேனன் கூறியிருப்பதையும் கவனிக்க வேண்டும். காங்கிரஸ் சர்க்கார் நம் நாட்டின் பல சதுர மைல்களை அந்நியருக்குப் பறிகொடுத்திருப்பது தேர்தல் பிரச்னையானால் அப்புறம் கிருஷ்ண மேனன் கதி என்னாவது?

## நிலவரி நிலவரம்

சுதந்திரக் கட்சி நிலவரிகளை ரத்து செய்து விடும் என்று அந்தக் கட்சியின் தேர்தல் அறிக்கை கூறுகிறது அல்லவா? இதைக் கண்ட விவசாயிகள் தங்கள் வயிற்றில் பாலை வார்த்தது போல் ஆனந்தம் அடைந்திருக்கிறார்கள். ஆனால் இதே வாசகம் காங்கிரஸ்காரர்களுக்கு வயிற்றெரிச்சலைத்தான் உண்டாக்கியிருக்கிறது. 'விவசாயிகளின் வோட்டைப் பெறுவதற்காகச் சுதந்திரக்கட்சி செய்யும் தேர்தல் தந்திரம் இது. நடைமுறைக்கு வர முடியாத வறட்டுக் கொள்கையே இது. நிலவரியை இழந்து விட்டால் சர்க்கார் அபிவிருத்தி வேலைகளைச் செய்ய முடியாது' என்கிறார்கள் காங்கிரஸ்காரர்கள்.

நமது ராஜ்ய நிதி மந்திரி அவர்கள், 'நில வரியை எடுத்து விட்டால் பள்ளிக்கூடங்கள் கட்ட முடியாது; வைத்திய சாலைகள் ஏற்படுத்த முடியாது; சாலைகள் போட முடியாது' என்றெல்லாம் அடுக்கியிருக்கிறார். எல்லா அபிவிருத்திப் பணிகளும் நில வரியை நம்பித்தான்

நடைபெறுகின்றன வென்றால் இதர வரிகளை யெல்லாம் எடுத்து விடலாமே என்று அவருக்குத் தாழ்மையுடன் யோசனை தெரிவிக்கிறோம்.

மிகைப்படுத்திப் பேசும் கலைக்கும் எல்லை உண்டு. உண்மையில் நில வரி என்பது சர்க்கார் வருமானத்தில் மிகக் குறைந்த ஒரு சத விகிதமே. இந்தியாவி லுள்ள சர்க்கார்களெல்லாம் வசூலிக்கும் 1800 கோடி ரூபாய் வரியில் நான்கு சத விகிதத்துக்கும் குறைவே நில வரியி லிருந்து கிடைப்பது.

உதாரணமாக, சென்னை ராஜ்யத் தின் மொத்த வரி வசூல் தொண்ணூறு கோடி ரூபாய். அதோடு திட்டத்துக் காக மத்திய சர்க்காரும், ராஜ்ய சர்க் காருமாகச் சராசரியில் ஆண்டொன் றுக்கு எண்பது கோடி ரூபாய் செல விடப் போகிறார்கள். இந்த ராஜ்யத்தில் நில வரியிலிருந்து கிடைப்பது ஆறு கோடி ரூபாய்தான். 170 கோடி ரூபா யில் ஆறு கோடி என்பது எவ்வளவு சிறிய பங்கு என்பதைக் கணக்குத் தெரிந்த எல்லோரும் அறிவார்கள். இந்த ஆறு கோடியிலும் ஒரு கணிச மான பங்கு வரி வசூல் செய்யும் இலாகா வுக்காகவே செலவாகி விடுகிறது என் பதையும் மக்கள் நினைவு கொண்டால் சுதந்திரக் கட்சியின் வாக்குறுதி சாத்தி யப் பூர்வமானதே என்பது தெள்ளத் தெளியத் தெரிய வரும்.

## திட்டமும் திட்டலும்

அரசாங்கச் சார்பில் கட்சியைப் பலப்படுத்துவதற்கு ஆங்காங்கே திட்ட வாரங்கள் கொண்டாடத் தொடங்கி யிருக்கிறார்கள். திட்ட வாரம் தாராள மாகக் கொண்டாடட்டும்; ஆனால் இவற் றில் எதிர்க் கட்சியைத் திட்டவாரம் பிப்பானேன் என்றுதான் புரியவில்லை. அரசாங்கச் சார்பில் நடக்கும் கொண் டாட்டமாதலால் ஸ்ரீ ஸி. சுப்பிரமணி யம் அவர்கள் திட்டம் வேண்டாதவர்கள் என்று சிலரைப் பிரித்து வைத்து நாகூக் காக இடித்துரைக்கிறார். ராஜ்ய நிதி மந்திரியைவிட இந்தியப் பிரதம மந்திரி வெளிப்படையாகப் பேசித் தீர்த்திருக் கிறார். 'சுதந்திரக் கட்சியானது திட்டம் ஏதும் இல்லாத பத்தாம் பசலிக் கட்சி. திட்டம் எதையும் மக்கள் முன் வைக்க முடியாததால்தான் ஆளும் கட்சியைக் குறைகூறியே அது காலம் தள்ளுகிறது' என்று கர்ஜித்திருக்கிறார்.

சுதந்திரக் கட்சி பத்தாம் பசலி என் பது உண்மைதான் என்கிறார் ராஜாஜி. நேருஜி கூறுவதுபோல் வெறும் பத் தொன்பதாம் நூற்றாண்டுப் பத்தாம் பசலி அல்ல; காலம் சொல்ல முடியாத தர்மம் எவ்வளவு பத்தாம் பசலியோ அவ்வளவு பத்தாம் பசலி எங்கள் கட்சி என்கிறார். ஆனால் இந்தத் தர்மம் சாசு வதமானது, என்றைக்கும் கிழடு தட் டாதது என்றும் அவர் கருதுகிறார். சென்ற நூற்றாண்டின் நவீன சித்தாந்த மாகத் திகழ்ந்து இன்று மேல் நாடுக ளெல்லாம் கைவிட்டுவரும் சோஷலிஸம் தான் உண்மையில் பத்தாம் பசலியாகி விட்டது என்று ராஜாஜி கூறுகிறார். இல்லாவிட்டால் ஜெர்மன் சோஷலிஸக் கட்சியின்கொள்கையறிக்கை நம்முடைய சுதந்திரக் கட்சி அறிக்கையின் பிரதி யாக இருப்பானேன் என்று கேட்கிறார்.

சுதந்திரக் கட்சிக்குத் திட்டமில்லை என்று கூறுவது முழுப் பொய். 'திட்டக் கமிஷன் என்ற பூதத்துக்குச் சர்க்கா ரைப் பலி வைக்க மாட்டோம்; பிரம் மாண்டத் திட்டம் போட்டுத் தேசத்தை வெளிநாடுகளுக்கு அடமானம் வைக்க மாட்டோம், சிறுகச் சிறுக முன்னேற்றம் காணுவோம்' என்பதே சுதந்திரக் கட்சி யின் கொள்கை.

பிரம்மாண்டத் திட்டங்களைச் செய லாக்குவதில் எவ்வளவு விரயமாகிறது என்பதை அறிந்தாலே போதும், இந்த முறை வேண்டாம் என்று தள்ளுவதற்கு. தாமோதர் பள்ளத்தாக்குக் கார்ப்ப ரேஷன் என்ற திட்டத்தில் ஓர் இனத் தில் மதிப்பீட்டைப்போல ஐம்பத்தோரு மடங்கு உண்மையில் செலவழிந்திருப்ப தாகவும், அதன் நீர்ப்பாசனத் திறனில் மூன்றில் ஒன்று பங்கு கூடப் பயனுக்கு வராததாகவும் கணக்கர் அறிக்கை வெளியாகி யுள்ளது. ரூர்கேலா உருக் காலை இதுவரையில் உரிய காலத்தில் சாமான்களை எடுத்துக் கொள்ளாததற் காக ரயில்வேக்குச் செலுத்திய அப ராதத் தொகையே அறுபது லட்சம் ரூபாய் என்று இன்னொரு செய்தி சொல் கிறது. சுய ஈடுபாடில்லாத அதிகார வர்க்கத்தினிடம் கோடிக் கணக்கில்-அது வும் கடன்வாங்கிய தொகை-பணத்தைக் கொடுத்துப் பெரும் திட்டம் போடுவது தவறு என்பதைக் காங்கிரஸ் என்றுமே உணரப் போவதில்லை. ஆனால் அதற்கு வோட்டுப் போடுவது தவறு என்பதை வாக்காளர்கள் உணரத் தவற மாட் டார்கள்.

# சுதந்திரத்தின் வழியே சுபீட்ச வாழ்வு

## தேர்தல் அறிக்கை

## 5. தொழிலாளர்

43. தொழில், விவசாயம் இரண்டு துறைகளைச் சேர்ந்த தொழிலாளர்களுக்கும் நியாயமாகச் சேர வேண்டியதை வழங்குவதற்குச் சுதந்திரக் கட்சி உறுதி பூண்டிருக்கிறது. தமது வாழ்நிலையையும், வேலை முறையையும் உயர்த்திக் கொள்வதற்காகத் தொழிலாளர்கள் ஒன்று சேரும் உரிமையை இக் கட்சி ஒப்புக் கொள்கிறது. இப்போதுள்ள தொழிலாளர் சங்கங்கள் அரசியல் கட்சிகளின் கைப்பாவையாகவே உள்ளன. இவ்விதமன்றித் தொழிலாளர்களாலேயே நிர்வகிக்கப்படும் வலிவு வாய்ந்த, பொறுப்புள்ள தொழிற் சங்கங்கள் ஜனநாயகத் தொழில் முறையின் ஓர் இன்றியமையாத அங்கமாகும். ஊதிய நிர்ணய விஷயத்தில் தொழிலாளர் கூட்டாகச் சேர்ந்து ஷரத்துக்கள் பேசும் உரிமையைச் சுதந்திரக் கட்சி ஆதரிக்கிறது. அவசியமானால் இதையொட்டி அவர்கள் வேலைக்கு வராமலிருக்கும் உரிமையையும் அது ஒப்புக் கொள்கிறது.

44. ஆலைத் தொழிலாளர்களும், நிர்வாகிகளும் இப்போதிருப்பதை விட நெருக்கமாக இணைந்து நிற்பதற்குச் சுதந்திரக் கட்சி பாடுபடும். இதனால் உற்பத்தியில் ஈடுபட்டுள்ளவர்களிடையே தாங்கள் கூட்டாளிகள் என்ற உணர்ச்சி வளர வேண்டுமென அது விரும்புகிறது.

### அபிவிருத்திப் பலனில் பங்கீடு

45. நியாயமான ஒருநாள் உழைப்புக்கு நியாயமான ஒருநாள் ஊதியம் கிடைக்க வேண்டுமென்பது சுதந்திரக் கட்சியின் கொள்கை. உற்பத்தித் திறன் அதிகரிப்பதற்கேற்ப, ஊழியர்களின் ஊதியங்களையும் அதிகரித்து அபிவிருத்திப் பலனில் அவர்களும் பங்குபெறச் செய்வதை ஊக்கவேண்டும் என்பது அதன் கருத்து. இதனால் உற்பத்தித் திறன் உயர்ந்தும் விலைகள் இறங்காத நிலை உண்டாகி முக்கியப் பொது இலட்சியமாகிய தேசிய சுபிட்சத்துக்குக் குந்தகம் ஏற்படாமல் பார்த்துக் கொள்ள வேண்டும் என்று அது கருதுகிறது.

## 6. அரசியல் சட்டமும் பொது நிர்வாகமும்

46. நமது அரசியல் நிர்ணயச் சட்டத்தின் நோக்கங்களை முற்றிலும் மதித்து நடக்க வேண்டும்; இதனால் சுயராஜ்யம் என்பது மக்கள் சுய விருப்பத்துடன் இடையறாமல் செய்யும் முயற்சியாக இருக்க வேண்டும் என்கிறது சுதந்திரக் கட்சி. இந்தக் குறிக்கோளை ஈடேற்றுவதற்காகச் சுதந்திரக் கட்சியானது,

(i) பத்திரிகைகளுக்குப் பூரண சுதந்திரம் கிடைக்கச் செய்யும். சமூக நலப் பணிகளை மேற்கொள்ளச் சுயாட்சி உரிமையுள்ள அதிகாரச் சார்பற்ற ஸ்தாபனங்களை வளர்க்கும். சமூக நலன் என்ற பெயரில் அதிகாரச் சார்புள்ள திட்டங்களைத் திணித்துச் சர்க்கார் சர்வாதிபத்தியத்தையும், ஆளும் கட்சியின் பலத்தையும் பெருக்கிக் கொள்ளாது.


சுதந்திரக் கட்சியின் தேர்தல் சின்னம்

(ii) முன்பு அரசியல் நிர்ணயச் சட்டம் அளித்த ஜீவாதார உரிமைகளுக்கு மீண்டும் அதில் இடம் பெற்றுத் தரும்.

(iii) அரசியல் சட்டம் ராஜ்யங்களுக்கு அளித்திருந்த சட்ட பூர்வமான அதிகாரங்களையும், கடமைகளையும் ஆணைவரம்புகளையும் மீண்டும் அவற்றுக்குக் கிடைக்கச் செய்யும்.

(iv) யூனியன் நிர்வாகத்திலுள்ள பகுதிகளின் நிர்வாகம் ஜனநாயக ரீதியில் அமைவதற்குப் பாடுபடும்.

(v) நீதிபரிபாலனத் துறையின் சுதந்திரத்தையும், அதிகாரங்களையும் ஒவ்வோர் அம்சத்திலும் பராமரிக்கும்.

47. பண பலத்தின் செல்வாக்கைக் குறைத்து, வாக்காளர்களின் உண்மையான கருத்துக்கள் நிலவுவதற்குரிய வாய்ப்புக்களை அளிக்க வேண்டும்; இவ்விதத்தில் தேர்தல் சட்டத்தைச் சீர்திருத்த வேண்டுமென்பது சுதந்திரக் கட்சியின் ஓர் இலட்சியமாகும். ஒவ்வொரு வாக்காளருக்கும் அவர் எங்கு எப்போது வாக்களிக்க வேண்டுமென்பதையும், வாக்காளர் பட்டியலில் அவர் இலக்கத்தையும் தெரிவிக்க வேண்டியது சர்க்காரின் கடமையாக வேண்டுமென அது கூறுகிறது.

### அரசாங்க சேவை

48. முக்கியமாக இந்தக் கட்சி நாட்டுக்குத் தூய நிர்வாகத்தை அளிக்கும். அன்றாட நிர்வாகத்தில் ஆளும் கட்சி அல்லது வேறெந்தக் கட்சியைச் சேர்ந்த அரசியல்வாதிகளின் குறுக்கீடும் இராது என்று அது உறுதி அளிக்கும்.

49. இந்நிலையைத் தோற்றுவிக்கும் பொருட்டு, யூனியன் ஜனாதிபதியும், ராஜ்ய கவர்னர்களும் கட்சிச் சார்பற்றவர்களாக இருக்க வேண்டும் என்றும், அவர்களே தங்களது நியாயமான கருத்தை யொட்டி பப்ளிக் சர்வீஸ் கமிஷன் அங்கத்தினர்களை நியமிக்கும் அதிகாரத்தைப் பெறவேண்டுமென்றும் இக்கட்சி வற்புறுத்தும். பப்ளிக் சர்வீஸ் கமிஷன் அங்கத்தினர்களுக்குக் காப்புத் தருவது ஜனாதிபதி, கவர்னர்கள் ஆகியோரின் விசேஷப் பொறுப்பாக்கப்பட வேண்டும்.

50. நிர்வாக இயந்திரத்தை விஸ்தரித்து வீண் செலவு ஏற்படுத்துவதைச் சுதந்திரக் கட்சி நிறுத்தும். உற்பத்திக்குதவாத இனங்களுக்காகக் குறைந்தபட்சச் செலவே செய்யும். மிதமிஞ்சிய செலவில் பெரிய பெரிய கட்டிடங்கள் எழுப்புவதை அது நிறுத்தும்.

51. வாழ்க்கைச் செலவு உயர்வுக்கேற்பக் குறைந்த வருமான வர்க்கத்தைச் சேர்ந்த ஓய்வு பெற்ற அரசாங்க ஊழியர்களின் பென்ஷன் விகிதங்களை மாற்ற வேண்டுமென அது கருதுகிறது.

52. லஞ்ச ஊழலையும், பிரஜா உரிமைகளை மனம் போனபடி தகர்ப்பதையும் தடுத்து நிறுத்துவதற்காக மத்திய கட்டத்திலும், ராஜ்யங்களிலும் ஒரு சுதந்திரமுள்ள ஆணைக்குழுவை அமைக்க வேண்டுமென இந்தக் கட்சி வலியுறுத்தும். ஸ்காண்டிநேவியாவிலுள்ள **ஆம்புட்ஸ்மான்** என்ற அமைப்பைப் போல இது மக்களின் குறைபாடுகளையும், நிர்வாக ஊழல்களையும் விசாரணை செய்து நிவாரணம் அளிக்கும்.

## 7. சர்வதேச உறவுகளும் பாதுகாப்பும்

53. நம்முடைய நிலப் பரப்பின்மீது நமக்குள்ள உரிமையைக் கம்யூனிஸ்ட் சீனா மீறியிருக்கும் தருணத்தில் சக வாழ்வு, கூட்டு சேராக் கொள்கை ஆகிய மானசீகமான கருத்துக்கள் பொருள் இழந்துவிட்டன என்று சுதந்திரக் கட்சி கருதுகிறது. நம்முடைய அந்நியக் கொள்கையை மீண்டும் பரிசீலனை செய்து அகில உலகத்தில் நிலவும் பிரத்தியட்சமான நிலைமைக்கு ஏற்ற முறையில் அவற்றைத் திருத்தி அமைக்க வேண்டும் என்கிறது அது. சீனா விவகாரத்தில் உறுதியான, உஷாரான கொள்கையைக் கடைப்பிடித்து ஆக்கிரமிப்பை எவ்வளவு விரைவில் இயலுமோ அவ்வளவு விரைவில் முடித்து வைப்பதற்கேற்ற நடவடிக்கைகளை மேற்கொள்ள அது உறுதி பூண்டுள்ளது.

54. கம்யூனிஸ்ட் கோஷ்டி நாடுகளுக்கு இசைவாக இந்தியா பாரபட்சம் காட்டுகிறது என உலக நாடுகளிடையே ஏற்பட்டுள்ள துர்ப்பாக்கிய வசமான கருத்தை மாற்றுவதற்குச் சுதந்திரக் கட்சி பிரயாசை எடுத்துக் கொள்ளும்.

55. உலக அரங்கில் இந்தியாவுக்கு இருந்த தார்மீகச் செல்வாக்கை மீண்டும் உயிர்ப்பிக்கச் சுதந்திரக் கட்சி சங்கற்பம் செய்து கொண்டிருக்கிறது. நமது நாடு சமாதானம், நீதி, சுதந்திரம் இவற்றுக்காகப் பாடுபட இது உதவும். சாந்தியே இந்தியாவின் பண்பு. உள்ளத்திலிருக்கும் ஆத்ம பலத்தால் அச்சத்தை வெல்வதை உலகுக்கு எடுத்துக்காட்டுவதால் நமது இப்பண்பு வெளியாகிறது.

### பாதுகாப்புப் பணி

56. (i) இன்று பாதுகாப்புப் பணியில் ஈடுபட்டுள்ளவர்களின் தொழில் நெறி பலவீனமுற்றிருப்பதற்குக் காரணம் அரசியல்வாதிகள் அவற்றின்மீது செலுத்தும் ஆதிக்கம்தான். சுதந்திரக் கட்சி அரசியலையும் ராணுவ சேவையையும் கலக்க விடாது.

(ii) இக்கட்சி பாதுகாப்பு சேவைத் துறையைச் செயல் திறனுள்ளதாக ஆக்கிப் பராமரிக்கும். முன்பு ராணுவ சேவையிலிருந்தவர்களின் நியாயமான குறைகளுக்கு அது பரிகாரம் காணும்.

(அடுத்த இதழில் முடியும்)

### சென்னைக்குப் புதிய ஷெரீப்



சென்னை நகர 'ஷெரீப்' பதவிக்கு ஆண்டுதோறும் தொழில் துறையில் பிரபலமுற்றிருக்கும் ஒருவரை நியமிப்பது வழக்கம். இதன்படி நடப்பு ஆண்டுக்குத் திரு பி. சூர்யநாராயணா அவர்கள் நியமிக்கப்பட்டுள்ளார். 35 வருஷமாகத் தொழில் துறையில் ஈடுபட்டுள்ள திரு சூரியநாராயணா திருப்பதி பஞ்சாலை, காவேரி பஞ்சாலை போன்ற ஆலைகளை நிறுவி வெற்றிகரமாக நடத்தி வருகிறார். ஆந்திர வர்த்தக சங்கத்தின் முன்னாள் தலைவராகவும், சிலகாலம் இந்திய வர்த்தக சம்மேளனக் கமிட்டி அங்கத்தினராகவும் இருந்தவர். அயல்நாடு சென்று தொழில் அனுபவம் பெற்றவர். அவருக்கு நம் நல்வாழ்த்துக்கள்.

## அஞ்சலி



சென்னை நகரத்து வழக்கறிஞரும் முன்னாள் 'அபீஷியல் அஸ்ஸைனி'யுமான திரு வி. தியாகராஜன் அவர்களின் மனைவி ஸ்ரீமதி சுந்தரம்மாள் சென்ற ஆண்டு டிசம்பர் 13-ந் தேதி இரவு தமது 58-வது வயதில் காலமானார். ஸ்ரீமதி சுந்தரம்மாள் சென்னை மாநிலத்தில் முன்பு டிபுடி கலெக்டராக இருந்த ஸ்ரீ சி.என். சுப்பிரமணிய அய்யரின் தலைப்புதல்வியார் ஆவார். இந்த அம்மையார் மிகவும் எளிய நல்வாழ்வு வாழ்ந்து கொண்டே பக்தியும் தர்ம சிந்தனையும் படைத்திருந்தார். ஸ்ரீமதி சுந்தரம்மாள் காலமான நாளில் இப்போது மீண்டும் அவருடைய நற்குணங்களை அவரது குடும்பத்தினர் நினைவுகூர்கின்றனர்.

# கலாக்ஷேத்ரா வெள்ளி விழா

## கலை விழா

### 23-12-61 முதல் 2-1-1962 வரை

சென்னை, அடையாறு
கலாக்ஷேத்ரா தியேட்டரில்

### நிகழ்ச்சி நிரல்

| | |
|---|---|
| 23-12-61 சனி<br>மாலை 6-30 மணி | ஆண்டாள் |
| 24-12-61 ஞாயிறு<br>மாலை 6-30 மணி | கீதகோவிந்தம் |
| 25-12-61 திங்கள்<br>மாலை 6-30 மணி | காலகேய வதம்<br>— கதகளி |
| 26-12-61 செவ்வாய்<br>மாலை 6-30 மணி | சீதா சுயம்வரம் |
| 27-12-61 புதன்<br>மாலை 5-45 மணி | வெள்ளி விழா தினம் |
| 28-12-61 வியாழன்<br>மாலை 6-30 மணி | ஸ்ரீராம வனகமனம் |
| 29-12-61 வெள்ளி<br>மாலை 6-30 மணி | பாதுகாபட்டாபிஷேகம் |
| 30-12-61 சனி<br>மாலை 6-30 மணி | ஹிந்துஸ்தானி இசை |
| 31-12-61 ஞாயிறு<br>மாலை 6-30 மணி | ஆண்டாள் |
| 1-1-1962 திங்கள் மாலை 6-30 மணி | எம். டி. ராமநாதன் -பாட்டு<br>டி. என். கிருஷ்ணன் -வயலின்<br>பாலக்காடு மணி -மிருதங்கம் |
| 2-1-62 செவ்வாய்<br>மாலை 6-30 மணி | ஹிந்துஸ்தானி இசை<br>பாய் ரஜபலன பாய்<br>(புகழ் பெற்ற பஞ்சாப் தும்ரி பாடகர்) |

30-12-61 &2-1-62 நடைபெறும் ஹிந்துஸ்தானி இசைக் கச்சேரிக்குத் தினசரி பிரத்தியேகக் கட்டணம் ரூ. 3, 2, 1

### கலாக்ஷேத்ரா - கலைப் பொருட்காட்சி

அடையாறு. பெஸன்ட் அவின்யூ. தாமோதர் கார்டனில் 28-12-61 முதல் 7-1-62 வரை பொருட்காட்சி நடைபெறும். விடுமுறை நாட்களில் காலை 10 முதல் இரவு 7 மணி வரை; வேலை நாட்களில் மாலை 3 முதல் இரவு 7 மணி வரை

டிக்கட் மற்றும் இதர விவரங்களுக்கு விசாரிக்க
போன்: 72026

# பஞ்சாபில் வெற்றி முழக்கம்

எஸ்.வி.எஸ்.

**ப**ஞ்சாபில் ராஜாஜியின் சுற்றுப் பிரயாணம் வெற்றிகரமாக நிறைவேறியது. இதை ஓரளவுக்கு எதிர்பாராத வெற்றி என்றே சொல்ல வேண்டும். ராஜாஜி இதற்கு முன் இரண்டு தடவைகள் பஞ்சாபில் நீண்ட சுற்றுப் பிரயாணங்கள் செய்திருப்பதால் இம்முறையும் இத்தனை பெரிய வெற்றியாக இருக்கும் என நாம் எதிர்பார்க்கவில்லை.

அதோடு, பஞ்சாபி சூபா கிளர்ச்சியெல்லாம் ஒருவாறு ஓய்ந்திருப்பதனால் சுதந்திரக் கட்சி பஞ்சாபில் ஒடுங்கிவிட்டது என்றும் எனவே ராஜாஜியின் சுற்றுப் பயணம் இந்த முறை வெற்றிகரமாக நடைபெறாது என்றும் சிலர் சொல்லிக் கொண்டிருந்தனர். சுதந்திரக் கட்சி ஆரம்பமானது முதல், மாகாணப் பிரிவினை போன்ற அந்தந்த ராஜ்யங்களுக்கு மட்டுமே உரிய பிரச்னைகளில், கட்சி அங்கத்தினர் தத்தம் தனிப்பட்ட கருத்துப்படி நடக்க உரிமை அளித்துவந்திருக்கிறது. ஆயினும் பஞ்சாப் சுதந்திரக் கட்சித் தலைமை பீடத்தினர், அகாலிகளின் தலைவர் மாஸ்டர் தாராசிங் உண்ணாவிரதத்தால் உயிர்நீக்க நேருமோ என்பது பற்றிக் கவலை கொண்டிருந்தனர். இதைச் சிலர் தவறாகத் திரித்துக் கூறி, சுதந்திரக் கட்சியினர் பஞ்சாபி சூபா விஷயத்தில் தீவிரமாக இருக்கின்றனர் என்று துஷ்பிரசாரம் செய்தனர். ஆனால் மக்கள் இதனைச் சற்றும் நம்பவில்லை என்பது இப்போது நிரூபணமாயிற்று.

நவம்பர் 29-ம் தேதி முழுதும், ஹிந்துக்கள் பெருவாரியாக வாழும், ஹரியானா பகுதியில் தான் ராஜாஜி சுற்றுப்பிரயாணம் செய்தார். பெருத்த ஏமாற்ற மளித்திருக்க வேண்டிய இப்பகுதியினர், மிகுந்த ஆரவாரத்துடன், உற்சாகமான வரவேற்பு அளித்தனர்.

சோனிபட் என்ற சின்னஞ் சிறு ஊரில் முதல் கூட்டம் ஏற்பாடாகி யிருந்தது. சுமார் பதினாயிரம் பேர் கூடியிருந்தனர். அந்த முதல் கூட்டத்திலேயே ராஜாஜி, "சின்னஞ்சிறு விஷயங்களில் மனத்தைச் செலுத்திக் குழப்பிக் கொள்ளாதீர்கள். நமது முதல் நோக்கம் காங்கிரஸ் ஆட்சியை அப்புறப்படுத்த வேண்டியது. அதை மறந்து விடாதீர்கள். வருகிற மூன்று மாதங்களுக்கு, எல்லாச் சிறிய சண்டைகளையும் மறந்து விட்டு, இப்பணியில் மும்முரமாக முனைந்து நில்லுங்கள்" என்று சொன்னார். ராஜாஜி எதைக் குறிக்கிறார் என்பதைப் புரிந்து கொண்ட மக்கள் பலத்த கரகோஷமிட்டு அதனை வரவேற்றனர்.

அன்று பிற்பகல் பன்னிரண்டு மணிக்கு ஸமால்கா என்ற ஊரில் மாபெரும் பொதுக் கூட்டம் நடந்தது. பட்டிதொட்டி கிராமங்களிலிருந்து வந்த சுமார் இருபத்தையாயிரம் பேர் கூடி யிருந்தனர்.

"காங்கிரஸின் மாட்டுச்சின்னம், உங்களையும் மாடுகளாக்கப் பார்க்கிறது என்பதை நினைவில் கொள்ளுங்கள். சர்க்கார் அதிகாரம் என்னும் நுகத்தடிமாட்டிக் கூட்டுப்பண்ணைகளில் வேலை வாங்கப் பார்க்கின்றனர்!" என்று ராஜாஜி சொன்னதும் அந்தக் கிராம மக்கள் வருகின்ற ஆபத்தை நன்கு உணர்ந்து கொண்டனர்.

"நாடு முழுவதற்கும், விவசாயம் சமையலறை போன்றதாகும். நீங்கள் சிரமப்பட்டுச் சமைத்துப் போடும் உணவுக்கு நன்றி செலுத்திச் சர்க்கார் போனஸ் தர வேண்டியது போக நிலத்தின் மீது வரி விதிப்பது அநீதியாகும். சமையல் செய்து போடுவதற்காகத் தாயார் மீது வரி விதிக்கலாமா?" என்றார் ராஜாஜி. இதைக் கேட்ட கிராம மக்கள் முகத்தில் ஓர் அதிசயமான ஒளி படர்ந்தது.

ராஜாஜி இந்த ஐந்து நாட்களில் இருபது கூட்டங்களில் பேசியிருக்கிறார். படிண்டாவில் வக்கீல் சங்கத்திலும் பேசினார்.

இவற்றில் ஒரு சில கருத்துக்களை மட்டுமாவது விளக்கமாகக் காண்போம்.

"பண்டித ஜவாஹர்லால் நேரு என்னுடைய நண்பர். அவர் செய்யும் தவறுகளைத் திருத்தவே, சுதந்திரக் கட்சி ஏற்பட்டுள்ளது. நண்பனின் கடமை, தவறுகளைத் தைரியமாகத் திருத்த முன் வருவதே. தவறுகளைப் பார்த்துக் கொண்டு சும்மா உட்கார்ந்திருப்பவன் தான் விரோதி!" என்று ஒரு கூட்டத்தில் குறிப்பிட்டார்.

"காங்கிரஸுக்குள் உட்பூசல் மலிந்துவிட்டதைப் பார்க்க அவமானமாக இருக்கிறது. காங்கிரஸுக்குள்ளிருந்தால்தான் பணம் சம்பாதிக்க முடியுமாதலால் சண்டை போட்டுக்கொண்டாவது விடாப்பிடியாகக் கட்சியைப் பிடித்துக் கொண்டிருக்கிறார்கள். இவ்வளவு ஊழல்களைப் பார்த்துக் கொண்டும் நானாவது உயிரோடு இருக்கிறேன். இன்று காந்திஜி நம்மிடையே இருந்தால் இந்தக் கஷ்டங்களைப் பார்த்துப் பார்த்து மனம் நொந்தே மறைந்து போயிருப்பார்!" என்றார். இது மக்கள் மனத்தைத் தொட்டு விட்டது.

பண்டித ஜவாஹர்லால் நேரு சுதந்திரக் கட்சியை பாஸிஸ்ட் கட்சி என்று குறிப்பிட்டிருக்கிறார் அல்லவா? இந்த அபவாதத்துக்கும் ராஜாஜி பல கூட்டங்களில் தக்க பதில் அளித்தார்.

"நேருஜி வார்த்தைகளின் பொருளைக் கூட மறந்து விட்டார் போலிருக்கிறது. இன்று அவர்தான் பெரிய பாஸிஸ்ட். அவருடைய கட்சிதான் பெரிய பாஸிஸ்ட் கட்சி. நேருஜி மக்களின் நிலத்தைப் பறிக்கத் திட்டமிடுகிறார்; மக்களின் தொழில்களை அபகரிக்கத் திட்டமிடுகிறார். உயர்நீதி மன்றங்களின் தீர்ப்புகளுக்கு மாறாகச் சட்டமியற்றப் பார்க்கிறார். இவைதான் பாஸிஸ்ட் முறையே தவிர சுதந்திரக் கட்சிக் கொள்கைகள் பாஸிஸ அடிப்படையில் அமைந்தவையல்ல!" என்றார்.

பிரதம மந்திரி, நாட்டு முன்னேற்றத்துக்கு மாபெரும் தொழிற்கூடங்கள் தேவை என்று அலகாபாத்தில் குறிப்பிட்டிருப்பதை வாசகர்கள் அறிந்திருக்கக் கூடும்.

"இதைப்போன்ற தவறான கொள்கை கிடையாது என்பதை நிரூபிப்பதற்கு பஞ்சாப் நிரந்தரமான நல்ல உதாரணமாகும். பஞ்சாபில் பெரிய தொழிற் கூடங்கள் எதுவும் கிடையாது. இருப்பவை யெல்லாம் சின்னச் சின்ன தொழிற்கூடங்களே என்றாலும் பாரத நாட்டில் மற்ற எல்லா ராஜ்யத்தாரையும்

விட பஞ்சாப் மக்களின் சராசரி வருமானம் தான் அதிகம். இங்கு மக்கள் சந்தோஷமாக வாழ்கிறார்கள். பிரிவினையால் லட்சக்கணக்கான பேர் அகதிகளாகப் பஞ்சாபில் குடியேறியும், அகதிப் பிரச்னை கிடையாது. இப்படி அவர்கள் கஷ்டத்தைப் போக்கியது சிறு சிறு குடிசைத் தொழில்கள் தாம். பிரதமர் விரும்பும் பெரும் தொழிற்கூடங்கள் பாரத நாட்டின் மீது அன்னியக் கடன் சுமையைத்தான் ஏற்றுகின்றன! உள் நாட்டில் மக்களைக் கசக்கிப் பிழியும் நேர்முக மறைமுக வரிகள் போட வைக்கின்றன! நோட்டுச் செலாவணியைப் பெருக்கி மக்களின் அத்தியாவசியப் பண்டங்களின் விலையை ஏற்றுகின்றன!'' என்று கூறி ராஜாஜி பிரத்தியட்ச நிலைமையை வெகு அழகாக விளக்கிக் காட்டினார்.

சீக்கியர்களும், ஹிந்துக்களும் பெருவாரியாகக் கூடிய கூட்டங்களில் ''சீக்கிய மதத்துக்கும் ஹிந்து மதத்துக்கும் எவ்வித வேறுபாடுமில்லை. சீக்கியர்களும் ஹரியைத்தான் வணங்குகிறார்கள்; ஹிந்துக்களும் ஹரியையே போற்றுகிறார்கள். எனவே, ஹிந்துக்களும் சீக்கியர்களும் வேற்றுமை பாராட்டிக் கொள்வது சரியல்ல. காங்கிரஸின் பொருளாதாரக் கொள்கைகள் இரு சமுதாயத்தினரையும் நிரந்தர அடிமைகளாக்கி விடும். எனவே இரு சமுதாயத்தினருக்கும் பொது எதிரியாகவுள்ள காங்கிரஸை இருவரும் சேர்ந்து அகற்ற முதலில் முயல வேண்டும்'' என்றார் ராஜாஜி.

ராஜாஜி டிசம்பர் 2-ம் தேதி மாலை அம்ருதசரஸை அடைந்தார். அங்கு செல்வதில் அரை மணி நேரம் காலதாமதமாகி விட்டது. இருப்பினும், அகாலி சீக்கியர்களின் தலைவர் மாஸ்டர் தாராசிங் காத்திருந்து வரவேற்றது அவரது உயர்ந்த பண்பையே காட்டியது. பஞ்சாபி சுபா பிரிவினையாகும் வரை, அல்லது சாகும் வரை உபவாசமிருப்பதாக அவர் எடுத்துக் கொண்ட பிரதிக்ஞையை நிறைவேற்றாது முறித்ததால், ராஜாஜி வருவதற்கு முந்திய நாள் சீக்கிய மத நியாய மன்றத்தினர் அவருக்கு ஆலயத்தை மெழுகுதல், கடும் ஜபம் புரிதல் போன்ற தண்டனைகளை விதித்திருந்தனர். இந்நிலையில் மாஸ்டர் தாராசிங்கை ராஜாஜியே போய்ப் பார்த்திருப்பார். ஆனால் மாஸ்டர் தாராசிங் முந்திக் கொண்டது, ராஜாஜியிடம் அவருக்கு இருக்கும் அன்பையும் மதிப்பையுமே காட்டியது! அகாலிகளும் சுதந்திரக் கட்சியினரும் ஒருவர் வழியில் ஒருவர் குறுக்கிடா வண்ணம், காங்கிரஸை நேர்முகமாக எதிர்க்க வழி வகைகளை ஆலோசிக்க, பஞ்சாப் சுதந்திரக் கட்சியினரை மறுநாளே கூப்பிட்டனுப்பித் தமது செயல் திறமையையும் அவர் வெளிப்படுத்தினார்.

மூன்றும் தேதி மாலை அம்ருதசரஸின் கோல் மைதானத்தில் நடைபெற்ற பெரும் கூட்டத்தின்போது மாஸ்டர் தாராசிங் மேடையில் தோன்றி ராஜாஜியின் பேச்சை முழுதும் கேட்டார். ராஜாஜி கூறிய அவ்வளவு கருத்துக்களையும் தாம் ஒப்புக் கொள்வதாகத் தெரிவித்தார்.

பஞ்சாபில் இப்பொழுது நல்ல குளிர். பகல் பன்னிரண்டு மணிக்குக் குளிர் நடுக்குகிறது என்றால் இரவு எப்படி இருக்கும் என்பதை ஊகித்துக் கொள்ளலாம். இந்தக் குளிரைப் பொருட்படுத்தாமல், பல்லாயிரக்கணக்கான மக்கள் இரவுக் கூட்டங்களுக்கு வந்து கேட்டதைப் பாராட்டுவதா? இந்தத் தள்ளாத வயதில் கடும் குளிரையும் பொருட்படுத்தாமல் ராஜாஜி ஆயிரக் கணக்கான மைல்கள் சுற்றுப் பிரயாணம் செய்து தினமும் மூன்று, நான்கு கூட்டங்களில் கலந்து கொண்டு அறிவுரைகள் வழங்குவதைக் கண்டு வியப்பதா? அல்லது இதையெல்லாம் பார்க்கக் கொடுத்து வைத்த என் பாக்கியத்தைப் பற்றிக் கூறிக்கொள்வதா? நீங்களே சொல்லுங்கள்.

# ஆல மரத்தடி நிழலிலே...

முன்பெல்லாம் சாதாரணமாக நம்நாட்டு கிராமவாசிகள்
அன்றாட வேலை முடிந்தவுடன் ஆலமரத்தின் நிழலில்
கூடி பொழுதைக் கழிப்பது வழக்கம்.
இப்பொழுதோ அவர்கள் மத்தியில் டிரை-ஸெல்
ரேடியோ ஸெட் ஒன்று செய்தி அறிக்கைகளையும்,
அவர்களுக்குப் பிடித்தமான பாட்டுக்களையும் ஒலிபரப்பிக்
கொண்டு அவர்களை இன்பத்தில் ஆழ்த்தி வருவதை
சாதாரணமாகக் காண்கிறோம்.
இக்காலத்து கிராமவாசிகள் ரேடியோ நிகழ்ச்சிகளை
மிகத்தெளிவாகக் கேட்பதற்கு அதிக சக்தி அளிக்கக்கூடிய
எஸ்ட்ரெலா பாட்டரிகளையே உபயோகிக்க விரும்புகிறார்கள்.
நீண்ட காலம் உழைக்கக்கூடியதும், டிரை-ஸெல்
பாட்டரி உற்பத்தியில் 20 வருஷ அனுபவத்தினால்
தயாரிக்கப்பட்டதுமான எஸ்ட்ரெலா பாட்டரிகள்
வெளிநாடுகளில் உற்பத்தியாகும் சிறந்த பாட்டரிகளுக்கு
சமமானவையென்று பரிசோதனைகள்
மூலம் நிரூபிக்கப்பட்டிருக்கின்றன.
உங்கள் ரேடியோவிற்கு ஒரு எஸ்ட்ரெலா பாட்டரியை
இன்றே பொருத்துங்கள். இது உங்களுக்குத் தேவையான
எல்லா அனுகூலங்களையும் ஒருங்கே அளிக்கவல்லது.

**எஸ்ட்ரெலா**

ரேடியோ பாட்டரி

இப்பொழுது உங்கள்
ரேடியோ டீலரிடம் கிடைக்கிறது




எஸ்ட்ரெலா பாட்டரீஸ் லிமிடெட்
பம்பாய் • மதராஸ் • டெல்லி • கல்கத்தா • கான்பூர்

EB-G-6 TAM

# மகிழ்ச்சியான வைபவங்களை

*மேலும்*

# ஆனந்தமாக்குங்கள்

நல் வாழ்த்துக்கள் அல்லது மகிழ்ச்சிச் செய்திகள் அனுப்ப வேண்டுமா ? ... அவைகளை ஒரு வாழ்த்துத் தந்தி மூலம் அனுப்புங்கள்.

வாழ்த்துத் தந்திகள் விசேஷ படத்துடன் கூடிய பாரத்தில் எழுதப்பட்டு கவர்ச்சியான வர்ணக் கவரில் போட்டு விநியோகம் செய்யப்படுகின்றன.

சொந்தம் அல்லது பொதுக் காரியம் போன்ற எல்லா சந்தர்ப்பத்திற்கும் ஏற்ற பலவித வாழ்த்து வாக்கியங்கள் தயாராக உள்ளன. அவைகளிலிருந்து ஒன்றை பொறுக்கியெடுக்கலாம்.

சாதாரண வாழ்த்துத் தந்தி அனுப்புவதற்கு குறைந்தபக்ஷ கட்டணம் 50 ந. பை. பிறகு ஒவ்வொரு கூடுதல் வார்த்தைக்கும் 7 ந. பை.

## டி லக்ஸ் தந்தி வசதி

மிகவும் அன்னியோன்ய பாவத்துடன் செய்தி அனுப்ப டி. லக்ஸ் தந்தி உள்ளது.

உங்கள் விருப்பப்படி தந்தியின் வாக்கியத்தை எழுதுங்கள். விசேஷ குறிப்புகள் என்ற இடத்தில் " டி லக்ஸ் " என்று குறிப்பிடவும். தந்தி விசேஷ வாழ்த்து பாரத்தில் அனுப்பி வைக்கப்படும்.

# வாழ்த்துக்கள்

*அல்லது*

# டி லக்ஸ்

தந்திகள் என்று

*குறிப்பிடவும்*

தபால் தந்தி இலாகா

DA 60/547

# கேட்டீர்களா சேதி?

செய்தி சேகரன்

"இந்தியாவில் பல ஊர்களில் பால் பண்ணைத் திட்டங்களுக்காகவும், பால் பண்ணை ஆராய்ச்சி நிலைய வேலைகளுக்காகவும் அமெரிக்க சர்க்கார் பெரும் அளவுக்கு நிதி உதவி செய்வதாக வாக்களித்திருக்கின்றனர். இத்துடன் மண்ணுக்கு அடியில் தண்ணீர் ஆதார வசதிகளைக் கண்டு பிடிப்பது, ஏராளமான குழாய்க் கிணறுகளைத் தோண்டுவது ஆகியவைகளும் சேர்த்துக் கொள்ளப்பட்டிருக்கின்றன."

'பால் பண்ணைகளோடு குழாய்க் கிணறு திட்டங்களையும் மேற் கொள்ளுவதுதான் சிறந்த முறையாகும். பால் பண்ணையின் வேலைமுறைக்கு ஏராளமான தண்ணீர் வேண்டுமே' என்று பல்லாண்டுகள் பால் விநியோகத் துறையில் அநுபவம் பெற்ற ஒரு பால்காரர் பாராட்டுகிறார்.



ஃ ஃ ஃ

"எண்ணெய்ப் பிசுக்கு, அழுக்கு முதலிய மாசுகளை நீக்கச் சர்க்கரையிலிருந்து ஒரு பொருளை லண்டனிலிருள்ள விஞ்ஞானிகள் கண்டு பிடித்திருக்கிறார்கள். இப் பொருள், பெட்ரோலிய மூலத்திலிருந்து தயாரிக்கும் மாசு நீக்கிப் பொருளை விடச் சிறந்தது என்றும் இதை மிகவும் மலிவான விலையில் தயாரிக்க முடியும் என்றும் கூறுகிறார்கள்."

'சர்க்கரை உற்பத்தி அமோகமாகப் பெருகி விட்டது. ஏராளமாகத் தேங்கிக் கிடக்கிறது. இனி புதிய சர்க்கரை ஆலைக்கு லைசென்ஸ் வழங்கப் போவதில்லை' — என்று அறிக்கை வெளியிட்டு விட்டுத் தலையில் கை வைத்தபடி உட்கார்ந்திருக்கும் இந்தியா சர்க்காருக்கு இது மிகவும் சுவையூட்டும் செய்தியாகும். இனிமேல் உபரியாயிருக்கும் சர்க்கரையின் விற்பனையைப் பற்றிக் கவலைப்படாமல், அதை மாசு நீக்கியாக மாற்றிவிட முயலலாம். இதனால் இரண்டுவிதத்தில் லாபம் உண்டு-முதலாவது தேங்கிப் போன சர்க்கரைக்கு வழி செய்தாகி விட்டது. இரண்டாவது வெளி நாடுகளிலிருந்து மாசு நீக்கிகளை இறக்குமதி செய்வதும் குறைந்து மிச்சம் ஏற்படும். எப்படி என் யோசனை?



ஃ ஃ ஃ

"நோட்டைப்பெற்று வோட்டைக் கொடுக்கும் வாக்காளரும், நோட்டைக் கொடுத்து வோட்டைக் கேட்கும் அபேட்சகரும் முதல் நம்பர் தேசத் துரோகிகள்" என்று ஓர் அரசியல் மேடைப் பிரசங்கி கூறினார்.

கணவனின் கோட்டைப் போட்டு எவர்சில்வர் பாத்திரம் வாங்கும் மனைவியையும் கோட்டைக் கோட்டை விட்டுப் பரிதவிக்கும் கணவனையும் என்னவென்று கூறுவது?

ஃ ஃ ஃ

"திருக்கோவலூர், தோகவீசப் பெருமாள் கோவில் யானைக்குத் திடீரென்று மதம் பிடித்து விட்டது. கட்டவிழ்த்துக் கொண்டு ஓடிய யானை வெண்கலப் பாத்திரக் கடைக்குள் நுழைந்து அங்கிருந்த வெண்கலப் பாத்திரங்களை மிதித்து நாசம் செய்தது."

'வெண்கலக் கடையில் யானை புகுந்தமாதிரி' என்னும் பழமொழி இந்த யானைக்குத் தெரிந்திருக்குமோ!

ஃ ஃ ஃ

"பொது மக்களிடையே நல்லொழுக்க போதனை நடத்துவதற்காகச் சாமியார்களுக்குப் பயிற்சி அளிக்க ஒரு பள்ளிக்கூடம் ஏற்படுத்த வேண்டும் என்றும், சாமியார்கள் நல்லொழுக்கத்துடன் நடந்து கொள்கிறார்களா என்பதைக் கண்காணிக்க உபகமிட்டிகளை நியமிப்பது என்றும் சமீபத்தில் பாட்னாவில் நடந்த அகில இந்திய நல்லொழுக்க மகாநாடு தீர்மானித்தது."



நல்லொழுக்க மகாநாட்டின் இத் தீர்மானத்தை மக்கள் வரவேற்பார்கள்! ஆனால் வேலை முறைகளைப் பற்றியே ஐயம் எழும். மேற்படி உபகமிட்டிகள் ஒழுங்காக வேலை செய்கின்றனவா என்பதைக் கண்காணிக்க வேறொரு சப் கமிட்டி..... இப்படியே போய்க் கொண்டிருக்கவேண்டியதுதானே!

'நானும் ராமராவும் ஒருவருக்கு மற்றவர் வெளியில் உலவும் உயிராக இருந்தோம்' என்று நவரத்ன ராமராவ் காலமானபோது ராஜாஜி எழுதினார். இம்மாதம் 16-ந் தேதி நவரத்ன ராமராவின் முதல் சிராத்த தினம். இதையொட்டி அவரது ஆப்த நண்பரும் பிரபல கன்னட இலக்கியகர்த்தாவுமாகிய மாஸ்தி ஸ்ரீ வேங்கடேச அய்யங்கார் அவர்கள் கன்னடத்தில் எழுதிய வாழ்க்கை வரலாற்று நூலிலிருந்து சில பகுதிகளை ஹேமா ஆனந்ததீர்த்தன் தமிழாக்கி அளிக்கிறார்.

# நவரத்ன ராமராவ்

தமது அறைக்குள் சென்று திரும்பிப் பார்த்த அந்த மனிதர் கதவையடுத்திருந்த மூலையில் ஒரு பாம்பு படமெடுத்து நின்றிருப்பதைக் கண்டார். வெளியில் திரும்பிச் செல்ல வேண்டுமென்றால் பாம்புக்கு வெகு அருகில் சென்றாக வேண்டும். பேசாமல் உள்ளேயே இருக்கலாமென்றாலோ, எப்பொழுது பாம்பு மேலே விழுந்து பிடுங்கும் என்று சொல்ல முடியாது. இந்த இக்கட்டான நிலையில் அந்த மனிதர் என்ன செய்தார் தெரியுமோ? குறி பார்த்துச் சட்டென்று கைநீட்டிப் பாம்பின் படத்தைக் கெட்டியாகத் தமது பிடியில் சிக்க வைத்துக் கொண்டார். அது தலைகுனிந்து அவரைக் கடிக்க முடியாமற் போகவே அவரது கையைச் சுற்றித் தன் உடலை வளைத்துக் கொண்டது. என்ன ஆனாலும் முஷ்டியை விடுவதில்லையென்ற உறுதியுடன் அப்படியே வெளியே வந்து வேலையாளைக் கூப்பிட்டு ஓர் அரிவாள் கொண்டுவரச் சொன்னார் அவர். அவன் அரிவாளோடு வந்ததும் 'இங்கே அறு' என்று தமது முன் கையைக் காண்பித்தார். பயந்து கொண்டே அவன் பாம்பின் உடலை அறுத்தான். பாம்பின் தலை வேறு, உடல் வேறு ஆயிற்று. அரிவாள் இவரது கையின் மீதும் பட்டுக் காயம் ஆயிற்று. பிறகு தான் அவர் பிடியைத் தளர்த்திப் பாம்பின் தலையை விசிறி எறிந்தார்.

உடல் வலிமையுடன் அசாதாரணமான மன உறுதியும் பெற்றிருந்த இந்த 'அவர்' வேறு யாருமில்லை. ராஜாஜி அவர்களுடைய அத்யந்த ஸ்நேகிதர் ஸ்ரீ நவரத்ன ராமராவ் அவர்கள்தான்.

நவரத்ன ராமராவ் என்ற பெயரிலுள்ள 'நவரத்ன' என்ற பதம் இவருடைய குடும்பப் பெயர். இவரது குடும்பத்துக்கு இப்பெயர் எப்படி ஏற்பட்டதென்பதை இவர் வெகு நாட்களுக்கு முன்னர் ஒரு முறை என்னிடம் சொன்னார். இவரது குடும்பம் முதலில் ஒரு வைதிக குடும்பமாக இருந்தது. அது உத்தராதி மடத்தைச் சேர்ந்த குடும்பம். இவரது முன்னோர்களில் ஒருவர் பல சாஸ்திரங்களில் தேர்ந்த பண்டிதராக இருந்தார். அவருடைய ஓரிரு சகோதரர்களும், மற்றும் அவருடைய சகோதரர்களுடைய ஆறேழு பிள்ளைகளும் அதே போல் தேர்ந்த பண்டிதர்களாக இருந்தனர். இவர்கள் மொத்தம் ஒன்பது பேர். ஒரு நாள் அப்பெரியார் உத்தராதி மடத்து அன்றைய ஆசாரிய சுவாமிகளைத் தரிசிக்கச் சென்ற பொழுது சுவாமிகள் அவரைப் பாராட்டி, ''நீங்களும் உங்கள் குடும்பத்தில் உள்ள பண்டிதர்களும் ஒன்பது ரத்னங்களாக இருக்கிறீர்கள். நீங்கள் நமது மடத்தின் ஆஸ்தி; நமது நவரத்னம்'' என்று கூறினாராம். அன்றிலிருந்து எல்லோரும் இக் குடும்பத்தை 'நவரத்ன' என்ற அடைமொழியோடு அழைக்கத் தலைப்பட்டனர். இக் குடும்பத்தில் ஓரிருவர் இந்த மடத்தின் ஆசாரியர்களாகவும் இருந்தது உண்டு.


நவரத்ன ராமராவ்

ஸ்ரீ ராமராவ் உயர்தரப் பாடசாலையில் படித்துக் கொண்டிருந்தபொழுது ஸ்ரீ மிருத்யுஞ்ஜய அய்யர் என்பவர் ராயருடைய ஆசிரியராக இருந்தார். ஒரு நாள் ராயர் வகுப்பில் சரியாக நடந்து கொள்ளவில்லை என்று அவர் கண்டித்தார். ராமராவ் தான் தவறு செய்யவில்லை என்றார். ஆசிரியர் கோபம் கொண்டு அவரை நெருங்கினார். தகாத வார்த்தைகளால் திட்டி பெஞ்சியின் மீது ஏறி நிற்கச் சொன்னார். முடியாது என்றார் மாணவர். ஆசிரியர் அடிப்பதற்காகக் கையை ஓங்கினாராம். பையரோ அவரை அடித்தே விட்டான். (ராயர் வெகு நாட்களுக்கு முன்னர் எனக்குச் சொன்னதை நினைவுபடுத்திக் கொண்டு எழுதுகிறேன். ஏதாவது விவரங்கள் ஒன்று, அரை தவறாக இருக்கக்கூடும்.) அதன்பிறகு பள்ளிக்கு அவர் வரக் கூடாதென்று தலைமை ஆசிரியர் தடை விதித்து விட்டார்.

அந்தப் பள்ளிக்கூடத்திலிருந்து தள்ளப்பட்டு விட்டதால் படிப்பையே விட்டுவிட

முடியுமா? ராயர் அருகிலேயே இருந்த லண்டன் மிஷன் பாடசாலையில் சேர்ந்தார்.

கல்லூரியில் படித்துக் கொண்டிருந்த போது தாம் வாழ்வெடுத்ததில் பெற்ற இரு பெரும் பேறுகள் என்று அவர் கருதிய இரண்டு தொடர்புகள் ஏற்பட்டன. ஒன்று அப்பொழுது கல்லூரியில் ஆங்கிலப் பேராசிரியராக இருந்த ஸ்ரீ டேட் துரையவர்களின் நட்பு; இன்னொன்று அந்த நாட்களில் அந்தக் கல்லூரியில் பயின்றுகொண்டிருந்த ஸ்ரீ சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார் அவர்களின் சிநேகம்.

சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார் சேலம் ஜில்லாவில் ஹொசூர் தாலூக்கா தொரெஹள்ளி என்ற கிராமத்தில் பிறந்தவர். ஹொசூர் தாலூகா ஜனங்களுக்கு - ஏன், கிருஷ்ணகிரி தாலூகா ஜனங்களுக்கும் கூட - பெங்களூர் தான் பக்கத்து நகரம். இந்தப் பகுதிப் பையன்கள் மேல் படிப்புக்காகப் பெங்களூருக்கு வருவது இயற்கை. ராஜாஜி சென்டிரல் காலேஜில் மாணவரானது இந்தக் காரணத்தினால்தான். இளைஞர்கள் இரண்டு பேரும் மிகவும் கெட்டிக்காரர்கள்; இருவருமே பணக்கார வீட்டைச் சேர்ந்தவர்களல்ல. ஒருவரோடொருவர் ஒட்டி வாழ்ந்தார்கள். அவர்கள் தங்குவதற்கு ஓர் இடம் வேண்டியிருந்தது. கல்லூரியைச் சேர்ந்த சிற்றுண்டி சாப்பிடும் அறைகளில் ஒன்றைக் கல்லூரி பிரின்ஸிபால் டாக்டர் ஜுக் துரை இந்த இரு மாணவர்களின் உபயோகத்துக்குக் கொடுத்தார்.

ராயர் சிறு வயதிலிருந்தே தேகப் பயிற்சி சாலைக்குச் சென்று உடற்பயிற்சிகள் செய்தவர். நல்ல அழகர். உடற்பயிற்சியினால் தேகம் நன்கு கட்டுமஸ்தாக வளர்ந்து உரம் பெற்றிருந்தது. இவர் கல்லூரியின் உடல் வள இலாகாவுக்குப் புகழ் அளிக்கக் கூடியவராக விளங்கினார். ஆசிரியர் டேட் துரையும் மாணவர் ராமராவும் விடுமுறை நாட்களில் ஜோடியாக மைல் கணக்கில் நடந்து செல்வார்கள். ஹெப்பாள் போன்ற ஏரிகளில் நீந்தித் திளைப்பார்கள்.

கல்லூரிப் படிப்பின் கடைசி நாட்களில் ராயர் தமது ஆசிரியருக்குச் சிஷ்யன் என்பதைவிட நண்பன் என்ற முறையிலேயே அதிகமாகப் பழக்கமாகி விட்டார். இதனால் இவர்கள் இருவரும் ஒரே கருத்துக் கொண்டிருந்தவர்கள் என்று பொருள் அல்ல. ஒரு சமயம் வகுப்பில் ஒரு மாணவனுக்குச் சொறி வந்து விட்டது. அப்பொழுது துரை, ''இந்தியர்களான நீங்கள் அசுத்தமான பிரகிருதிகள்'' என்றாராம். அந்தப் பேச்சுக்கு ஆளான மாணவன் ஏதும் பதிலளிக்கவில்லை. அருகில் நின்றிருந்த ராயருக்கு இது அவமானமாக இருந்தது. அவர் உடனே, ''ஏன் உங்கள் ஜனங்கள் சொறியில் அவஸ்தைப்படுவதே கிடையாதோ?'' என்று கேட்டார். ''கிடையாது'' என்று பதில் வந்தது. ''அப்படியானால் ஸ்காட்ச் பிடில் என்று என்னவோ சொல்கிறார்களே, அது என்ன?'' என்று மறுபடியும் கேட்டார் ராமராவ்.

ஸ்காட்ச் பிடில் என்பது ஆங்கிலத்தில் சொறி, சிரங்கு இவைகளைக் குறிக்கும். டேட் துரை ஸ்காட்லாந்து நாட்டிலிருந்து வந்தவர்.

மாணவனின் இந்தக் கேள்வியால் துரை ஒரு கணம் வாயடைத்து நின்றுவிட்டார். கோபம் மூண்டது அவருக்கு. ஒரு கணம்தான். அடுத்தகணம் சிரித்து விட்டார். ''ஒழிந்து தொலை; நான் ஏதும் கெடுதல் செய்யுமுன் போய்ச் சேர்'' என்று நகைத்துக் கொண்டே சொன்னார்.

கல்லூரியில் படித்துக் கொண்டிருந்த பொழுதே ராமராவ் அவர்களின் விவாகம் நடந்து விட்டது. இவர் மனைவி இவரது தாய் மாமன் ஸ்ரீ ஆனந்த தீர்த்த ராவ் அவர்களின் புதல்வி காசிஜபாய்.

கல்லூரிப் படிப்பின் கடைசி வருடத்தில் என்று நினைக்கிறேன், ராயருக்கு சாந்தி கல்யாணம் நடந்தது. வேறு வழியில்லாமல் அவர் மனைவியுடன் தந்தையின் வீட்டுக்கு வர வேண்டியதாயிற்று. அவரது சிற்றன்னைக்கு இது விருப்பமில்லை. பத்து நாட்களுக்குள்ளாக இளம் தம்பதிகள் வீட்டை விட்டு வெளியேற வேண்டியதாயிற்று. ராமராவ் மனைவியை, அவளது பிறந்தகத்தில் கொண்டுவிட விரும்பவில்லை. மல்லேசுவரத்தில் ஒரு சிறு வீடு பார்த்துக் கொண்டார். குடியேறினார். ஆனால் குடும்பம் நடப்பது எப்படி? டேட் துரைக்கு விஷயம் தெரிந்தது. அவர் ராமராவுக்குப் பொருள் உதவி செய்ய விரும்பினார். ராமராவ், ''நான் தர்மமாகப் பணத்தைப் பெற்றுக்கொள்ள விரும்பவில்லை'' என்றார். துரை, ''சரியான பேச்சு. நீ எனக்குக் கன்னடம் சொல்லிக் கொடு. நான் உனக்குச் சம்பளம் கொடுக்கிறேன்'' என்றார்; மாணவன் ஆசிரியனிடம் மாதம் முப்பது ரூபாய் சம்பளம் பெற்றுக்கொண்டான்.

பி. ஏ. பரீட்சை முடிந்த பிறகு ராமராவ் பி. எல். பரீட்சை படிக்கச் சென்னைக்குச் சென்றார். நண்பர் ராஜகோபாலாச்சாரியார் அப்பொழுது ஒரு வருடச் சட்டப் படிப்பை முடித்திருந்தார்.

சென்னையில் படிப்பது அந்த நாட்களில் இந்த நாட்களைப் போல் அவ்வளவு செலவு ஏற்படக் கூடிய விஷயம் அல்ல. ஆனால் அந்தச் சொற்பத் தொகை கூட ராயருக்குக் கிடைப்பது கஷ்டமாக இருந்தது.

அந்த நாட்களில் அவருக்குக் கல்லூரியில் ஸ்ரீ டி. விஜயராகவாச்சாரியார், ஸ்ரீ வி. டி. கிருஷ்ணமாச்சாரியார், ஸ்ரீ பி. கிருஷ்ணமாச்சாரியார் ஆகியோர் நண்பர்களானார்கள். ஆனால் அவர்களது நட்பு அவருக்கும் ராஜாஜிக்கும் ஏற்பட்ட நட்பைப் போல் அவ்வளவு நெருக்கமானதல்ல.

நட்பைச் சம்பாதித்துக் கொண்டு கடைசி வரையிலும் அதைக் காப்பாற்றிக் கொள்வது ஒரு சிறப்பான குணம். ஸ்ரீ ராமராவிடம் இந்தக் குணம் நிறைந்திருந்தது. பெரிய மனிதர்கள், பணக்காரர்கள் போன்றவர்களிடம் மட்டும் அல்லாமல் ஏழைகள், குறைந்த அந்தஸ்திலுள்ளவர்களுடனும் ராயர் நட்புடன் பழகினார். இதற்கு ஓர் உதாரணம்: சென்னையில் இவர் கஷ்டப்பட்டு வந்த நாட்களில் இவரோடு விசுவாசத்துடன் பழகிய ஒரு ஹோட்டல் சொந்தக்காரர். இவர் தேவராய சமுத்திரத்தைச் சேர்ந்த ஒரு ஸ்மார்த்த பிராமணர். ராயர் மைசூரைச் சேர்ந்தவர் என்ற காரணத்தால்

போதும். அவர் இவரிடம் மிகவும் பிரியத்துடன் நடந்து கொண்டார். அவரைப் பற்றி ராயர் வேடிக்கையாக ஒரு கதை கூறுவதுண்டு. அவர் ஒருநாள் ராயரையும் அவரது நண்பர்களையும் தமது வீட்டுக்குச் சாப்பாட்டுக்கு அழைத்தாராம். இவர்கள் அழைப்பை ஏற்றுக் கொண்டு, ''விருந்துக்கு என்ன காரணம் இப்போது?'' என்று கேட்டார்கள். அவர் சுற்று முற்றும் பார்த்துவிட்டுத் தலையைக் கவிழ்த்துக்கொண்டு சிறிது வெட்கத்துடன், ''என் மனைவி கொஞ்சம் கர்ப்பமாக இருக்கிறாள்!'' என்றார். தாம் ஏழையானதால் மனைவி கர்ப்பமாக இருப்பதும் கொஞ்சமாகத்தான் இருக்க வேண்டும் என்று நினைத்தார் போலும்! எல்லாரும் சிரித்தார்கள்.

ராயர் அவரை அடிக்கடி நினைத்துக்கொள்வதுண்டு. ஒரு சமயம் கன்னடத்தில் கதை எழுதச் சொல்லி நான் அவரைக் கட்டாயப்படுத்தினேன். அப்போது, அவர் ''நீங்கள் பால்ஸாக் எழுதிய Atheist's Mass (நாஸ்திகனின் தொழுகை) கதை படித்திருக்கிறீர்களா?'' என்று கேட்டார். ''படித்திருக்கிறேன்'' என்று சொன்னேன். ராயர், ''அந்த நாஸ்திகன் தனக்கு உபகாரம் செய்த ஏழைக்காக மாதாகோயிலில் பிரார்த்தனை செய்வித்தது போல, கடவுளிடம் நம்பிக்கையில்லாத நம்மவர்களில் ஒருவன் தனக்கு உதவி செய்த ஒரு ஹோட்டல்காரரின் பெயரில் அர்ச்சனை செய்வித்ததாக எழுதட்டுமா?'' என்று கேட்டார். ''அவசியம் எழுதுங்கள். ஏன் எழுதக் கூடாது?'' என்றேன். ராயர், ''மதுரையில் நான் ஒரு ஹோட்டல்காரரை அறிவேன். அவர்தான் இந்தக் கதையின் கதாநாயகன்'' என்றார்.

அதே நாட்களில்தான் இருக்க வேண்டும்; அந்தத் தேவராய சமுத்திரக்காரரின் ஹோட்டலிலேயே நடந்திருக்கலாம். ஒருவர் எவ்வளவு வடைகள் சாப்பிட முடியும் என்ற விவாதம் நண்பர்களிடையே எழுந்தது. ராயர் தாம் நாற்பது வடைகள் தின்ன முடியும் என்று பந்தயம் கட்டினார். பந்தயப்படி நாற்பது வடை தின்றும் காட்டி, வெற்றி பெற்றார்.

சட்டப் பரீட்சையில் தேறினார் ராயர். ஏற்கனவே பரீட்சை தேறிச் சேலத்தில் வக்கீல் தொழில் நடத்திக் கொண்டிருந்த சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியாருடன் தாமும் இருக்க வேண்டுமென்ற விருப்பத்தால், தாமும் சேலத்திலேயே வக்கீல் தொழிலை ஆரம்பித்தார். வக்கீல் தொழிலில் அவர் கால் ஊன்றுவதற்கு முன்னரே அவரது தந்தை பாலகிருஷ்ண ராவ் மைசூரில் அப்பொழுது திவானாக இருந்த ஸ்ரீ பி. என். கிருஷ்ணமூர்த்தியவர்களிடம் பேசி மகனுக்கு ஒரு புரொபேஷனர் வேலை கிடைக்க ஏற்பாடு செய்தார்.

புரொபேஷனராக இருந்து, பிறகு அமல்தார் ஆகி எடதொரே, திருமகூடலு, நரசிபுர முதலிய தாலூக்காக்களில் திறமையுடன் வேலை பார்த்து, பஹதூர் அமல்தார் என்ற புகழைப் பெற்றார் நவரத்தின ராமராவ்.

1912ல் ஆக்டிங் அஸிஸ்டெண்ட் கமிஷனர் உத்தியோக உயர்வு பெற்றுச் ஷிமொக்கா சப்டிவிஷனுக்குச் சென்றார் ராமராவ். இப்பொழுது அவர் நான்கு பெண் குழந்தைகளுக்குத் தகப்பனாராகி விட்டிருந்தார்.

ஷிமொக்காவிலிருந்த பொழுது தான் இவரது மனைவியார் காசீஜ பாய் காலமானது. சில காலத்துக்குப் பிறகு அவர் இரண்டாவது விவாகம் செய்து கொண்டார். ராயரின் இரண்டாவது மனைவி பாதாமி குடும்பத்தைச் சேர்ந்த பெண். ராயரின் இரண்டாவது மனைவி வெகு காலம் இல்லற இன்பத்தை அநுபவிக்கவில்லை. மூன்று ஆண் மக்களைப் பெற்று விட்டு 1918-ல் காலமானார்.

அப்பொழுது நான் இங்கிலீஷ் லோயர் செகண்டரி பரீட்சைக்குப் படித்துக் கொண்டிருந்த சிறுவன். கிருஷ்ணராஜபேட்டையில் போலீஸ் ஜமேதாராக இருந்த எங்கள் தாய்மாமன் ஸ்ரீ வெங்கட்ராமய்யங்கார் அவர்கள் வீட்டில் தங்கி விருந்தேன். அச் சமயம் ராமராவ் அந்த ஊருக்குத் தாலூகா அமல்தாராக வந்தார். பையன்களான எங்களுக்கு அமல்தார்கள் வருவதைப் பற்றியோ, போவதைப் பற்றியோ அக்கறை கிடையாது. ஆனால் ராமராவ் சாதாரணமாக எல்லா அமல்தாரர்களையும் போல் வரவில்லை. ஊரில் எல்லோரும் பேசிக் கொண்டார்கள்: 'புது அமல்தார் ரொம்பவும் ஆடம்பர மனுஷ்யன்; இரண்டு குதிரைகளோடு வருகிறாராம்; பெரிய குதிரைகள்' என்று. அவர் ஊருக்கு வந்த சில தினங்களுக்குள்ளாகவே பரபரப்பான ஒரு செய்தி பரவியது. படகில் உட்கார்ந்து கொண்டு ஏரியில் பவனி வர வேண்டும் என்று அவர் சொல்கிறார் என்பதுதான் அது!

ராயர் செக்ரிடேரியட்டில் காரியதரிசியாகப் பதவி ஏற்றார். பட்டு இலாகாவைத் திறமையுடன் நடத்தி அந்தக் கைத்தொழிலுக்கு வாழ்வளித்துப் பெரும் புகழ் பெற்றார். சர்க்கார் காரியதரிசியாக மிகவும் திறமையுடன் உத்தியோகம் பார்த்து நல்ல பெயர் எடுத்தார். திவான் மிர்ஸா அவர்கள் இந்திய சர்க்காருக்கு ஏதாவது காரமான வாசகத்தில் முக்கியமான கடிதங்கள் எழுத வேண்டியிருந்தால் அந்த வேலையை ராயரிடம் ஒப்படைப்பார்! 1931-ல் மிர்ஸா அவர்கள் லண்டனுக்கு வட்டமேஜை மகாநாட்டுக்குச் சென்ற போது ராமராவையும் தம்முடன் உதவிக்காக அழைத்துச் சென்றார். அங்கிருந்து திரும்பி வந்த சில நாட்களுக்கெல்லாம் ராயர் கைத்தொழில் இலாகாவின் டைரக்டரானார். அந்த வேலையைச் சில ஆண்டுகள் திறம்பட வகித்து 1934-ல் சர்க்கார் வேலையிலிருந்து ஓய்வு பெற்றுக் கொண்டார் ஸ்ரீ நவரத்ன ராமராவ். பிரதிநிதிகள் சபையில் ஓர் அங்கத்தினராகவும் ராயர் பணி புரிந்துள்ளார். பரந்த அனுபவம், வாக்குவன்மை, சாமர்த்தியமாகப் பதிலளிப்பது, விஷயத்தை விளங்க வைப்பதிலுள்ள ஆற்றல் இவைகளினால் ராயருக்குச் சட்டசபைத் துறையில் உயர்ந்த மதிப்பு கிட்டியது:

சர்க்கார் உத்தியோகத்திலிருந்து விலகிய பிறகும் ராமராவ் பல துறைகளில் சமஸ்தானத்திற்குச் சேவை செய்துள்ளார்.

ராயர் பட்டு இலாகா சூபரின்டென்டாக இருந்தபொழுது அந்த ஹோதாவில் மைசூரில் பட்டு நூல் ஆலையின் தலைவ

guard against

# athlete's foot

FORBINA dusted on the feet regularly offers effective protection against Athlethe's foot and similar skin infections.

CIBA

# Forbina

**ANTISEPTIC POWDER**

ராக இருந்தார். அப்போது அங்கே ஒரு வாளிப்பான யுவதி வேலைக்கு வந்து கொண்டிருந்தாள். அவள் விவாகமாகாதவள். பல வருடங்களுக்கு முன்னரே தமது இரண்டாவது மனைவியை இழந்து விட்டுத் தனி வாழ்க்கையை நடத்தி வந்த ராயருக்கு யுவதியின் பேரில் பற்று ஏற்பட்டது. ராயரின் தோற்றம், சுபாவம் இவை பெண்களை வசீகரிக்கக் கூடியவை. எனவே அவளும் அவரை விரும்பினாள். அந்த யுவதி ராயரின் வகுப்பைச் சேர்ந்தவளல்ல, எனினும் இருவரும் சதிபதிகளாக வாழத் தொடங்கினர்.

சில வருடங்களுக்குப் பிறகு ராமராவ் இந்த விவாகத்தைப் பதிவு செய்து கொண்டார்.

தமது மூன்றாவது மனைவி புட்டம்மா, இரண்டு பையன்கள், இரண்டு பெண்கள் இவர்களோடு இறுதிவரை ஆனந்தமாக சம்சாரம் நடத்தினார் ராயர்.

நானும் ராயரும் சந்தித்த போதெல்லாம் அவர் தமது உத்தியோக வாழ்க்கையைப் பற்றிப் பலப்பல சம்பவங்களைச் சொல்லியுள்ளார். இந்த அநுபவங்களையெல்லாம் எழுதிக் கொடுங்கள் என்று நான் அவரை அடிக்கடி வற்புறுத்தி வந்தேன். கடைசியாக ராயர் அவ்வாறு செய்ய ஒப்புக் கொண்டு 'ஜீவன' என்ற பத்திரிகையில் தொடர்ச்சியாக எழுதி வந்தார். வாசகர்கள் அந்தக் கட்டுரைகளைப் பெரிதும் ரசித்தார்கள். ''சில நினைவுகள்'' என்ற பெயரில் அவை ஜீவன சாகித்திய மாலையில் நூல் வடிவில் பிரசுரிக்கப்பட்டன. அடுத்த வருடம் இந்த நூலுக்குத் தேவராஜ பகதூர் பரிசு வழங்கப்பட்டது. நூலை எழுத நான் தூண்டுதலாக இருந்த காரணத்தால் ராயர், ''இந்தப் பணம் உங்களுக்குச் சேர வேண்டிய தல்லவா?'' என்று என்னைக் கேட்டார். ''அந்தப் பரிசு எழுத்தாளருக்கென்று தரப்பட்டது. ஆகவே அது தங்களுக்குத்தான் சேரவேண்டும்'' என்று நான் சொன்ன பிறகுதான் அதை ஏற்றுக் கொண்டார்.

என்னுடைய இரண்டாவது கதைத் தொகுதி பிரசுரமானபோது ராயர் ''தவிர்க்காரி'' என்ற கதையை மிகவும் பாராட்டினார். இந்தக் கன்னடக் கதையை ராமராவ் மொழி பெயர்த்து பேட் துரைக்கு அனுப்பிவைத்தார். அவர் அதைப் படித்துப் பார்த்து விட்டுப் பாராட்டிக் கடிதம் எழுதினார். ராயரின் இந்த மொழிபெயர்ப்பு பிறகு 'திரிவேணி' என்கிற ஆங்கிலப் பத்திரிகையில் வெளியாயிற்று. அதைப் படித்த ஸ்ரீ ராஜகோபாலாச்சாரியார் மூலக் கதை என்னுடையது, மொழி பெயர்ப்பு ராமராவுடையது என்று அறிந்து மிகவும் மகிழ்ச்சியடைந்தார். தாமே அதைத் தமிழில் மொழி பெயர்க்கவும் செய்தார். இவ்வாறு கன்னடத்துக்கு நான் செய்த சேவை பெரியார்களின் அநுக்கிரகம் பெறுவதற்கு ராயர் காரணமாக இருந்தார்.

ஒருமுறை ராமராவ் தாம் சேர்மனாகவும் இருந்த ஒரு கம்பெனியின் ஆரம்ப விழாவுக்கு ராஜாஜி அவர்களை அழைத்திருந்தார். நிகழ்ச்சிகள் எல்லாம் முடிவடைந்த பிறகு சிற்றுண்டி அருந்துவதற்காக எல்லோரும் உட்கார்ந்திருந்தபொழுது ராயர் சில உபசார வார்த்தைகள் சொல்லுவதற்காக எழுந்து நின்றார். நான்கு வார்த்தைகள் பேசியவர் பிறகு ஏதும் சொல்லாமல் அப்படியே நின்று கொண்டிருந்தார். ஏன் என்று யாருக்கும் புரியவில்லை. சில நிமிஷங்கள் சென்றன. பக்கத்திலிருந்தவர்கள் ஏதோ ஆபத்து என நினைத்து ராயரைப் பிடித்து மெதுவாக ஆசனத்தில் உட்கார வைத்தார்கள். கார் வரவழைத்து அவரை வீட்டுக்கு அனுப்பி வைத்தார்கள். வீட்டையடைந்து சில நிமிடங்களுக்குப் பிறகு, ராயருக்குப் பிரக்ஞை வந்தது. ''மரணம் என்பது அப்படித்தான் இருக்குமென எண்ணுகிறேன்!'' என்றார் அவர்.

மூன்று வருடங்களுக்கு முன்னால் ஒரு நாள் ராமராவுக்கு இருதய நோய் கண்டது. அன்றைக்கே அவரை ஆஸ்பத்திரியில் சேர்க்க வேண்டியதாயிற்று. பத்து நாட்கள் சிகிச்சைக்குப் பின்னர், தற்போதைக்குப் பயமில்லை என்ற நம்பிக்கையுடன் அவர் வீடு திரும்பினார். ஆனால் வியாதி ஆபத்தானது. எனவே அவர் அதிகமாக நடக்கக் கூடாது; படிகள் ஏறக் கூடாது; அதிகம் பேசக்கூடாது; தேக சிரமம் எடுத்துச் செய்ய வேண்டிய எல்லா வேலைகளிலும் ஓர் அளவுடன் அமைதியுடன் நடந்து கொள்ள வேண்டும் என்றெல்லாம் கட்டுப்பாடு செய்தார்கள். அதுவரை ராயர் வாழ்ந்த முறைக்கு இத்தகைய வாழ்க்கையில் எப்படி ருசி ஏற்படும்?

சிறிது காலத்துக்குப் பிறகு ராயருக்கு சுவாசத்தில் சிரமம் கண்டது. டாக்டர் பரிசித்துப் பார்த்ததில் சுவாச கோசத்தில் நீர் சேர்ந்திருப்பதாகத் தெரிய வந்தது. நீரை அகற்றும் ஒவ்வொரு முறையும் ராயரின் சக்தி குறைந்து கொண்டு வந்தது. இரண்டு வருடங்களுக்குள்ளாக ஆறு முறை இவ்வாறு செய்ய நேர்ந்ததால் ராயர் மிகவும் பலவீனமடைந்துவிட்டார்.

கடைசி நாட்களில் இவர் ஞாபக சக்தியை இழந்து விட்டார். சிறிது அதிகமாகவே ஆம்லஜனகம் கொடுத்து வைத்தியர் பிரக்ஞை இருக்கும்படி செய்தார். கடைசியில் ஓரிரண்டு நாட்கள் ராஜாஜியவர்கள் வந்து வந்து பார்த்து விட்டுப் போனார். 'அப்படி ஒன்றும் பயமில்லை' என்று அவர் கூறிப் பதினைந்தாவது நாள் காலை ராயர் உடலை விட்டுச் சென்றார்.

ராம ராவ் பலமுறை, ''வாழ்க்கை விளையாட்டில் என் பங்கை ஆடி 'இன்னிங்ஸ்' எடுத்தாயிற்று. எந்த நிமிடமும் 'அவுட்' ஆக நான் தயார்!'' என்று கூறுவார். அவருடைய வாழ்க்கை விளையாட்டு சாதாரணமானதல்ல. வாழ்ந்தவனுக்கு வெற்றியையும் பார்த்தவனுக்கு உற்சாகத்தையும் காட்டிய 'இன்னிங்ஸ்' அது.

ராம ராவ் சிறு வயதிலிருந்தே உடலை ஒரு கட்டுப்பாட்டோடு பாதுகாத்து வந்தவர். கடைசி நாட்கள் வரையில் ஒரு நாளைக்குப் பத்து தண்டால் எடுப்பார். நான்கு முறை கர்லாக்கட்டை சுற்றுவார். இளைஞராக இருந்தபோது இவர் பல துணிச்சலான காரியங்களைச் செய்ததுண்டு. துப்பாக்கி பிடித்துக் காடுகளில் வேட்டையாடியிருக்கிறார். ஹிரோடேயில் சப்-டிவிஷன் ஆபீஸராக

இருந்தபொழுது ஒரு நாள் அவர் கோர்ட்டில் அமர்ந்து ஒரு வழக்கை விசாரணை செய்து கொண்டிருந்தார். அப்போது யாரோ ஓடி வந்து மலையடிவாரத்தில் சிறுத்தை ஒன்று மாட்டை அடித்து விட்டதாக அவரிடம் சொன்னார்கள். விசாரணையை அப்படியே நிறுத்தி விட்டு ராயர் போலீஸ் ஸ்டேஷனிலிருந்து துப்பாக்கியை வாங்கிக் கொண்டு தமது வண்டியில் ஏறிச் சென்று சிறுத்தையைக் கொன்றுவிட்டு வந்தாராம்.

ராமராவ் திடகாத்திரராக இருந்ததுடன் அசாதாரணமான அறிவுத் திறனும் பெற்றிருந்தார். கன்னடம் வருவதில்லை என்று வாய் வார்த்தையாகச் சொல்லிக் கொண்டிருந்த போதிலும் ராயர் அந்த மொழியில் நல்ல புலமை பெற்றிருந்தார். எழுதும் வழக்கத்தை ஏற்படுத்திக் கொள்ளவில்லை; அவ்வளவுதான். ராயர் சமஸ்கிருதமும் பயின்றிருந்தார். பிரெஞ்சு பாஷையும் அவருக்குத் தெரியும். சாமான்யமாக ஒரு பண்டிதர் கூடப் பெற்றிருக்க முடியாத அளவுக்கு அவர் அநேக விஷயங்களில் ஆழ்ந்த அறிவைச் சம்பாதித்துக் கொண்டிருந்தார்.

ராம ராவின் ஞாபகசக்தி அதிசயமானது. பல நூல்களிலிருந்து அவர் பல வரிகளை - கவிதை, வசனம் இரண்டிலும்-மனப்பாடமாக ஒப்புவிப்பார். படித்தது மட்டுமல்ல; பார்த்த விஷயங்களும் அவருக்கு நன்றாக ஞாபகமிருக்கும். ஒரு முறை ஓர் இடத்தில் இருக்கும் பொழுது சுற்றுமுற்றும் உள்ள சுவர், கதவு, படங்கள் முதலியவைகளைப் பார்த்துவிட்டால் பிறகு வெகு நாட்கள் தான் அங்கே கண்டவை என்னென்ன என்று விவரமாகச் சொல்லுவார். இது எப்படி சாத்தியமாகிறது என்று கேட்டால் ''அன்று பார்த்த அந்த இடம், அந்தச் சுவர், அந்தப் படம் எல்லாம் மீண்டும் என் எதிரில் வந்து நின்றுவிடுகின்றன. ஓரிடத்தில் உண்மையாகவே இருக்கும்பொழுது எப்படி ஒவ்வொன்றையும் பார்த்துப் பார்த்துச் சொல்ல முடியுமோ அப்படியே கண் முன் நிற்கிற இந்தக் காட்சியைக் கண்டதும் ஒவ்வொன்றையும் சொல்ல முடிகிறது'' என்பார். அதாவது. அவருடைய நினைவில் நிற்பது தனித்தனிப் பொருள்கள் அல்ல ; ஒரு காட்சி அல்லது சூழ்நிலை முழுவதுமேதான்.

சாதாரணக் கண்களுக்குப் புலப்படாத சூட்சும தத்துவங்கள் சிலவற்றைக் கண்டு கொள்ளும் சக்தியும் ராயருக்கு இருந்ததென்னும் சில நிகழ்ச்சிகளிலிருந்து தெரிகிறது.

ராயரை அறிந்தவர்களுக்கு அவரது உரையாடலின் ருசி நிலையாக நினைவிருக்கும். சாதுரியமாகப் பேச ஒரு சந்தர்ப்பம் கிடைக்கும்பொழுது அப்படிப் பேசுவதனால் ஏற்படக்கூடிய விளைவுகளைப் பற்றி ராமராவ் எண்ணிப் பார்க்கவே மாட்டார். சுய மரியாதை இருந்தது; அதோடு துடுக்குத்தனமும் இருந்தது. தமது வாக்குத் திறமையைக் காட்டவேண்டுமென்ற ஆசை வேறு. எவ்வளவு வேண்டியவர்களாக இருந்தாலும், விவாதத்தின்போது இவர் கடுமையான சொற்களை உபயோகித்து விடுவார். இது போன்ற தீவிரமான சுபாவம் இல்லாதவர்களுக்கு இவரது இந்தக் குணம் முரட்டுத்தனமாகவும் அகம்பாவமாகவும் தோன்றியதும் உண்டு. ராயரின் இந்த வாக்கு சாதுரியம் பிரதிநிதி சபை, சட்டசபை நடவடிக்கைகளில் விசேஷமாக வெளியாயிற்று.

கோழி வளர்ப்பைப் பற்றித் தெரிந்து கொள்வதற்காகச் சில அதிகாரிகள் நியமிக்கப்பட்டனர். அவர்களில் சிலர் பிராமணர்கள். அங்கத்தினரொருவர், ''இதென்ன சுவாமி, கோழி வளர்ப்பு வேலையைக் கற்றுக் கொள்ள இந்தச் சாதியாரை அனுப்பியிருக்கிறீர்களே?'' என்று கேட்டார். அதற்கு ராயரின் பதில்: ''இவர்களின் மேற்பார்வையில் இருக்கும் கோழிகளும் முட்டைகளும் பத்திரமாக இருக்கும். அவர்கள் வீட்டுச் சமையலறைக்குப் போய்விடாது!''

வைத்தியக் கல்லூரியை மைசூரில் ஸ்தாபிக்க வேண்டுமென்று சர்க்கார் முடிவு செய்த போது அங்கத்தினர்கள், ''மைசூரில் மருத்துவத்துக்கு வேண்டிய மூலப் பொருள்கள் இல்லை'' என்றார்கள். ''ஏன் இல்லை? இங்கு தான் நோயாளிகள் வேண்டிய அளவுக்கு இருக்கிறார்களே! நோயாளிகள் எல்லோருமே மருத்துவ மூலப் பொருள்கள்தாமே!'' என்று பதிலளித்தார் ராம ராவ்.

ராயரின் கையில் என்றுமே பணம் தங்கியது கிடையாது. பணம் வந்து கொண்டிருக்க வேண்டும்; செலவழிந்து கொண்டிருக்க வேண்டும். ஆதரவற்ற ஜனங்கள் வந்து கேட்கும்பொழுது ராயர் தமது கையில் பணம் இருந்தால் அவர்களை வெறும் கையோடு அனுப்பவே மாட்டார். அப்படி அனுப்பினால் அதற்கு ஏதாவது காரணம் இருக்கும்.

தமது உறவு சுற்றம் யாவருடனுமே பாசம் கொண்டவர் ராயர். நோய்வாய்ப்பட்டிருந்த நாட்களில் ராயரின் அன்பு இன்னும் அதிகரித்ததாகத் தோன்றுகிறது. பிரக்ஞை தவறியபிறகு ஒரு நாள் நான் போயிருந்த போது திடீரென்று கண் திறந்து பார்த்து என்னை அடையாளம் கண்டு கொண்டார். மகிழ்ச்சியோடு முறுவலித்தார். என்னைத் தொட விரும்புபவர் போலக் கையை நீட்டினார். நான் முகத்தை அவர் அருகில் கொண்டு சென்றேன். ஒரு குழந்தையின் கன்னத்தைத் தடவுவதைப் போல் என் கன்னத்தை மூன்று தடவைகள் வருடினார். பிறகு தமக்கு ஆயாசமாக இருப்பதாகச் சொல்லி ''அது போதும்'' என்றார்.

அவரைப் பார்ப்பதற்காக ராஜாஜி வந்த பொழுது அவரது சந்தோஷத்துக்கு ஓர் எல்லையே இல்லை. பல முறைகளில் ராம ராவ் ராஜாஜியைக் குறித்து, ''நான் அறிந்தவர்களில் தலைசிறந்தவர் அவரே'' என்பார். இப் பெரியார் தமது நண்பராக இருப்பது தம் பாக்கியம் என்று அவர் கருதினார். ராஜாஜி வந்து அருகில் உட்கார்ந்த பொழுது தமது வேதனைகளையெல்லாம் மறந்து, ''நீங்கள் மருந்து கொடுங்கள்'' என்றார். ராயர் ஏதும் ஆகாரமே எடுத்துக் கொள்ளவில்லை என்று வீட்டிலுள்ளவர்கள் சொன்னதும், ராஜாஜி ராயரிடம், ''கொஞ்சம் ஆகாரம் எடுத்துக் கொள்ளுங்கள்'' என்றார். ராயர், ''எனக்கு வேண்டியிருக்கவில்லை. இருந்தாலும் நீங்கள் கொடுங்கள். எடுத்துக் கொள்

இறேன்'' என்றார். வீட்டிலுள்ளவர்கள் கொண்டுவந்த காப்பியை ராஜாஜி அவருக்குக் குடிக்கக் கொடுத்தபோது, ''நீங்கள் கொஞ்சம் குடித்துவிட்டுப் பாக்கியை என் வாயில் ஊற்றுங்கள்'' என்றார். அந்தக் காப்பி நண்பரின் உதடுகளில் பட்டது என்ற காரணத்தால் அது அவருக்கு வேண்டியிருந்தது.

ராயர் இளமையில் சங்கீதம் கற்றுக் கொள்ள ஆரம்பித்தார். ஆனால் சிட்சை தொடர்ந்து நடைபெறவில்லை. இருந்தாலும் அவருக்குச் சங்கீதக் கலையில் நல்ல ஞானம் இருந்தது. புல்லாங்குழலிலோ வாய்ப்பாட்டிலோ ஒரு ஸ்வரம் ஆனந்தத்தின் எல்லையைத் தொடும்பொழுது ராம ராவ் பரவசமாகி விடுவார். இந்த அநுபவத்தின் முக்கிய சாரம் பாட்டின் நயத்தோடு அதன் பாவம் அவரது உள்ளத்தில் பாய்ந்ததுதான்.

ராயர் நோய்ப் படுக்கையிலிருந்த சமயம் ஒரு முறை ராஜாஜி பெங்களூருக்கு வந்த பொழுது ஸ்ரீ சதாசிவம் தம்பதியரும் அவருடன் வந்தார்கள். அப்போது ஸ்ரீமதி எம்.எஸ்.சுப்புலக்ஷ்மி அவர்கள் ராயர் வீட்டில் அவரது உறவினர்களும் நண்பர்களும் கூடிய சிறு சபையில் பாடினார். ராயரின் வீடு சங்கீதத்தின் இனிமையால் நிறைந்தது. ராம பஜனை மகிமையைக் கூறும் பாடலில், கிளி ஒன்றை வளர்த்து அதற்குப் பேசக் கற்றுக் கொடுத்து, அது 'ராமா, ராமா' என்று கொஞ்சு மொழியில் கூப்பிடுவதை வர்ணிக்கும் கட்டம் வந்த போது எம். எஸ். அவர்கள் தம்மை மறந்து பாடினார். அதேபோல் ராயரும் ஆஹாகாரம் செய்தபடி பரவசமானார். பாட்டு முடிந்ததும் ''கிழவனின் ஆசையை மதித்து இங்கே வந்து பாடிப் பெரிய உபகாரம் செய்தீர்கள்'' என்று ராயர் கூறினார். ஸ்ரீமதி எம். எஸ். அவர்கள், ''தங்களைப் போன்ற பெரியவர்களின் முன்னிலையில் பாடுவது எனக்கு சிரேயஸ். ஆசீர்வாதம் செய்யுங்கள்'' என்று விநயத்துடன் விடை கூறினார்.

ஒரு காலத்தில் வழக்கத்தில் இருந்துவந்த ஆசாரங்கள் சிலவற்றை ராயர் அநுசரிக்கவில்லையென்றாலும் ஹிந்து மதத்தில் அவருக்கு அசைக்க முடியாத பற்றுதல். கடவுளிடம் பூரண நம்பிக்கை. பரம்பரையினால் பாதியும் தமது சொந்த நம்பிக்கையால் பாதியுமாக ராயர் த்வைத மதத்தில் ஈடுபாடுடையவராக இருந்தார். இதைத் தெளிவுபடுத்திப் பேசும்போது அவர் ''ஆண்டவனே ஆணையிட்டாலும் சரி, 'நான்' என்பது என்னவென்பதை அளந்து பார்க்க நான் தயாராக இல்லை'' என்பார்.

ராம ராவ் நடு வயது வரையில் வீட்டில் மடியுடுத்துக் கொண்டு ஸ்வாமி பூஜைசெய்துவிட்டுத்தான் சாப்பிட்டு வந்தாராம். பிறகு இந்த வழக்கம் போய்விட்டது. பூஜையை விட்டாலும் கீதை, ஸகஸ்ரநாமம், உபநிஷத்துக்கள் இவைகளை முறையாகப் படித்து வந்தார் ராயர். காலையில் எழுந்து குளித்ததும் கீதையிலிருந்து சில பகுதிகளைப் படிப்பார். இவ்வாறு படித்துப் படித்துக் கீதை முழுதும் தமக்குப் பாடமாகி விட்டதாக அவர் சொல்வார். மாலையில் 'கிளப்'பிலிருந்து வீட்டுக்குச் செல்லும் பொழுதோ அல்லது உலாவி விட்டுத் திரும்பும் பொழுதோ ராயர் விஷ்ணு சகஸ்ரநாமத்தைச் சொல்லிக் கொள்வார்.

ஸ்ரீ ராஜகோபாலாச்சாரியாரவர்கள் தமது பேத்தியின் விவாகத்தைத் திருப்பதியில் நான்கு வருடங்களுக்கு முன்னர் நடத்திய பொழுது ராயர் அந்தக் கல்யாணத்துக்குச் சென்றார். ராயர் குடும்ப வழக்கப்படி இவர்கள் யாரும் தாமாகத் திருப்பதிக்குப் போகக் கூடாதாம். எனவே ராஜாஜியின் ஆதரவில் இவர் ஸ்வாமி தரிசனத்துக்குச் சென்றார். விக்கிரகத்தின் சக்தி அர்ச்சகனின் தவத்தைப் பொறுத்தது என்று ஒரு வசனம் உண்டு. வழிபாடு செய்யச் சென்ற பக்தனின் மனப் பக்குவத்தைப் பொறுத்தது அது என்றும் சொல்லலாம். ''பெருமாளின் எதிரில் நின்றபொழுது எனக்கு அளவில்லாத ஆனந்தம் ஏற்பட்டது. கண்களிலிருந்து மளமளவென்று கண்ணீர் பெருகியது. நான் அப்படியே வெகுநேரம் நின்றுவிட்டேன்'' என்று அவர் என்னிடம் பிற்பாடு சொன்னார். ''எப்படிப்பட்ட மகாநுபாவர்களெல்லாம் எவ்வளவோ பக்தியோடு ஆண்டவனை வழிபட்ட புனிதத் தலம். அங்கே இறைவனின் ஒளி நிரம்பி யிருப்பதில் என்ன ஆச்சரியம்?'' என்றார்.

''திருப்பதிக்கு எப்படியோ போய்விட்டு வந்து விட்டீர்கள்; ஸ்ரீநிவாசரின் படம் ஒன்று கொண்டு வந்து தரட்டுமா?'' என்று நான் கேட்டேன். அவர், ''இங்கே கிடைக்கிறதா?'' என்று கேட்டார். நான், ''எங்கள் வீட்டிலேயே நிறையப் படங்கள் இருக்கின்றன. அவற்றில் ஒன்றைக் கொண்டு வந்து தருகிறேன்'' என்றேன். அவருக்கு ஒரு படம் கொடுப்பதால் என் அறையிலோ, வீட்டிலுள்ள மற்றவர்கள் யாருடைய அறையிலோ இருக்கும் ஒரு படமும் எடுபடக் கூடாது என்பதைக் கேட்டு நிச்சயம் செய்து கொண்ட பிறகு சம்மதித்தார். அதன் பிறகு ராயர் நினைத்த பொழுதெல்லாம் பெருமாளைக் காண அப்படம் உதவியது. பிறகு பல முறைகள் நான் அவர் வீட்டுக்குச் சென்ற பொழுது ராயர், ''ஸ்ரீநிவாசப் பெருமாள் இங்கே இருக்கிறார் பாருங்கள்'' என்று சொல்லுவார். அவர் தமது ஜீவ யாத்திரையை முடிக்கும் தறுவாயிலும் அவரெதிரே சுவரின் மீது கருணை நிறைந்த நோக்குடன் அவரைப் பார்த்தவாறு நின்றிருந்த திருப்பதி ஸ்ரீநிவாசப் பெருமாளே அவர் கண்களில் நிறைந்திருந்தார்.

ராயர் ஒருமுறை எனக்கு சகஸ்ர நாமங்களுள் ஒன்றின் அர்த்தத்தை விளக்கிச் சொன்னார். ''உத்தாரணோ துஷ்க்ருதிஹா புண்யோ துஸ்வப்ன நாசன:'' என்பது அதில் ஒரு ச்லோகத்தின் பாதி. 'துஸ்வப்ன நாசன:' என்பதில் துஸ்வப்னம் என்பது சம்சாரம் என்று அவர் பொருள் கூறினார்.

ஆண்டவனின் சாந்நித்தியத்தைக் கண்டு கொள்ளக் கூடிய ராயரின் பக்குவமடைந்த மனத்துக்கு வாழ்க்கையானது ஒரு கெட்ட சொப்பனமாகவே தோன்றியதில் வியப்பென்ன?



# "சங்கீதம் பாடப் போறேன்!"

என். சம்பந்தம்

நெடு நாட்களாகவே எனக்குச் சங்கீதம் கற்றுக் கொள்ள வேண்டுமென்ற ஆவல். அதற்குப் பலவித காரணங்கள். இரண்டு முக்கியமான காரணங்களைச் சொன்னால் போதுமென்று நினைக்கிறேன். பக்கத்து வீட்டுக்காரியான சங்கரி கல்யாணி ராகத்தில் பாடும் பாட்டுக்குத் தோடி ராகத்தில் ஒரு பாட்டுப் பாடி அவள் வாயைக் கட்ட வேண்டுமென்று எனக்குள் ஆசை. ஏன் ஏற்பட்டது? என்னமோ ஏற்பட்டது! எனக்குச் சில விசித்திரமான எண்ணங்கள் தோன்றும். நினைத்துப் பார்த்து மண்டையை உடைத்துக் கொண்டாலும் அதற்கான காரண காரியங்களைக் கண்டு பிடிக்க முடியாது: தெருவில், தினப்படி சந்திக்கும் ஒரு நாடக நடிகனைக் கண்டால் எனக்கு ஆத்திரம் பற்றிக் கொண்டு வரும். அவன் கன்னத்தில் நாலு அறை வைத்து விட்டு மன்னிப்புக் கேட்டுக் கொண்டாலென்ன வென்று தோன்றும். இத்தனைக்கும் அவனுக்கும், எனக்கும் எந்தவிதமான தொடர்பும் கிடையாது! இந்த விசித்திரமான எண்ணத்துக்கு நான் என்ன காரணத்தைச் சொல்ல முடியும்? அவனுக்கும், எனக்கும் முன் ஜன்மத்தில் என்ன பகையோ?... அத்தகைய காரணம் தான் சங்கரியின் விஷயத்திலும் இருக்க வேண்டும்.

சங்கீதமென்றால் சாமான்யமா? அதற்கென்று சில குண விசேஷங்களிருந்தன. எத்தனையோ கலைகள் இயற்கையாக வந்துவிடுகின்றன. அப்படி எனக்கு வந்த கலைகளில் மரமேறுதலும் ஒன்று. சின்ன வயதில் நான் சதா மரத்தின் மீதே சஞ்சாரம் செய்வதைக் கண்டு, ரொம்பப் பேர் என்னைக் குரங்கென்றே எண்ணி வந்தார்களாம். சில சமயங்களில் நான் மனிதக் குழந்தையாய் நடந்து கொள்வதைப் பார்த்த பிறகு தான் அவர்கள் சந்தேகம் தெளிந்து போன ஜன்மத்தில் நான் குரங்காய் இருந்திருக்க வேண்டுமென்று முடிவுக்கு வந்தார்களாம். அது எப்படியாவது போகட்டும்: மரமேறுதலைப் பொறுத்த வரை நான் எந்த ஆசிரியரிடமும் போகவில்லையென்பது மட்டும் உண்மை: ஆனால் சங்கீதத்தைப் பொறுத்தவரை எனக்கு ஓர் ஆசிரியரின் உதவி தேவையாக இருந்தது.



ஆசிரியரென்றால் சாதாரண ஆசிரியர் கிடைத்து விட்டால் போதுமா? மார்க்கெட்டுக்கு ஏற்ற டிரேட் மார்க் வேண்டுமே! கழுதையாய்க் கத்தினாலும் இன்னாருடைய சிஷ்யன் என்று சொல்லிக் கொள்ளுகிற பெருமை வருமா? அப்படி ஆசிரியருக்காக அலைந்து கொண்டிருந்த பொழுது தான் எனக்கு ஓர் உண்மை தெரிய வந்தது. சங்கீதமென்பது அத்தனை உபயோகமான விஷயமல்ல என்பதுதான் அது! அப்படி அது உபயோகமான விஷயமென்றால் இவ்வளவு பெரிய ஜன சமுத்திரத்தில் சங்கீத வித்வானுக்காக நான் அலைய வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டிருக்காதல்லவா?

கடைசியில் என் ஆசிரியர் ஒரு நாள் என் எதிரில் தரிசனம் தந்தார். வழக்கம் போல் மறதியாக ஓட்டலிலிருந்து நான் வேறு ஒருவரின் குடையோடு கிளம்பிப் புறப்பட்ட பொழுது தான் அந்த மகானுபாவர் 'சடா'ரென்று என் கையைப் பற்றினார். நான் அசந்து விட்டேன்!

"என்ன சார்?" என்றேன் என் கலவரத்தை, மறைத்துக்கொண்டு.

"குடை!........" என்றார் அவர் இழுத்தபடியே.

"குடையா? அசல் மயில் மார்க் குடைதான் ஸார். சைனா பஜாரில் வாங்கினேன். உங்களுக்குக் குடை வேண்டுமானால் அங்கு வாங்கிக் கொள்ளுங்கள்" என்றேன்.

"அது தெரிகிறது!...இது என் குடை."

"அப்படியா?" என்று குடையை மேலும் கீழும் பார்த்தேன். அவர் சொல்வது உண்மையாகத்தானிருக்க வேண்டும். கடந்த ஆறு மாதங்களில் அத்தகைய ஓடிசல் குடையை நான் ஒரு நாளும் வைத்திருந்ததே யில்லை.

"மன்னிக்கவும்!" என்று பெருந்தன்மையுடன் அவரிடம் குடையை நீட்டினேன். அமைதியாக அவர் குடையை வாங்கிக் கொண்டு கிளம்பினார்.



''சார்!' என்றேன் நான். அவர் நின்றார். 'என்ன ?' என்பதைப் போல் புருவத்தை வில் போன்று உயர்த்தினார். 'இத்தகைய மௌன விரதம் பூண்டவர்கள் ஏன் அரசியல் கட்சிகளில் இருக்கக் கூடாது ? காது புண்ணாவது மிஞ்சுமே!' என்ற எண்ணத்துடன் பார்த்த பொழுது அவரை எதிரில் காணவில்லை. மடித்த இடது கையில் குடையைச் சொருகிய வண்ணம் மனிதர் சற்றுத் தூரத்தில் போய்க் கொண்டிருந்தார். அவசரம் அவசரமாக ஓட்டலில் நுழைந்து மறதியாக வேறு ஒருவரின் குடையை எடுத்துக் கொண்டு இவரைத் துரத்தினேன். அப்படி ஓடும்பொழுதுதான் நான் குடையோடு வரவில்லை யென்பது நினைவுக்கு வந்தது. இருந்தாலும் குடையைத் திருப்பி வைக்க மனமில்லை. எத்தனையோ தடவைகள் மறதியாக எடுத்துக்கொண்டு வந்த குடையை விட அது நன்றாக இருந்தது.

இறைக்க இறைக்க ஓடி வந்த என்னைக் கண்டவுடன் அவர் நின்றார்!

''என்ன ஸார் கூப்பிடக் கூப்பிட வந்து விட்டீர்களே?'' என்று ஓடி வந்த வேகத்தைச் சமாளிக்கக் குடையை ஊன்றி நின்றேன். எனக்கு மேலும் கீழுமாக இறைத்தது! பரிதாபமாக என்னைப் பார்த்தார்.

'எனக்குச் சங்கீதம் என்றால் உயிர்'' என்று ஆரம்பித்தேன். அதற்குள் அவரிடம் ஆச்சரியப்படும்படியான மாறுதல் ஏற்பட்டது. முப்பத்திரண்டு பற்களும் தெரியச் சிரித்தார். அவருக்கு முப்பத்திரண்டு பற்கள் இருந்ததோ என்னவோ, எனக்குத் தெரியாது. ஆனால் ஒன்று மட்டும் நிச்சயம். அதற்கும் மேலும் இருக்க வேண்டுமென யூகித்தேன். அசப்பிலேயே கீழ்வரிசையில் மட்டும் இரண்டு அடுக்குகள் இருப்பதைப் பார்த்தேன். மேல் வரிசையைப் பார்ப்பதற்குள் அவர் லபக்கென்று வாயைமூடிக்கொண்டு புன்முறுவல் பூத்தார். குடையை அப்படியும் இப்படியும் அசைத்து வளைத்து நெளிந்தார். நாணிக் கோணினார். ஜிப்பாக் காலரைப் பிடித்துக் கொண்டு நெருடினார். 'என்னடா! மனிதருக்கு என்ன வந்து விட்டது?' என்று ஒரு நிமிடம் யோசித்தேன். அடுத்த நிமிடமே காரணம் புரிந்தது.

ஒரு சமயம் நான் ரயிலில் போய்க்கொண்டிருந்தேன். என் கையில் அந்த மாதத்திய 'ஜோதி' என்ற பத்திரிகை இருந்தது. அதில் வெளியாகியிருந்த ஒரு கதை என்னைப் பெரிதும் கவர்ந்தது. பக்கத்தில் உட்கார்ந்தவரிடம் அக்கதையைப் பாராட்டி, 'படித்தீர்களா?' என்று கேட்டேன். அதற்கு அவர் பதில் ஒன்றும் சொல்லவில்லை. பலவிதமான சேஷ்டைகளைச் செய்தார். கடைசியில் அந்தக் கதையை எழுதியவர் அவர்தான் என்று தெரிந்தது. உடனே எனக்கு ஏதோ பிரமாதமான மனோதத்துவத்தைத் தெரிந்து கொண்ட பெருமை எழுந்தது. கலைஞர்களிடம் அவர்கள் படைப்பைப் பற்றிப் பேசினால் இத்தகைய அசம்பாவிதங்கள் ஏற்படுமென்று தெரிந்துகொண்டேன்.

அதே வலிப்பு வியாதி இவரிடமும் ஏற்படவே இவர் சங்கீத வித்வானாயிருக்க வேண்டுமென்று யூகித்தேன். அவருக்கு யாராவது சங்கீத வித்வான் தெரியுமாவென்று யூகிக்கவே முதலில் அவரிடம் பேச்சுக் கொடுத்தேன். கடைசியில் கும்பிடப் போன தெய்வம் குறுக்கே வந்து விழுந்ததைப் போல் அவர் என்னிடம் சிக்கிக் கொண்டார். நான் விடுவேனா?

அவர் சங்கீத வித்வானாம்! பல சங்கீத மேடைகளில் கச்சேரிகள் செய்து பெயர் பெற்றவராம். எது இருந்து, என்ன லாபம்? அதிர்ஷ்டம் வேண்டாமா ? அவருக்கும் அதுக்கும் சம்பந்தமில்லாமல் போய்விட்டது. நான் ரொம்பவும் மலிவாக அவரைப் பிடித்து விட்டேன். என்ன செய்வது? அவர் வறுமைக்காக நான் பணக்காரனாகி விட முடியுமா?



நல்ல நாளும் நக்ஷத்திரமுமாகப் பார்த்து என்னுடைய வித்தையை ஆரம்பித்தேன். பூஜைகள் முடிந்து ஆசிரியருக்கு வணக்கம் செலுத்தி விட்டுச் சும்மா நான் கிழக்கு நோக்கி உட்கார்ந்தேன். சங்கீத



மென்றால் என்ன என்பதைப் பற்றியும், சப்த ஸ்வரங்களைப் பற்றியும் விஸ்தாரமாக அவர் ஆலாபனம் செய்தார். அப்பொழுதுதான் என் நாசி திடீரென்று வீசிய கொடிய துர்நாற்றத்தின் தாக்குதலைச் சமாளிக்க முடியாமல் திணறியது! சுற்றிலும் பார்த்தேன். எங்கிருந்து அந்தத் துர்க்கந்தம் வருகிறதென்று எனக்குத் தெரியவில்லை. சட்டென்று அது நின்றது எனக்குப் பெரிய ஆறுதலாக இருந்தது. ஸ்வர ஆராய்ச்சியில் அவர் ஈடுபட்டிருந்த பொழுது நான் துர்நாற்றத்தின் உற்பத்தி ஸ்தானத்தைப் பற்றிய எண்ணத்தில் மூழ்கியிருந்ததால் ஒருவருடைய பிரச்னை மற்றவருக்குத் தெரியாமல் போய்விட்டது. மறுபடியும் ஸ்வர வரிசையைப் பற்றியும், சங்கீதத்தின் நாத மேன்மையைப் பற்றியும் கூறுமாறு அவரிடம் வேண்டிக் கொண்டேன்.

மனிதர் வாயைத் திறந்தாரோ இல்லையோ, மூட்டை நாற்றம் குப்பென்று வீசியது. அடடா! கடைசியில் சங்கீத வித்வானுடைய வாயிலிருந்தா அத்தகைய நாற்றம் வர வேண்டும்? நான் சற்றுத் தள்ளி உட்கார்ந்து பார்த்தேன். துர்வாசனை குறைந்த பாடாயில்லை. இன்னும் தள்ளி உட்கார்ந்தேன். துர்வாசனை வீசியதோ இல்லையோ, எனக்கென்னவோ வீசுவது போலவேயிருந்தது! எனக்கும் அவருக்கும் உள்ள தூரத்தைப் பார்த்தேன். உண்மையில் எனக்கும் சங்கீதத்துக்கும் ரொம்ப தூரம்தான்! அத்தகைய வேதனையோடு அவருடைய சிஷ்யனாக நான் நெடு நாட்கள் இருக்க முடியவில்லை. கணக்கைத் தீர்த்து விட்டு வந்து விட்டேன். கணக்கைத் தீர்ப்பதற்கு என்ன இருந்தது? அவரே என்னிடம் அதிகப் பற்று வரவு செய்திருந்தார்.

அப்படியும் சங்கீதம் கற்றுக் கொள்ள வேண்டுமென்ற ஆசை எனக்குக் குறையவில்லை. மறுபடியும் சங்கீத வித்வானுக்காக நான் அலைந்து திரிந்து கொண்டிருந்தேன். 'முயற்சி யென்று ஒன்றில்லையா? அந்த முயற்சியை விடாமல் கைக் கொண்டால் காரியம் கைகூடுமே?' என்று பலர் யோசனை கூறலாம். ஆனாலும் எனக்கு நம்பிக்கையோ தளர்ந்திருந்தது. அப்படிப்பட்ட மனோ வியாகூலமான சமயத்தில்தான் பக்கத்து வீட்டுச் சங்கரி என் கண்ணில் தென்பட்டாள். நான்கு ஐந்து நோட்டுப் புத்தகங்களை இடது கையை மடக்கி அதன் மீது கோபுரமாக அடுக்கிக்கொண்டு அந்தப் பூங்கொடி எங்கோ போய்க் கொண்டிருந்தாள். சரேலென்று என் மூளையில் ஒரு யோசனை தோன்றியது. இத்தனை நாட்கள் அந்த யோசனை எங்கே குடியிருந்தது? அதற்கு என்னால் சரியான பதில் சொல்ல முடியாது. நெடு நாட்கள்வரை எனக்கு மூளையென்று ஒன்று இருக்கிறதென்று யாருமே ஒத்துக் கொண்டதில்லை. அதற்காக நானும் கவலைப்பட்டதில்லை. ஏனென்றால் எனக்கும் அத்தகைய சந்தேகமிருந்தது. கடைசியில் பி. ஏ. வில் முதல் வகுப்பில் நான் தேறியபொழுது ரொம்பப் பேர் அசந்து விட்டார்கள். ஆனால் சில பொறாமை பிடித்தவர்கள் நான் பணம் கொடுத்து பாஸ் செய்ததாக வெளிப்படையாகவே சொன்னார்கள். பாவிகள்! அவர்கள் நாசமாய்ப் போக....

அதற்குள் சங்கரி நான்கைந்து தெருக்களைக் கடந்து ஒரு வீட்டின் படியேறினாள். நானும் அந்த வீட்டினுள் நுழைந்தேன். சங்கரி என்னைத் திரும்பிப் பார்த்தாள். கண்களை உயர்த்தி என்னமோ மாதிரி பார்த்தாள். அவள் அதரங்கள் அழகாகச் சுழித்துக்கொண்டு நின்றன. நான் அசந்துவிட்டேன். அவள் கண்கள் என்னிடம் என்னமோ சொல்ல முயன்றன. அதற்குள் யாரோ கனைக்கும் சத்தம் கேட்டது. நிமிர்ந்து பார்த்தேன். வாயில் வெற்றிலை பாக்கும் ஜவ்வாதுப் பொட்டும் சில்க் ஜிப்பாவுமாக ஒருவர் எதிரில் நின்று கொண்டிருந்தார்.

''சங்கரி! இவர் உன் அண்ணாவா?'' என்று கேட்டார்.

'அட பாவிமனிதா? வேறு உறவு கிடைக்கவில்லையா கேட்க?'

''இல்லே, சார்!'' என்றாள் சங்கரி நாணத்துடன்.

''நீதான் அவரை அழைத்துக்கொண்டு வந்தாயா?'' என்று கேட்டார்.



''நான் அழைத்து வரவில்லை. அவரே வந்திருக்கிறார்.''

மனிதர் சோதனைக்கண்களோடு என்னை ஏறிட்டுப் பார்த்தார். பிறகு என்ன நினைத்துக் கொண்டாரோ, ''உட்காருங்கள்!'' என்றார். அப்பொழுது தான் நான் முதன் முதலாக என் தோற்றத்தில் ஒரு விதப் பெருந்தன்மை இருப்பதை உணர்ந்தேன்!

''உங்களுக்கென்ன வேண்டும்?'' என்று அவர் கேட்டார்.

''பாட்டுக் கற்றுக் கொள்ள வந்திருக்கிறேன்'' என்று முன்னமே தயாரித்து வைத்திருந்த பதிலைச் சொன்னேன்.

''பாட்டா?'' என்று அவர் வியப்புடன் கேட்டபொழுது எனக்கு ஒன்றுமே புரியவில்லை. அத்தனை திகைப்படையும்படி அவரிடம் நான் என்ன சொல்லி விட்டேன்?

''இதற்கு முன் எங்கேயாவது சிட்சை பெற்றிருக்கிறீர்களா?'' என்று 'இண்டர்வியூ'வை ஆரம்பித்தார்.

''பெற்றிருக்கிறேன்'' என்றேன். முதலில் இல்லையென்றுதான் சொல்ல நினைத்தேன். ஒரு நாள் அனுபவமானாலும் அனுபவம்தானே!

''யாரிடம்?''

''திரவல் சங்கரசுப்புவிடம்..''

''எவ்வளவு காலம்?''

''ஒரு மாதம்!''

பொய் சொன்னதற்குத் தயவுசெய்து என்னை மன்னித்து விடுங்கள். நீங்கள் மன்னிக்கா விட்டாலும் அந்த ஒரு பொய்க்காக நான் நரகத்துக்குப் போனாலும் பரவாயில்லை. அந்தப் பொய்யைச் சொல்லும்படி சங்கரியின் கண்கள்தாம் தூண்டின. அதற்குக் கர்த்தாவான அவளும் நிச்சயம் என்னுடன் நரகத்துக்கு வருவாளென்ற நம்பிக்கை எனக்கிருந்தது. ஒரு நாள்தான் அவரிடம் நான் சங்கீதம் பாடம் கேட்டேனென்று சொன்னால் தம்மைக் கேலி செய்வதாக அவர் நினைக்கக் கூடும். அதோடு இன்னொரு காரணமும் இருந்தது. ஒரு நாளோடு நான் ஓடி வந்த காரணத்தையும் அவரிடம் சொன்னால் என்னைப் பற்றியும் எனக்கிருக்கும் சங்கீத ஆர்வத்தைப் பற்றியும் அவருக்குத் தவறான எண்ணம் ஏற்படலா மல்லவா?

அதன் பிறகு அவர் எத்தனையோ கேள்விகளைக் கேட்டார். பாதிக் கேள்விகளுக்கு மௌனத்திலேயே பதில் சொல்லி விட்டேன். எப்படியோ அவருக்கு என்னைப் பிடித்துவிட்டது.

மறு நாள் சங்கரி வீட்டிலிருந்து கிளம்பியதைப் பார்த்தேன். என் வீட்டைத் தாண்டும்பொழுது நான் இருக்கிறேனா இல்லையா என்று பார்த்து விட்டுப் போனாள். அவளுடன் நாமும் செல்லலாமா என்று யோசனை செய்தேன். பொல்லாத உலகம்! பின்னால் இல்லாததையும் பொல்லாததையும் சொல்லும். ஆயிரம் நாக்குப் படைத்த ஆதிசேஷர்களுக்கா இந்த உலகத்தில் பஞ்சம்?

அவள் போன பிறகு சற்று நேரம் கழித்துச் சென்றேன். கூடத்தில் சுருதிப் பெட்டியோடு சங்கரி உட்கார்ந்திருந்தாள். கொழுந்து வெற்றிலையாகத் தேடிப் பார்த்துச் சுண்ணாம்பைக் குழைத்து என் ஆசான் மென்று கொண்டிருந்தார்.

''சங்கரி! சுருதிப் பெட்டியை நாகுவிடம் கொடுத்து விட்டு நீ பாடு'' என்றார். அவள் என் பக்கம் சுருதிப் பெட்டியை நகர்த்தினாள். நான் பேசாமல் சுருதிப் பெட்டியை வாங்கிக் கொண்டு வாசித்தேன். இரண்டொரு சியாமா சாஸ்திரிகளின் கீர்த்தனங்களை விஸ்தாரமான ராக ஆலாபனம், நிரவல், ஸ்வரம் முதலியவற்றுடன் பாடிக் கடைசியாகக் கரகரப்பிரியாவில் 'காதலாகிக் கசிந்து..........'' என்ற தேவாரப் பாடலையும் பாடி முடித்தாள். இதன் நடுவில் எனக்குக் கையை வலித்தது. கொட்டாவி வாயைப் பிளந்தது. தூக்கம் கண்ணைச் சுழற்றியது. எனினும் மூர்க்கத்தனமாக என் காரியத்தை எந்த இடையூறுமின்றிச் செய்து முடித்தேன்.

காலம் ஓடிக் கொண்டிருந்தது. சங்கீதத்தைப் பொறுத்தவரை என்னிடம் எந்த அபிவிருத்தியும் ஏற்படவில்லை. அதற்காக என் ஆசிரியர் எந்தவித முயற்சியும் எடுத்துக் கொள்ளவில்லை. ஆனால் வேறு ஓர் அபிவிருத்தி அடைந்ததை நான் உங்களிடம் மறுக்கவில்லை. எனக்கும், சங்கரிக்குமிடையே ஏற்பட்ட அன்பு வளர்ந்து காதலாகக் கனிந்தது.

''ஐயா!'' என்றேன் ஒரு நாள் என் ஆசிரியரைப் பார்த்து.

''என்ன?''

''என் சங்கீதம் சுருதிப் பெட்டியை மீட்டுவதோடு நின்று விடவேண்டுமா?'' என்றேன் கண்களில் கண்ணீர் வழிய.

அதன் அர்த்தம் சில நாட்கள் வரையில் எனக்குப் புரியாமலிருந்தது. கடைசியில் தான் ஒரு வழியாக அது புரிந்தது. சங்கரியை எனக்கு அவரே முன்னின்று மணம் செய்து வைப்பதற்குள் அவள் செய்யும் கச்சேரிகளிலெல்லாம் என்னையே சுருதி மீட்டும்படி பணித்தார். நானும் என் குருதேவரின் கட்டளையைச் சிரமேற்கொண்டு அன்று முதல் அவள் செய்யும் கச்சேரிகளிலெல்லாம் அவளருகில் உட்கார்ந்து சுருதி மீட்டிவருகிறேன். இப்பொழுது நீங்களே சொல்லுங்கள், எனக்கும் சங்கீதத்துக்கும் வெகு தூரமா?

# கால்கேட்டின் மூலம்
# நாள் முழுவதும் வாய் துர்நாற்றத்தை அகற்றி பற்கள் சொத்தையாவதையும் தடுங்கள்!




ஏனெனில், ஒரே தேய்ப்பில் கால்கேட் டெண்டல் க்ரீம் துர்நாற்றத்தையும் சொத்தையையும் உண்டாக்கும் கிருமிகளில் 85 சத விகிதத்தை ஒழிக்கிறது.

கால்கேட் உடனடியாக வாய் துர்நாற்றத்தை 10ல் 7 சந்தர்ப்பங்களில் அகற்றுகிறது என்பதையும், உணவு சாப்பிட்டவுடன் கால்கேட்டினால் பற்களைத் துலக்கும் முறையால், பற்பசை வரலாற்றிலேயே இதுவரை கண்டிராத பெருமளவில், ஏராளமானவர்களுக்குச் சொத்தை ஒழிக்கப்படுகிறது என்பதையும் விஞ்ஞான பரீட்சைகள் நிரூபித்துள்ளன! இந்த சாதனை கால்கேட் ஒன்றுக்குத்தான் உண்டு! சாப்பிட்டவுடன் வாயை கொப்பளித்தால் மட்டும் போதாது—சாப்பிட்டவுடன் வழக்கமாக கால்கேட் டெண்டல் க்ரீமினால் உங்கள் பற்களை நன்றாகத் துலக்குங்கள். இதன் வீரியமும், ஊடுருவும் தன்மையுமுள்ள நுரை பற்களின் இடைவெளிகளிலே புகுந்து, சொத்தைக்கும், துர்நாற்றத்துக்கும் காரணமாக இருக்கும் அழுகிய பதார்த்த அணுக்களை அகற்றுகிறது.

கால்கேட்டில் நீடித்திருக்கும் நூதன நறுமணத்திற்காக, குழந்தைகள் அதனாலேயே பல் துலக்க விரும்புகிறார்கள்.

வழக்கமாக கால்கேட் உபயோகித்தால், அது:

- ✓ துர்நாற்றத்தை அகற்றுகிறது
- ✓ சொத்தையைத் தடுக்கிறது
- ✓ பற்களை அதி வெண்மையாக வைத்திருக்கிறது




நீங்கள் பற்பொடியை விரும்பினால், இந்த பலன்கள் அனைத்தையும் கால்கேட் டூத் பவுடர் மூலம் அடையலாம். ஒரு டப்பி பல மாதங்களுக்கு வரும்.




பரிசுத்தத்திற்கும், வாயில் நறுமணம் கமழவும், வெண்ணிற பற்களைப் பெறவும் உலகத்திலேயே பெரும்பாலான மக்கள் மற்றெல்லா பற்பசைகளையும் விட கால்கேட்டையே பெரிதும் விரும்புகிறார்கள்.

DCG.72QT.TAM.

# சுவர்

சுவர் அசுர வேகத்தில் எழும்பிக் கொண்டிருப்பதைப் பார்த்தாள் ஐடா. வெறும் செங்கல் சுவரல்ல அது. கருங்கற்களும் சிமெண்டும் இரும்புக் கம்பிகளும் கலந்து தயாரான 'காங்கிரீட்' கற்களை அடுக்கி எழுப்பப்படும் சுவர். எட்டு மனிதர்கள் சேர்ந்தாலும் தூக்க முடியாத அந்தக் கற்களைப் பிரும்மாண்டமான இயந்திரம் ஒன்று கடாபுடா ஒலியுடன் அனுயாசமாகத் தூக்கி ஒன்றன்பின் ஒன்றாக ஒழுங்காக வைத்துக் கொண்டிருந்தது. சுவர் வளர்ந்தது. அதன் முற்றுப் பெற்ற பகுதிகள் இருபதடி உயரத்துக்கு மேல் இருந்தன. உச்சியில் கூரிய கண்ணாடித் துண்டுகள் வேறு பதிக்கப் பெற்றிருந்தன.

சுதந்திரம் என்ற தத்துவத்தையே கொன்று பூமிக்கடியில் ஆழப் புதைத்து விட்டு அதன் மீது கட்டப்பட்ட கல்லறையாகக் காட்சி பளித்தது அந்தச் சுவர் ஐடாவுக்கு.

அவள் அந்தச் சுவரில் சாய்ந்தாள். அதன் சொரசொரப்பை நன்றாக விரிந்து இலேசாக நடுங்கிக் கொண்டிருந்த பத்து விரல்கள் ஸ்பரிசித்தன. முரட்டுத்தனமான தன் உறுதியை அது அவளுக்கு உணர்த்தியது. அவள் இமைகள் விழிகளை அணைத்தன.

''ஐடா! இந்தப் பக்கத்துக்கு வந்து விடு!'' அடித் தொண்டையில் ஹெர்மன் ரகசியம் பேசுவதாக அவளுக்குத் தோன்றியது. சுவருக்கு மறுபுறத்திலிருந்து கொண்டு அவன் கூப்பிடுகிறானா?

திடுக்கிட்டு நிமிர்ந்து நின்றாள் அவள். சுவரை நோக்கித் திரும்பி அதனைத் தட்டினாள், குத்தினாள். ''ஹெர்மன்! ஹெர்மன்!'' என்று குரல் கொடுத்தாள்.

பலனில்லை; பதில் ஏதும் அவள் செவிகளுக்கு எட்டவில்லை. எல்லாம் பிரமை! பட்டுக் கன்னங்கள் காதலனைப் பிரித்து வைத்த அந்தச் சுவரில் பதிந்தன. தலைக்கு மேலே ஓங்கியிருந்த கரங்கள் சுவரில் உராய்ந்தவாறே துவண்டு விழுந்தன.

எத்தனையோ முறைகள் இதே மாதிரி அவளை வருந்தி அழைத்திருக்கிறான் ஹெர்மன். ''ஐடா! இந்தப் பக்கத்துக்கு வந்து விடு!'' என்று கடைசியாக ஒரு வாரத்துக்கு முன்பு கூட வற்புறுத்திச் சொன்னான். ''ஐடா! யுத்தத்துக்குப் பிறகு நாற்பது லட்சத்துக்கு மேற்பட்டவர்கள் அடிமைத் தளைகளை எப்படியோ அகற்றி எறிந்து விட்டுச் சுதந்திர மக்களாக வாழ முடிவு செய்திருக்கிறார்கள். அவர்களுள் ஒருத்தியாக நீ இருக்கக் கூடாதா? வெகு சீக்கிரத்தில் நிலைமை மேலும் மோசமாகிவிடலாம். அதற்கு முன் நல்லதொரு தீர்மானத்துக்கு வர வேண்டும் நீ!''

''ஆகட்டும்'' என்று நம்பிக்கையற்ற குரலில் கூறி மெல்லத் தலையசைத்து வைத்தாள் ஐடா. தான் எவ்வளவுதான் வாதாடினாலும் அம்மா அதற்குச் சம்மதிக்கப் போவதில்லை என்பது அவளுக்குத் தெரியும். அதை ஹெர்மனுக்கு எடுத்துரைப்பதில் புண்ணியமில்லை; அவனுக்குப் புரியாது. தாயைத் தனிமையில் தவிக்க விட்டு விட்டு அவனிடம் தஞ்சம் புகுந்து விடவும் அவளுக்குத் திராணியில்லை.

கி. ராஜேந்திரன்



''நான் பிறந்தது, வளர்ந்தது, உன் அப்பாவைத் திருமணம் செய்து கொண்டு வாழ்ந்தது, உன்னைப் பெற்றெடுத்தது எல்லாமே இந்த வீட்டில்தான். இந்த வீட்டையும் அது தாண்டி விடும் பழைய நினைவுகளையும் அந்த நினைவுகள் தரும் மன நிறைவையும் நிம்மதியையும் விட்டுத் தொலைத்து விட்டு வயதான காலத்தில் என்னை எங்கே போகச் சொல்லுகிறாய்? மாட்டேன்; நான் எங்குமே போக மாட்டேன்!'' என்று தீர்மானமாகச் சொல்லி விட்டாள் ஐடாவின் தாயார்.

''அப்படிப் போக மாட்டேன் என்று சொன்னவள்தான் இன்று ஒரேயடியாகப் போய் விட்டாள்!'' என்று முணுமுணுத்தாள் ஐடா. ''அப்படிப் போகத்தான் போனாளே, வீட்டைப் பின்னேடா எடுத்துக் கொண்டு போனாள்? அல்லது போன இடத்துக்கு என்னையாவது அழைத்துக் கொண்டு தான் போனாளா? இரண்டுமில்லை. இறுதிவரையில் தனக்காகவே பேராசையுடன் வாழ்ந்து என்னை அநாதரவாகத் தவிக்க விட்டு விட்டுச் சென்று விட்டாள்.....''

''ஐயோ! நான் என்ன நினைத்துக் கொண்டிருக்கிறேன்......அம்மா! என்னை மன்னித்து விடு அம்மா!'' ஐடாவின் கண்ணீர் சுவரை நனைத்தது. கடுகளவுகூட அது கரையவில்லை. அண்ணனையும் தம்பியையும், தாயையும் சேயையும், காதலனையும் காதலியையும், கணவனையும் மனைவியையும் பிரித்து வைத்துக் கதறச் செய்யும் கல்லினும் கடினமான அந்தச் சுவரில் ஐடாவின் அகன்ற நெற்றி அழுந்தியது; கன்றிச் சிவந்தது.

ஹெர்மனைப் பார்த்து இன்றோடு ஒரு வாரமாகப் போகிறது. அவனைக் காண முடியாமல் இது வரை தடுத்தவை முள் வேலியும் அதற்கு முன்பாக எதற்கும் சித்தமாய்க் குறி பார்த்தபடி இருந்த துப்பாக்கி முனைகளும். அதன் பிறகு உருவாகிக் கொண்டிருக்கிறது இந்தச் சுவர். மனத்தாலும் மொழியாலும் உணர்ச்சியாலும் ஒன்றுபட்ட மக்களைப் பலவந்தமாக இருகூறுகப் பிரித்து வைக்கும் பாவத்தை அது தன் தலையில் கட்டிக் கொண்டு பயங்கரமாகத் தோற்றமளிக்கிறது. நாளைக்கு நானூறு பேர்கள் வீதம் மேற்குப் பேர்லினுக்குத் தப்பி ஓடுவதைத் தடுத்து நிறுத்தும் பொருட்டுச் சமைக்கப்பட்டது அது. ஆட்டு மந்தைகளாக அடைந்து கிடக்காமல் அகதிகளாக அவர்கள் வெளியேறியது ஆக்கிரமிப்பாளருக்கு அவமானத்தையும் ஆத்திரத்தையும் அளித்ததில் ஆச்சரியமில்லைதான்.

ஐடா சிரித்தாள்.

''நாளைக்கு உன்னைச் சந்திக்கும் போது என்னோடு புறப்பட்டு வந்து விடுவதாகச் சந்தோஷச் செய்தியைக் கொண்டு வர வேண்டும்!'' என்று உத்தரவு போட்டிருந்தானே ஹெர்மன்.

தாயார் இறந்துவிட்ட சந்தோஷச் செய்தியை அவனுக்குச் சொல்ல வேண்டாமா? அவனுடன் கிளம்பி வரவிருந்த ஒரே தடை நீங்கி விட்டதைக் கூற வேண்டாமா?

மீண்டும் உரக்கச் சிரித்தாள் ஐடா.

அருகே கருங்கற்களைக் கனமான பூட்ஸ் கால்கள் அறைக்கும் ஓசை கேட்டது. ''பெண்ணே! உனக்கென்ன, பித்தமா?''

முதுகைச் சுவர் தாங்க ஐடா திரும்பினாள். அவன் முகத்தைப் பார்த்ததும் மாஸ்கோவிலிருந்து வந்திருந்த அந்த ராணுவ வீரனுடைய உதடுகளில் சிகரெட் புகையுடன் புன்முறுவலும் இரண்டது.

''உன் பெயர்?''

ஜெர்மன் மொழி அந்தக் காப்டனுக்கு அரைகுறையாகத்தான் தெரியும் என்பதை உச்சரிப்பிலிருந்து கண்டுகொண்டாள் ஐடா. பதிலிறுக்காமல் வேறு புறம் திரும்பினாள். நகர ஆரம்பித்தாள்.

மணிக்கட்டை கயிற்றினால் இறுக்கி முறுக்குவது போன்று திடீரென்று ஒரு வலி. ருஷ்யனுடைய விரல்கள் அவள் கரத்தைக் கவ்வியிருந்தன. ஐடா அலறவில்லை. பல்லைக் கடித்துக் கொண்டு தான் சிரமப்படுவதை வெளிக்காட்டாது நின்றாள், நிமிர்ந்தாள்; அவன் முகத்தை நேருக்கு நேராக நோக்கினாள். பிறகு நிதானமாக மெல்ல மெல்ல அவள் விழிகள் தாழ்ந்தன. சிறைப்பட்டிருக்கும் கரத்தைப் பார்த்தன. ருஷ்யனின் பிடி தளர்வதை ஐடா உணர்ந்தாள். உதறித் தன்னை விடுவித்துக் கொண்டு நடந்தாள். காப்டன் அவளைப் பின்தொடரவில்லை. கீழே எறிந்த சிகரெட்டைப் பூட்ஸ் காலொன்று நசுக்கிக் கொண்டிருந்தது.

சற்றுத் தூரத்தில் தென்பட்ட மணிக்கூண்டை அண்ணாந்து நோக்கினாள் ஐடா. மணி எட்டு. தொழிற்சாலைச் சங்கு ஊத இன்னும் அரை மணி நேரமே இருந்தது. கழுத்தைச் சுற்றியிருந்த துணியை அவிழ்த்து முக்கோணமாக மடித்தாள். பின்னர் தலைக்கு மேலாக அதனைப் பரப்பிக் கேசத்தையும் காதுகளையும் மறைக்குமாறு இரு நுனிகளைக் கீழே கொணர்ந்து முகவாய்க்கு அடியில் முடிந்தாள். நடையைத் துரிதப்படுத்தினாள். தொழிற்சாலைக்கு ஒழுங்காகக் குறித்த நேரத்தில் போய்ச் சேர வில்லையானால் விபரீதமாகும். தேசத் துரோகி என்று கூடக் குற்றம் சாட்டப்படலாம்.

ஐடா நுழைந்து சென்றது 'வோபோ'க்களுக்கு உடுப்புகள் தயாரிக்கும் ஒரு தொழிற்சாலை. ஜெர்மானியரை அடக்கி ஆள ஜெர்மானியரையே போலீஸாராக அமர்த்தியிருந்தார்கள். அந்தக் கிழக்கு ஜெர்மன் போலீஸ் வோபோக்கள் அணிய விருந்த ஆடைகளில் பித்தான்கள் தைக்கும் வேலை ஐடாவினுடையது.

தொழிற்சாலையில் இயந்திரங்கள் இயங்கின; மனிதர்களும் இயங்கினார்கள். ஐடாவின் கரங்கள் சுறுசுறுப்பாகச் செயலாற்றின. உழைப்பு வயிற்றை நிரப்பி விடும் என்பது உண்மைதான். ஆனால்.....

கையிலிருந்த சட்டையைத் தரையில் விசிறி அடித்தாள் ஐடா. ''எனக்குப் பிடிக்கவில்லை; பிடிக்கவில்லை; பிடிக்கவில்லை!''

அவளைச் சுற்றியிருந்த பத்துப் பெண்களின் இருபது கண்கள் அவளை உற்றுப் பார்த்தன. நீலம், கறுப்பு, சாம்பல், பழுப்பு ஆகிய நிறங்களில் விழிகள் விண்டு விழுந்து விடும் போல் பிதுங்கியபடி வியப்போடு அவளை நோக்கின. 'பெண்ணே, உனக்கென்ன பித்தமா?' ருஷ்யக் காப்டனின் குரல் அவள் நெஞ்சுக்குள்ளே எதிரொலித்தது.



''அவங்க ரொம்ப தெரிந்தவங்க. அவங்க வீட்டுக் கல்யாணத்துக்கு வெறுங் கையோடு போகலாமோ?''

''போகப்படாது! வெறுங் கையோடு போகாதே... கையில் வளையல்களைப் போட்டுக்கொண்டு போ!!''

''ஏன் இப்படி வெறித்துப் பார்க்கிறீர்கள்? எனக்குப் பைத்தியம் பிடிக்கவில்லை!'' என்று சீறினாள் இடா. பிறகு மெல்லிய குரலில் தனக்குத்தானே சொல்லிக் கொள்வதுபோல, 'இன்றுவரையில்' என்றும் சேர்த்துக் கொண்டாள்.

வேலை முடிந்து வீடு நோக்கி நடந்து கொண்டிருந்தாள் இடா. அந்தப் பக்கத்துக்கு எப்படியோ தப்பி ஓடி விட்டால்....

விடிவு காலம் வந்து விடும் என்று கூறிவிடுவதற்கில்லைதான். இப்போதைக் காட்டிலும் அதிகமாகவே உழைக்க நேரிடும். ஆனால் சலித்துக் கொள்ளவேனும் அங்கே உரிமை உண்டு. குறைப்பட்டு முணுமுணுத்து விட்டுப் பிறகு அது யார் காதிலாவது விழுந்திருக்குமோ என்று அஞ்சி அஞ்சி அணு அணுவாக மனச் சாட்சியைத் துன்புறுத்திச் சாக அடிக்க வேண்டியதில்லை. மக்கள் அங்கே ரத்தமும் சதையும் நரம்புகளும் நிறைந்த சிக்கலான உருவங்கள். பல்சக்கரங்களும் கில்களும் ஆணிகளும் இணையப்பெற்று, அன்றாடம் சுத்தமாகத் துடைத்து எண்ணெய் போட்டு வைத்தால் இலகுவாக இயங்க வேண்டிய இயந்திரங்களாக அவர்களை யாரும் கருதியதில்லை.

மரத்தடியில் ஒரு சிறு புத்தகக் கடை. தினசரிப் பத்திரிகைகளை வாங்க அவளிடம் என்றைக்குமே பணம் இருந்ததில்லை. அவை எப்படி விற்பனையாகின்றன என்பதே அவளுக்குப் புதிர்தான். சில நிமிஷங்கள் நிழலில் நின்று செய்தித் தலைப்புகள் நிறைந்த சுவரொட்டிகளைப் படிப்பது அவள் அன்றாட வழக்கம். ''இரண்டு ஜெர்மனிகள் இருப்பது மறுக்க முடியாத உண்மை; அதனை ஒப்புக்கொண்டேயாக வேண்டும்'' என்று தன்னலத்துக்காக நடுநிலைமை வகிக்கும் நாடுகளுள் ஒன்றின் தலைவர் கூறியிருந்தார். ரோட்டில் கிடந்த ஒரு சிறு கல்லை வலது காலால் உதைத்துத் தனக்கு முன்னால் தள்ளிக் கொண்டே இடா மேலே சென்றாள். 'இரண்டு ஜெர்மனிகள் இருக்கலாம். ஆனால் ஜெர்மானியர் ஒருவரே என்பதனை யார் எடுத்துச் சொல்வது? இரண்டு கண்கள் இருக்கலாம், பார்வை ஒன்றுதான் என்பதனை யார் சுட்டிக் காட்டுவது?'

இரண்டே அறைகள் கொண்ட — சமையலறையையும் சேர்த்து மூன்று — தன் குடியிருப்புக்கு இடா போய்ச் சேர்ந்தாள். தலையைச் சுற்றிக் கட்டியிருந்த பூப் போட்ட துணியை அவிழ்த்து நாற்காலியில் எறிவதற்குப் போனவள், நீண்ட கரத்தைச் சட்டென்று அருவருப்புடன் பின்னுக்கு இழுத்துக் கொண்டாள்.

பின்னங்கால்களுள் ஒன்று ஒடிந்து போய்க் கோணிக் கொண்டிருந்ததால் ஒரு பக்கமாகச் சாய்ந்து விகாரமாகத் தோற்றமளித்தது நாற்காலி. இடா அதனை வைத்த கண் வாங்காமல் பார்த்துக் கொண்டிருந்தாள்.

''டக்.. டொக்; டக்... டொக்....''

நாற்காலியின் கால் இப்போது பழுது பட்டிருக்கவில்லை. சீராகவே இருந்தது. முன்னங்கால்கள் மேலே எழும்ப அதன் முதுகு சுவரைத் தட்டியது... டக்! மீண்டும் நான்கு கால்களாலும் நேராக நின்றது...டொக்!

''டக், டொக்....டக், டொக்...!''

நாற்காலி முன்னும் பின்னுமாக அசைந்தது. ருஷ்ய ராணுவ வீரனொருவன் அதன்மீது அமர்ந்து ஆடிக் கொண்டிருந்தான்.

''டக், டொக்...''

ஜன்னல் விளிம்பில் ஒரு வோபோ பெரிய துப்பாக்கியை மடிமீது வைத்துக் கொண்டு உட்கார்ந்திருந்தான்.

''எதற்காக இங்கே வந்து உட்கார்ந்து கொண்டு எங்கள் பிராணனை வாங்குகிறீர்கள்?'' ஆத்திரம் தீரப் பொரிந்தாள் இடா.

''இந்த ஜன்னல் வழியாக எட்டிப் பார்'' என்று கூறிய வோபோ, இடாவுக்கு இடம் விட்டு ஒதுங்கி நின்றுகொண்டான்.

''அதற்கு அவசியமில்லை. அங்கே மேற்கு பெர்லினைச் சேர்ந்த சாலை ஓடுவது எனக்குத் தெரியும்.''

''எல்லைப்புறத்திலிருக்கிறது இந்த வீடு. ஜன்னல்கள் வழியாக யாரும் மேற்கு பெர்லினுக்குள் குதித்துத் தப்பி ஓடி விடாதிருக்க நாங்கள் காவல். அந்த அசட்டுக் காரியத்தை யாரேனும் செய்ய முற்பட்டால் உடனே சுட்டு வீழ்த்தும்படி உத்தரவு.''

இடாவுக்கு நடுக்கமோ பயமோ ஏற்படவில்லை. இரண்டு நாட்களாகவே நகர் அல்லோல கல்லோலப் பட்டுக் கொண்டிருந்தது அவள் அறிந்தது தானே? அவள் எதிர்பார்த்ததைத்தான் அந்த வோபோ கூறினான்.

''விரைவிலேயே எல்லைப்புறத்திலிருந்து கொண்டு தொல்லை கொடுக்கும் இது போன்ற வீடுகளை இடித்து விடுவோம். பெரியதொரு சுவர் எழும்ப வழி செய்வோம்.'' தங்குதடையின்றிச் சரளமாக ஜெர்மன் மொழி பேசினான் அந்த ருஷ்யன்.

''இடிக்கப் போகிறீர்களா? இந்த வீட்டை இடிக்கப் போகிறீர்களா?'' என்று அலறினாள் இடாவின் வயது முதிர்ந்த தாயார். அந்த வீட்டின் மீது அவள் வைத்திருந்த பாசம் இடாவுக்குத் தெரியும்.

''டக், டொக்...'' ருஷ்யன் அப்பொழுதும் நாற்காலியில் ஆடிக்கொண்டிருந்தான்.

'படீ'ரென்று ஓர் ஓசை! பெரிய பூசணிக்காயைப் போல ருஷ்யன் தரையில் விழுந்து கிடந்தான். லோபோ குபீரென்று சிரித்தான். ஐடாவினால் கூடத் தன் நகைப்பை அடக்க முடியவில்லை.

நாற்காலியின் கால்களுள் ஒன்று ஒடிந்து கிடந்தது. ஐடாவினுடைய தாயாரின் மனமும் ஒடிந்துதான் போய்விட்டது. அன்று ஏற்பட்ட அதிர்ச்சியிலிருந்து அவள் மீளவேயில்லை.

அன்றைய தினத்துக்குப் பிறகு ஒரே ஒரு முறைதான் சில விநாடிகளுக்கு ஐடாவைக் காண வந்தான் அந்த லோபோ. அறைக்குள் நுழையாமல் வாசலில் நின்றவாறே, ''நாங்கள் மாடியில்தானிருக்கிறோம். ஆகவே இந்த ஜன்னல் வழியாக யாரும் தப்பிச் செல்ல முயலாதிருப்பது நல்லது என்று ஸார்ஜண்ட் எச்சரித்து விட்டு வரச் சொன்னான்'' என்றான்.

அதற்குப் பின்னர் அந்த ருஷ்ய சார்ஜண்டோ, லோபோவோ அவள் இருப்பிடத்துக்கு வருவதே யில்லை. அவளுக்கு எந்தவிதமான தொந்தரவும் தருவதில்லை.

**கா**லொடிந்து பரிதாபமாகக் காட்சி தந்த நாற்காலியை விட்டுத் தன் பார்வையைக் கட்டாயப்படுத்தி நகரச் செய்தாள் ஐடா. தலையிலிருந்து அவிழ்த்துக் கையில் வைத்துக் கொண்டிருந்த வண்ண மலர்கள் வரையப் பெற்ற குட்டையைக் கட்டிலில் போட்டு விட்டுத் தானும் அதன் மீது விழுந்தாள். எதைக் குறித்தும் அவள் சிந்திக்க விரும்பவில்லை. ஒரு சூன்யத்தை சிருஷ்டித்துக் கொண்டு சோர்வுற்றிருந்த மூளைக்கு ஓய்வு கொடுக்க நினைத்தாள்.

திறந்திருந்த ஒரே ஜன்னல் கதவு பட்டென்று காற்றிலே சாத்திக் கொள்ள இருள் கவிந்தது.

ஐடாவைச் சுற்றிலும் கனமான சுவர்கள் எழும்பி யிருந்தன. இரண்டு பக்கங்களிலும் எதிரேயும் பின்புறமும் மேலும் கீழுமாக அவளைச் சுவர்கள் சூழ்ந்து கொண்டிருந்தன. இவற்றுக்கு நட்ட நடுவே படுத்தபடியே அவள் மிதந்தாள். ஆறு சுவர்களும் அவளை நோக்கி அங்குலம் அங்குலமாக நகர்ந்தன. அருகே அருகே வந்து கொண்டே யிருந்தன. அறையின் கனபரிமாணம்குறைந்துகொண்டே வந்தது. 'நில் நில்' என்று பீதியுடன் கூற எண்ணினாள் ஐடா. வார்த்தைகள் வெளி வராமல் தொண்டையிலேயே தங்கிவிட்டன. இம்மியளவுக்குக் கூட அவள் அசைய முடியாதபடி சுவர்கள் அவளை நெருக்கிக் கொண்டிருந்தன. மூச்சுத் திணறத் திக்கு முக்காடிப் போனாள் ஐடா.

'வீல்' என்று அலறிய அவள் இருளில் முட்டி மோதிக் கொண்டே ஜன்னலருகே பாய்ந்தாள். அதனைத் தள்ளித் திறந்து இடுப்பு வரை உடலை வெளியே நீட்டி, மேற்கு பெர்லின் மீதாக வீசிக் கொண்டிருந்த காற்றைப் பேராசையுடன் அள்ளி அள்ளிப் பருகினாள்.

கற்பனைக்கும் எட்டாத வகையில் நெடுந்தூரத்துக்கு நெடுந்தூரம் விரிந்து கிடந்த வான வெளியைப் பார்த்தாள் ஐடா. அதன் கீழே ஊர்ந்து செல்லும் மேகங்களையும் அவற்றுக்குப் பொன்னொளி கூட்டும் அஸ்தமன சூரியனையும் கண்டாள். புறாக்கள் சில அவளெதிரே சிறகடித்துப் பறந்தன. நாம் இன்னமும் உயிருடன் தான் இருக்கிறோம் என்ற நினைப்பு ஐடாவுக்குச் சொல்லி முடியாத சந்தோஷத்தை அளித்தது.

கீழே, சாலையில் ஒரு குப்பை வண்டி சற்றுத் தொலைவில் வந்து கொண்டிருந்தது. இரண்டு குதிரைகள் அதனை இழுத்தன. குப்பை வண்டிதான் என்றாலும் அதில் இப்போது குப்பையில்லை. குதிரைகளுக்காகப் பெரிய புல்கட்டுகள் இரண்டைச் சுமந்து முன்னேறிக் கொண்டிருந்தது. கட்டுகளுள் ஒன்று அவிழ்ந்து போகப் புல், வண்டி முழுதும் பரவியிருந்தது. மோட்டார் கார்களுக்கு உள்ளது போல் ரப்பர் டயர்கள் பொருத்தப் பட்டிருந்த சக்கரங்கள். வண்டியைக் குதிரைகள் இலகுவாக இழுத்து வருவதாகப் பட்டது ஐடாவுக்கு.

வண்டி கிட்டத்தில் நெருங்க நெருங்க அவளால் ஆச்சரியத்தையும் ஆனந்தத்தையும் தாங்கவே முடியவில்லை.

''ஹெர்மன்!'' என்று உரக்கக் கூவி அழைத்தும் கரத்தை அசைத்தும் தான் அங்கிருப்பதை வண்டியை ஓட்டிச் செல்பவனுக்குத் தெரிவிக்க விரும்பினாள் ஆனால் தனக்கு நேர் மேலே விழிப்புடன் இருந்த சிப்பாய்களின் நினைவு வரவே தக்க சமயத்தில் ஆவலைச் சிரமப்பட்டு அடக்கிக் கொண்டாள்.

வண்டிக்காரன் ஒரே ஒரு விநாடி நேரம் அவளை ஓரக் கண்களால் கவனிப்பதாய்த் தோன்றியது. பிறகு அவன் எப்போதும், போல் குதிரைகளுடன் அந்நியோந்ய பாவத்துடன் உரையாடுவதில் ஈடுபட்டான்.

**ப**தினைந்து நிமிஷங்களுக்குப் பிறகு ஹெர்மனின் தோளில் முகம் புதைத்து விம்மிக் கொண்டிருந்தாள் ஐடா. தன்னை விட்டால் அவளுக்கு இந்த உலகில் பற்றுதல் வைக்க வென்று வேறு யாருமில்லை என்பதை உணர்ந்தான் ஹெர்மன். இருந்த ஒருத்தியும் இறந்து போனதை அவள் நெஞ்சை நனைத்த கண்ணீர் புலப்படுத்தியது. ஹெர்மனையும் இழந்து விட்டோமோ என்ற கவலை வேறு அவளைக் கடந்த பல நாட்களாகவே வாட்டி வந்திருக்கிறது. பட்டு நூல்களைப் போன்று கொத்தாகத் தொங்கிய அவள் கேசத்தை அன்புடன் அழுத்தித் தடவிக் கொடுத்தவாறே, ''ஐடா! உன்னை அழைத்துப் போகத்தான் நான் வந்து விட்டேனே; இன்னமும் ஏன் வருந்துகிறாய்?'' என்று ஆறுதலாகக் கேட்டான் ஹெர்மன். ஐடாவின் அழுகை ஒருவாறு ஓய்ந்ததும், தான் அங்கு வந்து சேர்ந்த விவரங்களைக் கூறினான்.

சில தினங்களாகவே எல்லைப் புறத்தின் ஒரு வாயிலை உன்னிப்பாகக் கண்காணித்து வந்த அவன், அதிகாலை நேரத்தில் ஒவ்வொரு நாளும் இரட்டைக் குதிரைகள் பூட்டியவண்டி யொன்று கிழக்குப் பெர்லினிலிருந்து வெளிப் படுவதைக் கவனிக்கத் தவறவில்லை. அந்தச் சமயங்களில் ''குப்பைக் கூளமெல்லாம் மேற்கு பெர்லினுக்குத்தான்'' என்று காவலிருந்த ருஷ்ய ராணுவத்தினர் சிலர் வேடிக்கையாகப் பேசிச் சிரித்துக் கொள்வதையும் அவன் கூர்மையான செவிகள் கேட்டிருக்கின்றன. ஐடாவையும் அவள் தாயாரையும் சந்திக்கவும்

தப்புவித்து அமைந்து வரவும் ஹெர்மனுடைய மூளையில் திட்டம் உதயமாகியது.

அந்த வண்டியைப் பின்தொடர்ந்து போய் ஒரே ஒருநாளைக்கு அதனை வாடகைக்கு எடுத்துக் கொள்ளத் தீர்மானித்தான். ஐம்பது மார்க்குகளைத் தந்து, குப்பை அள்ளும் வேலையை விலைக்கு வாங்கிக் கொள்ளும் பிரகிருதியை அதிசயத்துடன் பார்த்தான் வண்டிக்காரன். பணம் கைக்கு வந்து அதனை எண்ணிப் பார்த்துத் திருப்தியடைந்த பிறகு தடையேதும் சொல்லவில்லை அவன்.

அன்று முழுதும் வண்டியைப் பழுது பார்ப்பதில் காலத்தைச் செலவிட்டான் ஹெர்மன். சக்கரங்களுக்கு ரப்பர் டயர்களை மாட்டியதுடன் தேவையான இடங்களிலெல்லாம் நன்றாக எண்ணெய் போட்டான். குதிரைகளுக்கு நிறையத் தீனி வைத்தான். வெகு வேகமாக அவை வண்டியை இழுத்துச் செல்ல வேண்டிய சந்தர்ப்பம் ஏற்படலாம் என்று எதிர்பார்த்து அதற்கு எந்த விதமான குந்தகமும் விளையாதிருக்கத் தேவையான ஏற்பாடுகளையெல்லாம் செய்து கொண்டான். பெரிய பெட்டி ஒன்றினைத் தயாரித்து அதனுள் படுத்தவாறே பிரயாணம் செய்யவிருந்த இருவருக்கும் வண்டி ஆடும்போது உடலுக்கு வேதனை உண்டாகா திருக்க மெல்லிய பஞ்சு மெத்தையை விரித்தான். புல்கட்டுகளுள் ஒன்றினைப் பிரித்துப் பெட்டியின்மீது பரப்பினான். அந்த வண்டிக்காரனைப் போலவே ஓரிரு இடங்களில் ஒட்டுப் போட்ட உடை அணிந்து முதுகையும் கொஞ்சம் கூனிக் கொண்டு வாகனத்தின் முன்புறத்தில் உட்கார்ந்தான். தொப்பி, கண்களை மறைக்கு

எழிலுக்கு மெருகிழைக்க... "'ஹேஸலின்' ஸ்னோ"···· கருக்கம், பரு, மாசு யாவும் மறையும், மென்மை மிளிரும்.

மேனிக்கு மென்மையாக மெருகிடுவதிலே தன்னிகரற்று விளங்குவது "'ஹேஸலின்' ஸ்னோ" உன்னதமான மென்மை...எண்ணெய்ப்பசையின்மை...உல்லாசமூட்டும் தன்மை. உங்கள் சருமத்திற்குப் பட்டுப்போன்ற மழமழப்பு...தென்றல்போன்ற அணைப்பு...ஒளிதவழும் வனப்பு. காலையிலே...மாலையிலே...இரவினிலே...எவ் வேளையிலும் இனிதே பூசிக்கொள்ளலாம். "'ஹேஸலின்' ஸ்னோ" எழிலுக்குப் பாதுகாப்பான ஸ்னோ...கச்சிதமாகப் பவுடர் படிவதற்குவாகான ஸ்னோ...நெகிழ நெகிழ, மென்மை தவழ உங்கள் சருமத்தைப் பொலி வுடன் போற்றும் ஸ்னோ. "'ஹேஸலின்' ஸ்னோ"- அரம்பையர் குலத்தின் பரம்பரை அழகுசாதனம்.

"'ஹேஸலின்' ஸ்னோ" 'பர்ரோஸ் வெல்கம்' தயாரிப்பு. 

மாறு கீழே இழுத்து விட்டுக் கொண்டு தலை குனிந்தவாறே லகானைச் சொடுக்கிறான். ருஷ்ய ராணுவத்தினரும் வோபோக்களும் ஏமாந்துதான் போனார்கள்!

ஹெர்மனுடைய கழுத்துடன் ஒன்றிக் கொண்டிருந்த இடாவின் உதடுகளினூடே கலகல வென்ற சிரிப்பொலி வெளிப்பட்டுப் பரவியபோது உயிர் மணம் நிறைந்த அவள் மூச்சுக் காற்று ஹெர்மனுடைய தொண்டைக் குழியில் குறுகுறுப்பை உண்டாக்கியது. துன்பங்களை யெல்லாம் கடந்து இருவரும் கணவனும் மனைவியுமாக இன்பவாழ்க்கை தொடங்கி விட்டது போல ஒரே உற்சாகம் அவனுக்கு.

"வண்டியைப் பக்கத்துச் சந்தில்தான் விட்டு வைத்திருக்கிறேன். நாளைக்குத் தொடுவானம் வெளுக்கு முன்னரே யாரும் அறியாமல் நீ பெட்டிக்குள் புகுந்து படுத்துக்கொள்ள வேண்டும். கண் துடைப்புக்காகவும் பெட்டியை மூடி மறைப்பதற்காகவும் சில வீதிகளையேனும் சுத்தப்படுத்திக் குப்பை கூளத்தை வண்டியில் குவிக்கப் போகிறேன். பெட்டிக்குள்ளே நீ பத்திரமாக இருந்தாலும் கொஞ்சம் வாடை வீசத்தான் செய்யும்!"

இடா அண்ணாந்து பார்த்து வேடிக்கையாக முகத்தைச் சுளுக்கினாள்.

"அதைச் சகித்துக் கொள்ளவும் பிரயாணத்தைச் சுலபமாக்கிக் கொள்ளவும் இது உதவும்" என்று கூறியவாறே கால் சராய்ப் பையிலிருந்து ஒரு புட்டியை எடுத்து இடாவிடம் தந்தான் ஹெர்மன். "தூக்க மருந்து! இதில் இரண்டை விழுங்கி வைத்தால் எட்டு மணி நேரத்துக்கு உன்னைப் பூகம்பம் கூட அசைக்க முடியாது!"

இப்படி எத்தனையோ விதமான யுக்திகளைக் கையாண்டு பலர் தப்பி ஓடியிருப்பது இடாவுக்குத் தெரியும். மரத்தொட்டி ஒன்றில் பச்சிளம் பாலகனைப் படுக்க வைத்து 'ஹாவல்' நதி நீரத்தில் மிதக்க விட்டு விட்டுத் தாங்களும் அதன் பின்னாலேயே நீந்திச் சென்று மேற்கு ஜெர்மனியை அடைந்த அதிர்ஷ்டத் தம்பதியைக் குறித்து அன்று காலைதான் தொழிற்கூடத்தில் கேள்விப்பட்டது இடாவுக்கு நினைவு வந்தது. சூழ்ச்சி பலிக்காமல் செத்து மடிந்தவர்களையும் அவள் அறிவாள். ஆனால் அதைப் பற்றியெல்லாம் இப்போது அவளுக்கு அக்கறையில்லை. இந்த விநாடியில் ஹெர்மன் அவளுடன் இருக்கிறான். நாளையக் கவலை இன்றைக்கு எதற்கு?

ஹெர்மனின் மார்பில் பதிந்திருந்த இடாவின் கரங்கள் இன்னும் உயரச் சென்றன; வளைந்தன; வளைத்தன. இறுகின. இழுத்தன. குதிகால் மேலெழும்ப, கட்டை விரல்கள் இரண்டு அவள் உடலின் எடையில் பாதியைத் தாங்கின. மீதி பாரத்தை ஹெர்மன் ஏற்றுக் கொண்டான்.

அதிகமாக ஓசைப்படுத்த விரும்பாதது போல் கதவை யாரோ தட்டினார்கள்.

சரேலென்று விலகிக் கொண்டு, "நீங்கள் இங்கே வருவதை யாராவது பார்த்து விட்டார்களா?" என்று கலவரத்துடன் கேட்டாள் இடா.

"இல்லையே? ஒரு வேளை உன் சிரிப்பொலியை உயரே உள்ளோர் கேட்டுச் சந்தேகமடைந்திருக்கலாமோ?"

ஹெர்மனைச் சமையலறையில் மறைந்திருக்கச் செய்து விட்டு இடா கதவைத் திறந்தாள்.

உள்ளே நுழைந்து கொண்டே "எங்கே அவன்?" என்று அதிகார தோரணையில் கேட்டாள் மாடியில் குடியிருந்த தெரிஸா.

"அவனா? யாரது அவன்?"

"இடா! எனக்கொன்றும் தெரியாதென்று நினைக்காதே. மேலே இருந்து ஜன்னல் வழியாகப் பார்த்தேன். குப்பை வண்டி ஒன்றை ஓட்டிக் கொண்டு வந்தது உன் காதலனே தான். பெர்லினில் திடீரென்று இந்த நெருக்கடி உருவாவதற்கு முன்னால் எத்தனை தடவைகள் உங்களிருவரையும் சேர்த்துப் பார்த்திருக்கிறேன்? எனக்கா அவன் முகம் மறந்து போகும்?"

ஹெர்மன் ஒளிந்திருக்க விருப்பமின்றி வெளியே வந்தான். "என்ன வேண்டுமோ சீக்கிரமாகச் சொல்லி விட்டுப் போ!"

அவனைக் கண்டதுமே தெரிஸாவின் தடபுடலெல்லாம் இருந்த இடம் தெரியாமல் மறைந்து விட்டது. மாறாகக் கரங்களை ஒன்று சேர்த்துப் பத்து விரல்களையும் பிணைத்துக் கொண்டு அவன் காலடிகளில் மண்டியிட்டு விழுந்து கெஞ்சத் தொடங்கினாள். "ஹெர்மன்! நீ இடாவைப் பின்னோடு அழைத்துப் போகத்தான் வந்திருக்கிறாய் என்று புரிந்து கொண்டேன். எனக்காக நீ எதையுமே செய்ய வேண்டாம். ஆனால் என் குழந்தைகள்.... அவர்களை...." வாக்கியத்தை முடிக்காமலே தெரிஸா விசும்பி அழத் தொடங்கி விட்டாள்.

"தெரிஸாவுடைய பெற்றோர் ஹாம்பர்க்கில் வசிக்கிறார்கள்" என்றாள் இடா.

பெற்றெடுத்த குழந்தைகளை விட்டுப் பிரிந்து பல நூறு மைல்களுக்கு அப்பால் உள்ள அவர்களுடைய தாத்தா பாட்டியிடமே நிரந்தரமாக இருக்குமாறு அனுப்பி வைக்கத் தயங்காத தாயை வியப்புடன் பார்த்தான் ஹெர்மன். சுதந்திர வாழ்வைத் தன் மக்களுக்குத் தேடித் தர வேண்டும் என்ற ஆர்வம் தாய்ப் பாசத்தையே வென்று விட்டிருக்கிறது!

நான்கு குழந்தைகள் தெரிஸாவுக்கு. அவர்களை அழைத்துப் போவதென்றால் இடாவைத்தான் இழக்க வேண்டியதுதான். அவளுக்காக இன்னொரு முறை வருவதென்பதெல்லாம் அசாத்தியம். இந்தத் தடவையே எல்லைப் புறத்தைக் கடந்து கொஞ்ச தூரம் செல்லும் வரையில் தன் உயிர் தன்னுடையதில்லையே!

"முடியாது!" என்றான் ஹெர்மன். ஒரு கணம் இளகி விட இருந்த தன் நெஞ்சத்தைக் கடினமாக்கிக் கொள்ள ஆதரவு நாடி இடாவின் முகத்தைப் பார்த்தான். ஆனால் அங்கே அவன் கண்டது வேதனையை! ஹெர்மன் மறுத்துரைத்ததற்காக இடா துன்பப்பட்டாள்!

"ஹெர்மன்! வாழ்நாள் முழுதும் என்னைப் பரிதாபமாகத் தோற்றமளிக்கும் பால்வடியும் முகங்கள் நான்கு சூழ்ந்து வருத்திக் கொண்டேயிருக்கும். அதை விரும்புகிறாயா?"

"இடா! இடா! நீ என்ன சொல்கிறாய்! யோசிக்காமல் பேசாதே இடா! வேண்டாம்!" ஹெர்மன் அவளிடம் மன்றாடிக் கேட்டுக் கொண்டான்.

"நான் முடிவு செய்து விட்டேன். அந்தக் குழந்தைகளை இங்கே விட்டு விட்டு என்னால் வர முடியாது!"

வாதாடிப் பயனில்லை. ஐடா பிடிவாதக்காரி. மனக் கசப்புடன் ஹெர்மன் சம்மதம் தெரிவித்துத் தலையசைத்தான்.

ஆனந்தமும் நன்றியறிதலும் பொங்க ஹெர்மனின் புறங்கைகளைக் கண்ணீரால் நனைத்துக் கன்னங்களால் துடைத்துப் பின் காவல் இருந்தவர்களுக்கு ஐயப்பாடு ஏதும் உண்டாகாதிருக்க அவசரம் அவசரமாக எழுந்து சென்றாள் தெரினா.

''மறுபடியும் வர முயலுகிறேன் ஐடா. நிச்சயமாக உன்னை அழைத்துப் போக மீண்டும் ஒரு முறை பிரயத்தனப்படுகிறேன்'' என்ற விரக்தி மனப்பான்மையுடன் கூடிய அவன் முணுமுணுப்புக்கு ஐடாவின் இதழ்கள் முற்றுப் புள்ளி வைத்தன.

விடிவெள்ளி முளைக்கும் நேரத்தில் வீதியிலே நிழலுருவங்களாக அவர்கள் ஓசைப்படாமல் அசைந்தார்கள். ஆளுக்கு ஒரு மாத்திரை கொடுத்து விழுங்கச் செய்த பிறகு குழந்தைகளைப் பெட்டியிலே படுக்க வைத்த தெரினா, ஹெர்மனிடம், ''ருஷ்யன் குறட்டை விடுகிறான். வோபோவும் உட்கார்ந்தபடியே தூங்கி வழிகிறான். தப்பித் தவறி விழித்துக் கொண்டாலும் உடனடியாக அவனுக்குச் சந்தேகம் உண்டாகாது. படுக்கையறையில் எல்லோரும் அயர்ந்து உறங்குவதாகத்தான் எண்ணிக் கொள்வான். இருந்தாலும் நீ சீக்கிரம் புறப்பட்டுப் போ!'' என்று ரகசியம் பேசித் துரிதப்படுத்தினாள்.

உடும்புப் பிடியில் சிக்க வைத்த கரங்களிடமிருந்து சிரமப்பட்டுத் தன்னை விடுவித்துக் கொண்டாள் ஐடா. ஒளி நெருப்பிடமிருந்து விடை பெற்றது. வண்டி நகர்ந்தது.

நாலைந்து வீதிகளிலுள்ள குப்பைத் தொட்டிகள் தன் மீது கவிழ்ந்து காலியான பிறகு, ஆடி அசைந்தவாறு எல்லைப் புறத்தைஅடைந்தது குதிரை வண்டி.

''யாரங்கே! நில்!''

''குப்பை வண்டிதான்'' என்று குரல் கொடுத்தான் ஹெர்மன்.

எட்டுப் பத்து வோபோக்கள் ஆயுதபாணிகளாகத் திபுதிபு வென்று ஓடி வந்து வண்டியைச் சூழ்ந்து கொண்டார்கள்.

''நேற்று மாலையே உன்னைச் சந்தேகித்தோம். வழக்கமாக வண்டி ஓட்டி வரும் கிழவனல்ல நீ என்பது புரிந்தது. ஆனால் எந்த நோக்கத்துக்காக நீ இங்கு வந்திருக்கிறாய் என்பதைத் தெரிந்து கொண்டு கையும் களவுமாகப் பிடிக்கக் காத்திருந்தோம்!''

அருகே ஒரு மரத்தின் பின்னால் மறைந்திருந்த ஐடாவின் செவிகளில் சொற்கள் தெளிவாக விழுந்தன.

''போய் காப்டனைக் கூட்டிக் கொண்டு வா'' என்று வேறொரு குரலும் ஒலித்தது.

சற்று நேரத்துக்கெல்லாம் தாற்காலிகமாக அமைக்கப்பட்டிருந்த ஒரு கொட்டகையினுள்ளிருந்து ருஷ்யக் காப்டன் விழித்தெழுந்து வெளிப்படுவதை ஒண்டியிருந்து கொண்டு ஒற்றைக் கண்ணால் பார்த்தாள் ஐடா. அவனை நன்றாக அடையாளம் கண்டு கொள்ள அவளால் முடிந்தது. 'பெண்ணே, உனக்கென்ன பித்தமா?' என்று அவன் கேட்டு இன்னும் முழுமையாக இருபத்துநாலு மணி நேரம்கூட ஆகவில்லையே?

''ஆம்! எனக்குப் பித்தம்தான்!'' என்று தனக்குள் கூறிக் கொண்டாள் ஐடா.

மரத்தின் மறைவிலிருந்து அந்தப் பெண்ணுருவம் வெளிப்பட்டது. ''காப்டன்!'' என்று அழைத்தது சர்க்கரையாக இனிக்கும் ஒரு குரல்.

ருஷ்யன் திரும்பினான். முதல் நாள் காலை ஏற்பட்ட முதல் சந்திப்பின் பிறகு அவனால் மறக்க முடியாத எழிலுருவம், சில விநாடிகளுக்கு முன்பு அவன் கனவிலே தோன்றிக் கனி மொழி பேசிக் களிப்பூட்டிய கன்னி, இப்போது நிஜமாகவே அவனெதிரே நிற்கிறாள்! கண்களைப் படபடவென்று கொட்டி உற்று நோக்கினான் அவன். இல்லை, இது கனவில்லை; உண்மையேதான்!

அந்தப் பெண்ணின் முகத்தில் பொருள் பொதிந்த புன்னகை அரும்புவதும், இதழ்த் துடிப்பிலே அவள் அவனுடன் அந்தரங்கமாக உல்லாச ரகசியங்களைப் பேசுவதும், கரிய பெரிய விழிகள் சொல்லிலடங்காத, கற்பனைக்கும் எட்டாத இன்பங்களை அவனுடன் பகிர்ந்து கொள்வதாய் உறுதியளிப்பதும் எல்லாம் பிரமையல்ல, நிஜமேதான்! அவனைச் சீண்டிவிட்டு வேடிக்கை பார்ப்பது போல அவள் நிற்கும் பாணி; ஆஜானுபாகுவான அவன் தோற்றத்தை ரசித்து மகிழ்வது போன்ற கண்வீச்சு; பின்னர் அவனிடம் சரணடைய எந்த விநாடியும் காத்திருப்பதுபோன்று மேனியைத் தொய்ய விட்ட நிலை எல்லாம் அவன் விழிகளைப் பிதுங்க வைத்தன. கண்களாலேயே அவளை மென்று விழுங்கிவிட விரும்புபவன் போல அவன் மெல்ல முன்னேறினான்.

''காப்டன்! அந்த வண்டியில் வெறும் குப்பையைத் தவிர வேறொன்றுமில்லை.'' ஐடா தன் குரலின் நடுக்கத்தைக் கஷ்டப்பட்டுக் கட்டுப்படுத்திக் கொண்டாள்.

''ஆமாம், ஆமாம்!'' என்றான் அவன். பக்கத்திலிருந்த ஒரு வோபோவிடமிருந்து துப்பாக்கியை வாங்கி மேலெழுந்தவாரியாக வாகனத்திலிருந்த குப்பையைக் கிளறினான். ''வண்டியைப் போக அனுமதியுங்கள். உம்! சீக்கிரம்!'' என்று உத்தரவிட்டான். வாயினால் சிறு சிறு கவளங்களாக அவன் அள்ளி விழுங்கிய குளிர்ந்த காற்று உடலின் வெப்பத்தைத் தணிக்கவில்லை.

குதிரைகள் நகர்ந்தன, விரைந்தன, குளம்பொலி எழுப்பிப் பறந்தன.

துப்பாக்கியை வோப்போவின் கரங்களில் தூக்கி எறிந்து விட்டு ருஷ்யன் ஐடாவை நோக்கித் திரும்பினான். எரிமலைக் குழம்பாகக் குருதி அவனுடலில் பாய்ந்து கொண்டிருந்தது.

காப்டன் மரத்தை நெருங்கினான். அவன் கரங்கள் நீண்டன. ஐடாவின் உடல் அவனிடம் தஞ்சம் புகுந்தது.

அவள் உள்ளங்கையில் பற்றியிருந்த ஒரு புட்டி நழுவித் தரையில் விழுந்தது. ஹெர்மன் அவளிடம் தந்த அந்த புட்டியில், நான்கு குழந்தைகள் விழுங்கிய நான்கு மாத்திரைகள் போக மீதம் இருபத்தாறு தூக்க மாத்திரைகள் இருக்க வேண்டும்.

ஒரே ஒரு மாத்திரைதான் புட்டியினுள்ளிருந்து வெளிப்பட்டுத் தரையில் உருண்டு ஓடிற்று. அதையும் அவள் கடித்துத் தின்னும் வரை காலதேவன் காத்திருக்கவில்லை.

# எங்களுடைய 'பணம் பிறகு செலுத்துங்கள்' திட்டம் இன்னும் வசதியாக்கப் பட்டுள்ளது




எங்களது, திருத்தியமைக்கப்பட்ட, 'பணம் பிறகு செலுத்துங்கள்' திட்டத்தால் பலன் பெறுங்கள். முதலில் செலுத்த வேண்டிய பணம் முன்னைவிட சொற்பமாக்கப் பட்டுள்ளதோடு பாக்கியை வசதியாகச் சிறு தொகைகளாகச் செலுத்தக் கூடியவாறு காலவரையறை இன்னும் நீடிக்கப்பட்டுள்ளது! இப்பொழுதைய ஏற்பாட்டின்படி பிரயாணக் கட்டணத்தின் தொகையில் 15% உடனடியாகச் செலுத்தினால் போதும்—மீதியை, 20 மாதங்களில் சுலபமான தவணைகளில் செலுத்தலாம்! 'பஸ்ட் கிளாஸ்' 'எகானமி' வகுப்புகளுக்கு, எல்லா சர்விஸ்களிலும் இந்தச் சலுகை உண்டு!

எந்த டிராவல் ஏஜெண்டிடமிருந்தோ, பாங்க் ஆப் இந்தியாவிடமிருந்தோ அல்லது நேராக எங்களிடமிருந்தோ அதிக விபரம் பெறலாம்!

**ஏயர்-இந்தியா**

IWT/AII-2718

பி. ஓ. ஏ. ஸி. மற்றும் காண்டாஸின் ஒத்துழைப்புடன்

# கூந்தலை நன்றாக வாரி முடிவதின் வனப்பு

கூந்தலை வழவழப்பாகவும், பொலிவுடனும் விளங்கச் செய்யும்
**ஸ்வஸ்திக் பெர்ப்யூம்டு காஸ்டர் ஆயிலைத்** தடவி
வாரினால் உங்கள் கூந்தல் அழகாகத் தோற்றமளிக்கும்.






கூந்தல் அலங்காரத்தைச் செய்யும் விதம்:

ஸ்வஸ்திக் பெர்ப்யூம்டு காஸ்டர் ஆயிலைத் தடவி கூந்தலை நன்றாக இழைய வாரவும். அடியில் சிப்பளினால் கூந்தலை நன்றாகக் கட்டவும். மேல்புறத்தைநோக்கி கூந்தலை வளையமாக மடித்து, பின்செய்து, எஞ்சியுள்ள கூந்தலை இடதுபுறம் தொங்கும்படி விடவும். (படம் 1.) எஞ்சியுள்ள கூந்தலை வளையமாகச் சுற்றி, நுனிப் பாகத்தை உள்ளே சொருகிவிடவும். (படம் 2.) கொண்டையை நன்றாகப் பின்செய்து, நகைகளினால் அலங்கரிக்கவும்.

**ஸ்வஸ்திக் ஹெயர் ஸ்டைல் "அலங்கார்"**

**ஸ்வஸ்திக்**
ஆயில் மில்ஸ்
லிமிடெட்
பம்பாய்.

Shilpi S.O.M. 16-A TAM

# திருமூலர் தவமொழி

ராஜாஜி

36

தெய்வ சிந்தனை உண்டாவதற்கும், பக்தி மேலிடுவதற்கும் தெய்வ அருளே காரணம். 'அவன் அருளால் அவன் தாள் வணங்குதல்' என்பது நம்முடைய சாஸ்திரம். நாமே தீர்மானித்து ஆண்டவனை வணங்குகிறோம், வேண்டுகிறோம் என்றெல்லாம் நினைக்கிறோம். ஆனால் அதுவும் அவன் அருளன்றி வேறில்லை. அவன் அருளைக் கேட்பதற்கே அவன் அருள் வேண்டும். வேறு வழியில் மனம் போகாமல் அவன் அருளைக் கோருவதே பெரிய பாக்கியம். இந்த ஆனந்த அனுபவத்தைத் திருமூலர் பாடுகிறார்.

**சிந்தையின் உள்ளே**
**எந்தை திருவடி**

[சிந்தை—உள்ளம். எந்தை திருவடி—அப்பனாகிய இறைவனுடைய திருப்பாதங்கள். திருப்பாதம் என்பது இறைவனிடம் பக்தன் பெறும் அருள்.]

என்னுடைய உள்ளத்தில் எப்போதும் இறைவனுடைய திருப்பாதங்கள் நிற்கின்றன.

**சிந்தையும் எந்தை**
**திருவடிக் கீழது**

இறைவன் வந்து என் உள்ளத்தில் திருவடியைப் பதித்து நின்ற காரணத்தினாலேதான் அல்லவா, என் உள்ளம் எப்போதும் அவன் திருவடிக்குக் கீழ் நிற்கிறது! அதாவது அவன் அருளால் என் சிந்தை அவன் அருளை நாடுகிறது.

**எந்தையும் என்னை**
**அறிய கிலனாகில்**

[அறியகிலன் ஆகில்—அறிய மாட்டான் என்றால். என்னை அறியகிலனாகில்—என்னை ஒரு பொருட்டாக நினைக்கவில்லை யென்றால். அதாவது என்னிடம் என் அப்பன் தனது கருணையைச் செலுத்தவில்லை என்றால்.]

**எந்தையை யானும்**
**அறியகி லேனே**

நானும் என் அப்பனை அறியாமல் வீணாவேன்.

என் தந்தை என்னை மகன் என்று கருதி ஆட்கொண்டாலன்றி, நான் என் தந்தையை அறியாமல் தவிக்க வேண்டியதுதான். அதாவது இறைவன் ஆன்மாவுக்குக் கருணை செய்து பற்றுக் கொடுத்தாலன்றி, ஆன்மா பக்தியின் அருமையை அறியாமல், இறைவனுடைய அருளை நாடாமல் கெட வேண்டியதுதான்.

**சிந்தையி னுள்ளே**
**எந்தை திருவடி**
**சிந்தையும் எந்தை**
**திருவடிக் கீழது**
**எந்தையும் என்னை**
**அறிய கிலனாகில்**
**எந்தையை யானும்**
**அறியகி லேனே**

பாட்டின் கருத்து. இறைவனிடம் பக்தி செலுத்துகிறவர்கள் அந்தப் பக்தியைக் குறித்து அகம்பாவம் அடையாமல், அது ஆண்டவனுடைய அருள் என்றே தெரிந்து அடக்கத்துடன் பக்தி செலுத்த வேண்டும். நாம் செலுத்தும் பக்தி நாம் கடவுளுக்குக் கொடுக்கும் ஒரு பொருளில்லை. அவன் நமக்குத் தந்த பொருள் அது! அவன் அருள் இருந்தால் பக்தி தானாகவே தோன்றும். அதைத்தான் உண்மைப் பக்தர்கள் செலுத்துகிறார்கள்.

ஆன்ம தரிசனம் பெற்றுப் பேரின்பம் அடைந்த அனுபவத்தைப் பாடுகிறார் திருமூலர். இந்த உடம்புக்குள்ளே புகுந்து நிற்கின்ற இறைவனை அகப்பார்வையினால் கண்டு ஆனந்தித்த தன்மையை எடுத்து மொழிகிறார்.

**நேடிக்கொண்டு என்னுள்ளே**
**நேர்தரு நந்தியை**

[நேடிக் கொண்டு—தேடிப் பிடித்துக் கொண்டு, என் உள்ளே—என் உள்ளத்திற்குள், நேர்தரு — தரிசனம் தருகிற. நந்தியை—இறைவனை.]

நான் அவனைத் தேடுவது என்பதில்லை. அவனே என்னைத் தேடிக் கொண்டு வந்து என் உள்ளத்தில் எழுந்தருளித் தரிசனம் தருகிறான். அப்படிப்பட்ட நந்தியாகிய இறைவனை.

**ஊடுபுக்கு ஆரும்**
**உணர்ந்தறிவார் இல்லை**

[ஊடுபுக்கு — உள்ளே புகுந்து. யாரும்—மக்களில் யாரும். உணர்ந்தறிவாரில்லை—உணர்வினால் அறிந்து கொள்கிறார்கள் இல்லையே. அறிவது என்றால் உணர்ந்து பக்தி செலுத்துவது.]

இறைவன் இந்த உடம்புக்குள்ளே நம்மைத் தேடி வந்து புகுந்து நின்ற போதிலும், உடம்பினுள் பார்வையைச் செலுத்தி, உள்ளுணர்வினால் அவனை மக்கள் அறிகிறார்களில்லையே என்று இரக்கப்படுகிறார் முனிவர். இனி, தம்முடைய அனுபவத்தைச் சொல்லுகிறார்.

**கூடுபுக்கு ஏறலுற்**
**றேன் :**

[கூடு — உடம்பு. புக்கு—புகுந்து. ஏறலுற்றேன் — உள்ளே செல்லத் தொடங்கினேன்.]

**கூடுபுக்கு ஏறலுற்**
**றேன் ; அவன் கோலங்கள்**
**மூடிக்கண் டேன் :**

[கோலங்கள்—தோற்றத்தின் அழகுகள். மூடிக் கண்டேன்—கண்களை மூடிய நிலையில் உள்ளே கண்டேன்.]

கண் இமைகளை மூடித் தியானத்தில் ஒருமித்தேன். அவனுடைய கோலங்களைக் கண்டேன். பிறகு என்ன நேர்ந்தது?

**கூடுபுக் கேறலுற்**
**றேன் ; அவன் கோலங்கள்**
**மூடிக்கண் டேன் ; உலகு**
**ஏழும்கண் டேனே !**

கண்களை மூடித் தியானித்ததும் அந்த அகப்பார்வையிலே இறைவனைக் கண்டேன். ஏழு உலகங்களும் இறைவனுக்குள் அடங்கி நிற்பதைக் கண்டேன் !

**நேடிக்கொண் டென்னுள்ளே**
**நேர்தரு நந்தியை**
**ஊடுபுக் காரும்**
**உணர்ந்தறி வாரில்லை**
**கூடுபுக் கேறலுற்**
**றேனவன் கோலங்கள்**
**மூடிக்கண் டேனுல**
**கேழுங்கண் டேனே !**

## எழும்பூர் ஸ்ரீ வேத சபை

சென்ற பதினொரு ஆண்டுகளாக ஜகத்குரு காஞ்சி காமகோடி பீடாதிபதிகளின் பூரண அனுக்ரஹத்துடன் எழும்பூர் வேத சபை நடந்து வருவது ஆஸ்திகசீலர்களுக்குத் தெரிந்த விஷயம். ஆச்சார்யாளின் ஆக்ஞையின்படி 1962 பிப்ரவரி மாதம் முடிய ஆங்காங்கு வேத பாராயணமும், அர்த்த விசாரங்களும் நடக்கும்படி மயிலை சங்கராலயத்துக்கு முதல் உத்தரவு. எழும்பூர் வேத சபையின் ஆதரவில் சென்ற 12-11-61 முதல் சாம வேத லக்ஷண வித்வான் மாயவரம் பிரம்மஸ்ரீ ராமநாத தீக்ஷிதர் முன்னிலையில் ஆரம்பிக்கப்பட்டுப் பிரதி ஞாயிறு தோறும் மாலை 3-30 முதல் 4-30 வரை எழும்பூர் கவர்ன்மெண்டு பிரஸிடென்ஸி பெண்கள் உயர்நிலைப் பள்ளியில் வேத பாராயணம் நடைபெற்று வருகிறது. ஆஸ்திகப் பெருமக்கள் பங்கெடுத்துக் கொண்டு வேத வியாசரின் அனுக்ரஹத்துக்குப் பாத்திரராகுமாறு கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள். ஸ்ரீ வேத சபையில் பரம ஏழைகளுக்கு இலவசமாக வேத பாடமும், ஸ்தோத்திரப் பாடங்களும் கற்பிக்கப்படும் என்று காரியதரிசி அறிவிக்கிறார்.

# துவெள்ளம்

**இரண்டாம் பாகம்**

முதல் அத்தியாயம்

## கிழக்கு வெளுத்தது

இருநூறு ஆண்டுகளுக்கு மேலாக அடிமைப்பட்டுக் கிடந்த இந்த நாட்டில் பெரும்பாலான மனிதர்கள் சிறிது சிறிதாக உணவை இழந்தார்கள்; உடையை இழந்தார்கள்; உழைப்பை இழந்தார்கள். உரிமை அற்ற மந்தைக் கூட்டமாக மாறிக்கொண்டுவந்தார்கள்.

இந்த மந்தைக் கூட்டத்தின் மத்தியில் தான் ஓர் விந்தை மனிதர் தோன்றினார். அவர் மற்றவர்களின் பசியைப் போக்கு வதற்காகத் தாம் பட்டினி கிடந்தார். மற்றவர்களுக்கு உடைகள் கிடைக்க வேண்டுமென்பதற்காகத் தம் உடைக ளைக் குறைத்துக் கொண்டார். மற்ற வர்கள் விடுதலை பெறத் தாமே பல துன்பக் கொடுமைகளை அநுபவித்தார்.

அவர் எளியவர்களிலும் எளியவர்; கூரைக் குடிசையில் வாழ்ந்தவர். ஒதுக்



கப்பட்டவர்களுடன் உறவாடியவர். ஆனால் வலியவர்களிலும் வலியவர்; போர்வீரர்களில் தலைசிறந்த போர் வீரர். ஆணவத்துக்கும் அழிவுக் கருவி களுக்கும் எதிராக அறத்தையே ஆயுத மாகக் கொண்டவர். அஞ்சாநெஞ்சம் கொண்டவர்; ஆனால் அன்பு செலுத்து வதிலோ குழந்தையுள்ளம் பெற்றவர். — அவரே காந்தியடிகள்.

ஐந்து ஆண்டுகளுக்கு முன்பாக அவர் தொடங்கிய கடைசிப் போராட் டம், தொடங்கப் பெறுமலே தோற்றுப் போய் விட்டதாகப் பலர் நினைத்தனர். ஆனால் அதற்கு என்றுமே தோல்வி யில்லை என்பதும் எப்படியும் அது இறுதியில் வெற்றி பெற்றே தீரும் என்பதும் நிச்சயமாகி விட்டது. முளையி லேயே அறப்போரைக் கிள்ளிவிட்டதாக நினைத்த வெள்ளைக்காரர்கள், முடிவில் தோற்றுப் போனது தங்களது கண் மூடித்தனமான வன்முறைச் செயல்கள் தான் என்பதைக் கண்டுகொண்டனர். நாட்டுக்கு விடுதலை கொடுக்கச் சம்ம தித்து விட்டார்கள்.

இருள் கவிந்து கிடந்த நாட்டின் கீழ் வானத்திலே சுதந்திரக் கதிரவனின் முதற் சுடர்கள் ஒளிவீசத் தொடங்கின. கிழக்கே வெளுத்து வந்தது. இடைக் காலத்தில் ஓர் அரசாங்க மாற்றமும் நடைபெற்று, விடுதலைக்கான நாளும் குறிப்பிட்டு விட்டார்கள்.

இமயம் முதல் குமரி வரையிலும் எங்குமே ஒரு குதூகலம். பலருக்கு இது நம்ப முடியாத செய்தியாகவே இருந்தது. திடீரென்று ஏற்பட்டு விட்ட கால மாற்றத்தைக் கண்டு திகைத்தார்கள் சிலர்; பதறித் துடித் தார்கள் பலர்.

காலம் யாருக்காகவும் காத்திருப்ப தில்லையே? மனிதன் வலியவன் ஆகி விட்டால் காலம் அவனுக்குப் பணிந்து கொடுக்கிறது; இல்லையேல் அவனைக் காலின் கீழ் போட்டு நசுக்கி மிதித்துச் செல்கிறது. ஆனால் அது காத்திருப்பது மட்டும் இல்லை.

இந்த மாறுதலைக் கண்டு திடுக்கிட்ட வர்களில் பெரியபாளையத்துப் 'பெரிய' மனிதரான குமரவேலும் ஒருவர். இருந்தாற் போலிருந்து பெரியபாளை யம் கிராமத்துக்கு ஆனந்த வெறி பிடித்து விட்டது போல் அவருக்குத் தோன்றியது. மக்கள் கூட்டம் கூட்ட மாகப் பாரதியார் பாடல்களைப் பாடிக் கொண்டு தெருக்களில் தலைநிமிர்ந்து நடந்து வந்தார்கள். காந்தியடிகளின் பெயரைக் கூவி விண்ணதிர முழக்க மிட்டார்கள். — ஆனால் போலீஸ் காரர்கள் அவர்களை மிரட்டவுமில்லை; அடிக்கவுமில்லை; சிறையில் தள்ள முன்வரவுமில்லை!

இந்தக் காட்சி தான் குமரவேலுக்கு மிகுந்த மன வேதனையைக் கொடுத்தது. ''கெட்டுப் போச்சு, கெட்டுப் போச்சு, காலம் கெட்டுப் போச்சு! காந்தி கையில் நாட்டைக் கொடுத்திட்டு வெள்ளைக் காரன் கப்பலேறிப் போயிடுவான் போலிருக்கே!'' என்று முணுமுணுத் தார் அவர்.

பல வழிகளிலும் யோசனை செய்து விட்டு, பல பேர்களிடம் விசாரித்துப் பார்த்து விட்டு, ஒரு நாள் இரவு தம் முடைய வீட்டில் கூட்டாளிகள் இருவ ரோடு ஆலோசனைகள் நடத்தினார். அவர்களில் ஒருவர் அவருடைய மைத் துனர் வீரப்பன்; மற்றொருவர் தூரத்து உறவினர் குப்புசாமி.

வீரப்பன் குமரவேலின் சார்பில் கோர்ட்டு, வழக்கு, அதிகார உலகம் முதலிய இடங்களில் பழகிச் செய்யவேண் டிய காரியங்களைச் செய்யக் கூடியவர். ஒல்லியாக உயரமாக இருப்பார். குமரவேலையும் விட இனிக்கப் பேசி, எடுத்த காரியத்தை முடிக்கக் கூடியவர். மாட்டுத் தரகராகத் தம் வாழ்க்கை யைத் தொடங்கி, மைத்துனர் குமர வேலுவால் உயர்ந்தவர்.

குப்புசாமியோ கிராமவாசிகளை மிரட்டி உருட்டத் தெரிந்தவர். எழுத் தில் எழுத முடியாத வாய் வார்த்தை களைக் கொட்டி, மக்களை ஏசிப் பேசி விவசாயம் முதல் வியாபாரம் வரையி லும் குமரவேலுக்காகக் கவனிப்பவர். குமரவேலைவிடக் குட்டையான இந்த இரண்டு மந்திரிகளின் துணையால்தான் குமரவேல் அந்தக் கிராமத்துக்குத் திடீரென்று ராஜாவாக மாறினார்.

குமரவேல் தாம் அவர்களை அழைத்த தற்கான விவரத்தைக் கவலையோடு வெளியிட்டார்.

''வெள்ளைக்காரனாலே ஆளமுடியல் லேன்னாலும் ஜப்பான்காரனோ, ஜெர்மன் காரனோ வந்து நம்ப நாட்டை ஆளப் போகிறான்னு நினைச்சோம். ஆனால் திடீர்னு, இப்படி நம்மவங்க கையிலே கொடுத்துட்டுப் போகப் போறானே?''

''ராமன் ஆண்டா நமக்கென்ன? ராவணன் ஆண்டா நமக்கென்ன? நம்மை யார் வந்தாலும் அசைக்க முடியாது'' என்றார் வீரப்பன்.

அதை ஒப்புக் கொள்ளாதவர் போல் தலையை ஆட்டினார் குமரவேல்.

''மடியில் கனமில்லாதவனுக்கு வழி யிலே பயமில்லே. நாமெல்லாம் மடி யிலே கனமிருக்கிறவங்க. நம்ம எப்படிப் பயமில்லாமல் வாழ முடியும்? காசைத்

தேடிச் சேர்த்து வைக்கிறது ஆபத்துங்கிற காலம் வந்திடுச்சே!''

குமரவேலின் பயத்தைக் கண்டு வாய் விட்டுச் சிரித்தார் வீரப்பன். ''கையிலே காசில்லாத சுபோதிப் பயல்கள் மேடையிலே பேசுகிற பேச்சையெல்லாம் நீங்க உண்மையின்னு நம்புறீங்களா? அவனுக்கு முன்னுலேயே கொஞ்சம் காசை வீசி எறிஞ்சு பாருங்க! மேடைப்பேச்சை நிறுத்தி விட்டு, காசைப் பொறுக்கக் கீழே இறங்கி ஓடி வரமாட்டானு?—காசைக் கொடுத்தா எதையும் யாரையும் விலைக்கு வாங்கிடலாமுங்க.''

குமரவேல் வீரப்பனின் பேச்சை நம்பாதவர் போல் தலையைச் சொறிந்தார். ''காந்தியோட சேர்ந்தவங்களை அப்படி நினைக்க முடியாது, வீரப்பா! கொஞ்ச நாளைக்கு முன்னுலே அவரோட சீடர் ஒருத்தர் பேசின பேச்சை நீ பத்திரிகையில் படிச்சுப் பார்த்தியா? அந்தச் சீடர் ஒரு பிரபுவோட பிள்ளை. தன் சொத்து, சுகம், வீடு வாசல்



எல்லாம் காந்தி பேச்சைக் கேட்டு இழந்தவர். அவர் பேச்சை நினைத்தால்தான் என் அடி வயிறு கலங்குது.''

''அப்படி அவர் பிரமாதமா என்ன பேசிட்டார்?'' என்று அலட்சியமாகக் கேட்டார் வீரப்பன்.

''அவருகிட்டே அதிகாரம் இருந்தால் கறுப்பு மார்க்கெட்காரங்களையெல்லாம், கள்ளத்தனமா வியாபாரம் செய்கிறவங்களையெல்லாம் தூக்குப் போட்டுடுவாராம்.''

இதைக் கேட்டு இன்னும் பெரிதாய்ச் சிரித்தார் வீரப்பன். குமரவேல் அதைக் கண்டு முகம் சுளித்தார். உண்மையிலேயே அப்போது அவருக்கு அடிவயிற்றில் புளியைக் கரைத்துக் கொண்டுதானிருந்தது.

''கள்ள வியாபாரம் செய்யாமல் நியாயமாய்ப் பிழைக்க முடிகிற காலம் வந்தால் நம்ப எதற்காக அதைச் செய்யறோம்? இந்தக் கள்ளக் காசிலே நம்ப எத்தனை எத்தனை பேருக்குப் பங்கு கொடுக்க வேண்டியிருக்கு? இந்த யுத்த காலத்திலே, நம்ப லஞ்சம் கொடுக்காமல் எந்தக் காரியத்தையாவது செய்து கொள்ள முடிஞ்சுதா? — உள்ளுக்குள்ளே சுத்தமில்லாமல் இருக்கிறப்போ, வெளியிலே மட்டும் எப்படிச் சுத்தம் இருக்குமாம்?''

''நாளைக்கு இதெல்லாம் நம்ப அவுங்ககிட்டே பேச முடியுமா?''

''ஏன் பேச முடியாது? திருட்டுக்காக சம்பாதிச்சவனையெல்லாம் தூக்கிலே போடணும்னு இந்த நாட்டிலே இருக்கிற அத்தனை தந்திக் கம்பங்களும் பத்தாதே!... இந்தா பாருங்க; அதிகாரம் இருக்கிற இடத்திலே அப்பழுக்கு இருக்கிற வரையிலே நம்பளை யாரும் எதுவும் செய்து கொள்ள முடியாது!'' என்று அடித்துப் பேசினார் வீரப்பன்.

குமரவேல் தாம் எதிர்காலத்துக்காக வைத்திருந்த திட்டங்களையும், அவற்றுக்கு வரக்கூடிய சங்கடங்களையும் அவர்களிடம் விளக்கினார்.

பெரியபாளையம் இரா



மம் அவரைப் பொறுத்த மட்டில் இனிச் சிறியதாய்ப் போய் விட்டது. மாதாமாதம் ஆயிரக்கணக்கிலேதான் சம்பாதிக்க முடிந்தது. ஆகவே; கிராமத்து விஷயங்களை மற்றவர்களிடம் விட்டுவிட்டு, லட்சக் கணக்கில் சம்பாதிக்கும் வழிகளைப் பற்றி அவர் யோசித்தார். இந்தச் சமயத்தில்தான் பணக்காரர்களையும் சமஸ்தானாதிபதிகளையும் கட்டிக் காத்த வெள்ளைக்காரன் அவர்களைக் கைவிட்டுவிடுவான் போல் தெரிந்தது.

குமரவேலின் திட்டங்களைக் கேட்ட வீரப்பன் மிகவும் உற்சாக மடைந்தார். லட்சக் கணக்கில் வேட்டையாடும் பொறுப்பை அவருக்கு விட்டு விட்டால் ஆயிரக் கணக்கில் பணம் புரட்டும் வசதி தமக்குக் கிடைக்குமல்லவா?

''உங்களோட திட்டங்களுக்கு ஒரு சங்கடமும் ஏற்படாமல் பாதுகாக்க வேண்டிய பொறுப்பு என்னுடையது. அதை எங்கிட்டே விட்டுடுங்க.''

''சரி, நம்ம இப்ப என்ன செய்யிறது?'' என்றார் குமரவேல்.

ஒரு கணம் யோசனை செய்து பார்த்த வீரப்பன், ''இப்போ நம்ப முருகையன் இங்கே இருந்திருந்தால் நமக்குக் காரியமெல்லாம் சுலபமாக முடிஞ்சிருக்கும்; இல்லாததுனாலேயும் ஒண்ணும் நின்னு போய் விடாது'' என்றார்.

முதன் முதலாக அப்போது தான் முருகையனைப் பற்றி நினைத்தார் குமரவேல். அவருடைய நினைவு அவனைத் தொடர்ந்து சென்னைக்குச் சென்றது. சென்னையில் உள்ள சித்திராவின் குடும்பத்தாரைப் பற்றியும் வட்டமிட்டது. ''அங்கே சித்திராவின் அண்ணா மாணிக்கம் இருக்கிறானே!'' என்று தமக்குள் நம்பிக்கையோடு சொல்லிக் கொண்டார் குமரவேல்.

''முதல்லே நான் சொல்றதைக் கவனமாகக் கேட்டுக்குங்க! சீக்கிரத்திலே நாட்டுக்குச் சுதந்திரம் கொடுக்கிற அன்னைக்கு இந்த ஊரிலே பிரமாதமா விழாக் கொண்டாடுவாங்க. அந்த விழாவிலே நம்ம முன்னாலே நிக்கணும்.''

''என்ன!'' என்று திடுக்கிட்டார் குமரவேல். ''ஒருத்தன் கூட நம்மைச் சேர்த்துக்க மாட்டானே? நம்மை வெள்ளைக்காரனோட கால் பிடிக்கிற துரோகின்னு நமக்கு முன் ஏசுறானே!''

''எல்லா ஏச்சையும் ஒரே நாளிலே வாழ்த்தாக மாத்துற சக்தி பணத்துக்கு இருக்கு! நம்ம ஜனங்களைப் போல் முட்டாள் கூட்டத்தை இந்த உலகத்திலேயே வேறே எங்கும் பார்க்க முடியாது. அவுங்களை எந்தச் சமயத்திலே எப்படி வேணும்னாலும் ஏமாத்தலாம். சுதந்திர தினத்தன்னைக்கு ஏழை எளியவர்களுக்கெல்லாம் ஒரு வேளைச் சாப்பாடு போடறதாச் சொல்லுங்க. அது ஒண்ணே போதும்! மறுநாளைக்குப் பாருங்க. உங்களைப் போல வள்ளல் இந்த உலகத்திலேயே வேறெ கிடையாதுன்னு சொல்வான். அந்த விழாவுக்கு நானே உங்களைக் கூப்பிட ஏற்பாடு செய்யறேன். நானே உங்களுக்கு மாலை போட வைக்கிறேன். நீங்க மட்டும் 'காந்தி மிகப் பெரிய மகானுச்சே!'ன்னு ரெண்டு வார்த்தை பேசிப்புடுங்க.''

''காந்தியைப் பத்தியா?'' என்று திகிலோடு கேட்டார் குமரவேல்.

''இனிமேல் நீங்க உங்க நிறத்தை மாத்திக் கிட்டாத்தான் முடியும். பச்சோந்தி பார்த்திருக்கீங்களா, பச்சோந்தி? அப்படி மாத்திக் கிட்டாத்தான் இனிப் பிழைக்க முடியும்.''

தம் மைத்துனர் வீரப்பனின் யோசனைகளைக்கேட்டுப் பயம்நீங்கினார் குமரவேல்.

சுதந்திரக் கதிரவனின் ஒளியால் கிழக்கு வெளுத்துக் கொண்டிருந்த அதே வேளையில், அந்த ஒளி எல்லா மக்கள் மீதும் பட்டு விடாமல் தடுக்கும் பொருட்டு அங்கங்கே கரிய மேகங்களும் வானத்தில் குவியத் தொடங்கின.

## இரண்டாம் அத்தியாயம்

# நடைபாதை நாடகங்கள்

வீட்டை விட்டுக் கிளம்பிய முருகையனுக்கு வேறு எந்த இடத்துக்குப் போவதென்று தெரியவில்லை. கால் போன போக்கில் அவன் நடந்தான்; தெருக்கள் திரும்பிய திசையில் திரும்பினான்; ஒரு முடிவுமே ஏற்படுத்திக் கொள்ள முடியாமல், அலைபட்ட துரும்பென அவன் மிதந்தான்.

'எங்கே போவது? என்ன செய்வது?' இந்த இரண்டு எண்ணங்களும் சம்மட்டிகளாக மாறி அவன் மண்டையைப் பிளந்து கொண்டிருந்தன.

அவனிடம் இளமை இருந்தது; உடலில் வலுவிருந்தது. மூளையில் சிறிது அறிவிருந்தது. அவன் எழுதப் படிக்கக் கற்றிருந்தான். கடற்கரையில் கடலை விற்கவும் அவனுக்குத் தெரியும். —இவ்வளவு மூலதனங்கள் அவனிடமிருந்தும் அவனுக்குப் பிழைப்பதற்கு ஒரு வழி தென்படவில்லை.



## தொண்டை மற்றும் மார்பு உபாதைகளுக்குக் குணமளிக்கும்

# பெப்ஸ் வில்லைகளை

### உட்கொண்டால், உங்கள் இருமல் உடனேயே அகலும்

பெப்ஸ் வில்லை ஒன்றைச் சுவைத்து ஆவி போன்ற அதன் சத்து குணமளிக்க வேலை செய்வதை உணருங்கள். வலியைக் குறைக்கவும், தொண்டைப் புண், பிராங்கைடிஸ், இருமல் மற்றும் ஜலதோஷம் இவைகளுக்குக் காரணமாகிய கிருமிகளை அகற்றவும் உதவியளிக்கிறது. பெப்ஸ் உடனடி நிவாரணம் அளித்து விரைவில் குணமடையச் செய்கிறது.



**பிராங்கைடிஸ், தொண்டைப்புண், மண்டைநீர், அடைப்பு, ஜலதோஷம் மற்றும் இருமலுக்கு உடனேயே நிவாரணமளிக்கிறது.**

எல்லா மருந்து வியாபாரிகளிடமும் கிடைக்கும்.

PPY-54-TAM

**ஸி. இ. புல்போர்ட் (இந்தியா) பிரைவேட் லிட்**

சோல் ஏஜண்டுகள் :

தாதா & கோ., 86 அங்கப்ப நாயக்கன் தெரு, சென்னை-3













# ராபின் ப்ளூ*

* ராபின் அல்ட்ராமரைன் நீலத்திற்கு பிரபலமான பெயர்

இயற்கையில் கவர்ச்சிகரமான வெண்மை யளிப்பது

**அட்லாண்டிஸ் (ஈஸ்ட்) லிமிடெட்**
(இங்கிலாந்தில் இணைக்கப்பட்டது)

ARBC-1 TM

# ரெக்ஸ்

## ஜெல்லி



**இன்பமான காட்சி...மிகுந்தசுவை...மிகவும்நல்லது!**

இது சுவை மிகுந்தது. பழங்களின் மணம் கொண்டது. எளிதில் தயாரிக்கக்கூடிய ஒரு பண்டம். ரெக்ஸ் ஜெல்லி கிரிஸ்டல்களை வெந்நீரில் கலந்தால் போதும். பிறகு போதுமான அளவு குளிர்ந்த ஜலம் அதோடு சேர்த்து அந்தக் கலவையை ஒரு பைன்டுக்கு, (அதாவது 20 அவுன்ஸ்) சமமாக ஆக்கிக்கொள்ளுங்கள். அதை அச்சியில் ஊற்றி, ஐஸின் மேல் ஜெல்லியை உறைய வையுங்கள்.

அது குடும்பத்தார் விரும்பும் போஷகமளிக்கும் லேசான பண்டம். வியாதியிலிருந்து சுகமடைந்தவருக்கும் கூட நல்லது.

ரெக்ஸ் ஜெல்லி கிரிஸ்டல்கள் 6 சுவைகளில் கிடைக்கின்றன. ராஸ்பெரி, ஸ்ட்ருபெரி, லெமன், பைனபிள், ஆரஞ்சு, செர்ரி.






கார்ன் பிராடக்ட்ஸ் கோ. (இந்தியா) பிரைவேட் லிட்.

தென் இந்தியாவிற்கான ஏஜெண்டுகள்: பாரி & கம்பெனி லிமிடெட்

நண்பன் குருசாமியைப் பற்றி நினைவு வந்தது முருகையனுக்கு. அவனுடைய முதல் நாடகம் நன்றாக இருந்ததால், தொடர்ந்து இரண்டு மூன்று இடங்களில் நடைபெற்றன. பிறகு பத்து நாட்களாக அவனைப் பற்றிய ஒரு விவரமும் தெரியவில்லை. அவன் ஊரில் இருந்திருந்தால் கருணாவின் மூலம் கேள்விப்பட்டு, முருகையன் நலமில்லாமல் கிடந்த சமயத்தில் வந்து பார்த்திருப்பான்.

அவனுடைய ஒத்திகைக் கூடத்தைத் தேடிக் கொண்டு போய்ச் சேர்ந்தான் முருகையன். பல சந்துகளைத் தாண்டிய பின்பு, ஒரு சுற்றுச் சுவருக்குள் நீண்டதொரு தாழ்வாரமும் ஓர் அறையும் இருந்தன. அறைக் கதவு திறந்திருப்பதைக் கண்டவுடன் முருகையனுக்கு நம்பிக்கை பிறந்தது. தாழ்வாரத்தில் ஒருவரையும் காணவில்லை.

''குருசாமி!'' — வெளியில் தயங்கி நின்றவாறே கூப்பிட்டான்.

குருசாமிக்குப் பதிலாக மற்றோர் இளைஞன் எலும்புக் கூடு போல் வெளியில் வந்து நின்றான். கைகூப்பி வணக்கம் செலுத்தினான்.

''வாங்க! அண்ணா வெளியூருக்குப் போயிருக்கிறார். உங்களுக்கு என்ன வேணும்?''

தனக்குத் தங்குவதற்கு இடம் வேண்டுமென்பதையோ, உண்பதற்கு உணவு வேண்டுமென்பதையோ அவனிடம் சொல்லவில்லை முருகையன். அந்த இரண்டும் இல்லாத காரணத்தால் தான் அந்த இளைஞனே அங்கு வந்திருந்தான் என்பது தெரிந்தது.

அவன்தான் குருசாமிக்கு முதல் நாடகத்தை எழுதிக் கொடுத்த நாடக ஆசிரியனும். இப்போது அடுத்த நாடகத்தை எழுதிக் கொண்டிருந்தானும்.

''முதல் நாடகம் நல்லாத்தான் நடந்தது. ஆனால், அதுக்குள்ளே சினிமாக்காரர்கள் நாடகத்தோட கதாநாயகனைப் படத்துக்குக் கூட்டிக்கிட்டுப் போயிட்டாங்க. அவனோட ஒண்ணாக் கதாநாயகியும் போய்ச் சேர்ந்திட்டா. இப்போ அண்ணா புது ஆட்களைத் தேடிப் பிடிக்கறதுக்காக வெளியூர் போயிருக்கிறார். திரும்பி வருவதற்கு ஒரு வாரம் பத்து நாட்கள் ஆகும்.''

நாடக ஆசிரியன் பிறகு குருசாமியைப் பாராட்டி மனதார நாலு வார்த்தைகள் பேசினான். ''இவர் கலைஞர் மாத்திரமில்லை; மனிதர்! கலை உலகத்திலே மிகச் சிறந்த கலைஞர்களை நாம் பார்க்கலாம்; ஆனால் மனிதர்களைத்தான் பார்க்க முடியாது. இவர் ஒரு மனிதர்; மற்றவர்களும் வாழணும்னு நினைக்கிறார்.''

வேறு பல நாடகக் கம்பெனிகளுக்கு அவன் நாடகம் எழுதிக் கொடுத்ததையும், அவன் எழுதிக் கொடுத்த நாடகங்களால் புகழும் பொருளும் பெற்றவர்கள் அவனை ஏமாற்றியதையும் எடுத்துக் கூறினான் அவன்.

''நல்ல நாடகங்கள் எப்படித் தமிழ் நாட்டில் வெளிவர முடியும்? எழுதிய வனைக் கீழே தள்ளி விட்டு, எல்லாப் பொருளையும் தாங்களே அள்ளிக் கொள்ள வேண்டுமென்ற பேராசைக் காரர்கள் நிறைந்த நாடு இது. குருசாமி அண்ணா நல்லா யிருந்தால், நானும் உற்சாகத்தோடு நாலைஞ்சு நாடகங்கள் எழுதுவேன்.''

முருகையனுடைய மன நிலையில் அதற்கு மேல் அங்கு தங்கி நாடக வளர்ச்சி பற்றிப் பேசிக் கொண்டிருக்க நேரமில்லை. அங்கிருந்து கிளம்பினான்.

சித்திராவின் வீட்டுக்குப் போவதற்கு அவனுக்கு மனமில்லைதான். என்றாலும் ஏதாவது ஓர் இடம் வேண்டுமல்லவா? மெல்ல மெல்ல நடந்து சென்றான். கால்கள் கனத்துப் போய் வலி எடுத்தன.

பங்களாவை நெருங்கும் வரையில் அவனுக்கிருந்த ஆர்வம் அதை நெருங்கியவுடன் எங்கேயோ பறந்து போய் விட்டது. ஏற்கனவே ஒரு முறை அவனை வெளியேற்றி வைத்த பங்களா அது. இப்போது அதன் பல அறைகளிலும் பிரகாசமாக விளக்கொளி தெரிந்தது. வெளிச்சுவர் அருகில் வந்தவுடன் சட்டென்று நின்று விட்டான் முருகையன். உள்ளே நுழையக் கூடிய துணிவு அவனுக்கு இல்லை.

எந்த அறையிலாவது வீட்டின் எந்தப் பகுதியிலாவது சித்திராவின் உருவம் தெரிகிறதா என்று உற்றுப் பார்த்தான். அவள் அவனைப் பார்க்காவிட்டால்கூட, அவளுடைய உருவம் தெரிந்தால் போதுமென்று நினைத்தான். அந்த வீட்டில் அந்த நேரத்தில் அவள் இருந்து விட்டால் போனவுடன் இன்முகத்துடன் வரவேற்புக் கிடைக்குமல்லவா?

ஆனால், ஒரு கார் மட்டிலும் வெளியில் நின்றதே தவிர, மனிதர்களையே காணவில்லை. வெளியில் நின்ற கூர்க்கா அலட்சியத்தோடு முருகையனைப் பார்த்து விட்டு வேறு புறம் திரும்பிக் கொண்டான்.

நெடு நேரம் காத்து நின்றான் முருகையன். உள்ளே போவதற்கு முயற்சி செய்யலாமா, வேண்டாமா என்ற யோசனையில் ஒரு மணிப் பொழுது கழிந்தது. கூர்க்காவோ இப்போது சந்தேகத்துடன் முருகையனைக் கூர்ந்து

நோக்கினான். 'திருட வந்தவன் போல் அல்லவா வீட்டைப் பார்க்கிறான்!'

இன்னும் சில விநாடிகளில் அவன் தடியைச் சுழற்றிக் கொண்டு தன்னை அடிக்க வந்தாலும் ஆச்சரியப்படுவதற் கில்லை என்று நினைத்தான் முருகையன். இந்த நேரத்தில் வீட்டு முகப்பிலிருந்து இரண்டு மூன்று பேர்கள் இறங்கி வந்து காரில் ஏறிக் கொண்டார்கள். கார் வெளியில் புறப்பட்டது. சுவர் ஓரமாகத் தன்னை மறைத்துக் கொண்டு காரில் இருப்பவர்களைக் கவனித்தான்.

முருகையனுக்குத் தன் கண்களை நம் பவே முடியவில்லை. காரில் குமரவேலும் சித்திராவும் அவள் தமையன் மாணிக்க மும் சாய்ந்து கொண்டிருந்தனர்.

குமரவேலைக் கண்டவுடனேயே கண் களில் தேள் கொட்டியது போலிருந் தது முருகையனுக்கு. அதே காரில் சித்திரா எங்கு போகிறாள்?

வேறு எங்கு போவார்கள்? காப்பி ஓட்டலுக்குப் போவார்கள்; அல்லது காட்சிச் சாலைக்குப் போவார்கள். அல்லது கடற்கரைக்குப் போவார்கள். அல்லது நகைக் கடைக்கோ, துணிக் கடைக்கோ போவார்கள்.

இருந்த ஒரே ஆசையும், இருந்த ஒரே நம்பிக்கையும் சித்திராவின் பின் னால் காரைத் துரத்திக்கொண்டு சென்று அதன் வேகத்தை எட்டிப் பிடிக்க முடியாமல் தரையில் விழுந்து கதறி யது. முருகையன் வந்த வழியே திரும் பினான். தன்னுடைய சொத்துக்களான உடலையும், உயிரையும், அநுபவ அறிவையும், கல்வியையும், உணர்ச்சி மூட்டைகளையும் சுமக்க முடியாமல் சுமந்து கொண்டு நடந்தான்.

நினைவுச் சக்திகூட அவனிடமிருந்து விடைபெற்றுக் கொள்ளும் போலிருந் தது. இதற்குள் நன்றாகவும் இருட்டி விட்டது. நடை பாதைக் குடித் தனங்கள் சில அடுப்புக்களை மூட்டி அரிசி கொதிக்க வைத்தன. வேறு சில கேலிச் சிரிப்பும் பரிகாசமுமாகப் பொழு தைக் கழித்தன. நடைபாதைவாசி களிலும் நாகரிகமான சிலர் அப்போது ஓடிக் கொண்டிருந்த திரைப்படங்களைப் பற்றிப் பிரமாதமாக விமர்சனம் செய்து கொண்டிருந்தார்கள்.

பசிக் களைப்பும் மயக்கமுமாக ஒரு வீதியின் திரும்புமுனையிலிருந்த மரத் தடியில் சுருண்டு விழுந்தான் முருகை யன். அக்கம் பக்கத்தில் நடப்பவைகள் கனவுக் காட்சிகள் போல் தெரிந்தன. திடீர் திடீரென்று அவர்கள் உரத்த குரலில் பேசிச் சிரித்துக்கொண்டார்கள். பிறகு, காது கொடுத்துக் கேட்க முடி யாத மொழிகளில் ஒருவரை யொருவர் திட்டிக் கொண்டார்கள். கணவன் மனைவி சண்டைகளும் சல்லாபங்களும் அங்கே சற்றும் ஒளிவு மறைவின்றி நடந்தன.

சிறிது சிறிதாகக் கண்ணயர்ந்தான் முருகையன். எத்தனை நேரம் இப்படி உறங்கியிருப்பானோ, தெரியாது. ஒரு வேளை நள்ளிரவும் தாண்டியிருக்கலாம். அருகிலிருந்த சுவரிலிருந்து பரபர வென்ற சத்தம் கேட்டது. அரைத் தூக்கத்தில் அதைத் திரும்பிப் பார்த் தான். யாரோ ஒருவன் சுவரில் ஒட்டி யிருந்த ஏதோ ஒரு விளம்பரத் தாளைப் பற்றிக் கிழித்துக் கொண்டிருந்தான். பிறகு கிழிந்த தாளை எடுத்துக்கொண்டு முருகையனின் அருகில் வந்தான். அவன் தோளைப் பற்றி உலுக்கினான்.

''ஏம்பா, என்ன இது; என்னோட இடத்திலே நீ வந்து ஒய்யாரமாப் படுத்துக்கிட்டே? எழுந்திரு! எழுந்திரு!'' நொடிப் பொழுதுக்குள் அவன் கண்ட படி பேசிவிட்டான் முருகையனை.

முருகையன் அவனை ஏறெடுத்துப் பார்க்கவில்லை; அவனிடம் பதில் பேசவு மில்லை. மௌனமாக எழுந்து வேறோர் இடம் தேடிச் சென்றான். அதற்குள், கிழித்த சுவரொட்டி விளம்பரத்தைப் பாயாக விரித்துப் போட்டுக் கொண்டு நிம்மதியாக அந்த இடத்தில் படுத்து விட்டான் மற்றவன்.

நடை பாதையில் கூட உரிமையும் பாத்தியமும் கொண்டாடுகிற மக்க ளுக்கிடையில் அவன் என்னதான் செய்வது?

அடுத்துள்ள ஒரு சுவரில் சாய்ந்து கொண்டு உட்கார்ந்தபடியே தூங்க முயன்றான். பனியும் குளிரும் ஊசி முனைபோல் குத்தின. உட்கார்ந்தபடியே உறங்கியவன், பிறகு தன்னையறியாது தரையில் சரிந்து விழுந்தான். கொசுக் கூட்டம் பிடுங்கி எடுத்ததோ, குளிர் வாட்டி வதைத்ததோ, பசி அவன் குடல்களை முறுக்கியதோ எதுவும் அவனுக்குத் தெரியவில்லை.

பொழுது புலர்ந்து கொண்டுவந்தது. அதற்கு அடையாளமாக எருமை மாடு களை விரட்டிக் கொண்டு பால்காரர்கள் ஓட்டல்களை நோக்கிச் சென்றார்கள். பிறகு சைக்கிள்களின் மணிச் சத்தம் கேட்டது. அப்போதும் முருகையன் எழுந்திருக்கவில்லை.

ஏதோ ஒரு கரம் அவன் தோள் மீது பட்டது. 'இந்த இடத்துக்கும் எவனே னும் சொந்தம் கொண்டாட வந்து விட்டானா?' வாரிச் சுருட்டிக் கொண்டு எழுந்த முருகையன், வியப்போடு தன்னை எழுப்பிய உருவத்தை உற்றுப் பார்த்தான். (தொடரும்)

# தேசீய
# விவசாயப் பொருட்காட்சி

ஐலண்டு மைதானம், சென்னை
ஆரம்பதினம்: ஜனவரி 14, 1962

தென்னிந்தியாவில் இதுவரை கண்டிராத

## மகோன்னதமான பொருட்காட்சி

இதில் பங்கு கொள்வோர்:

- அமெரிக்கா, மேற்கு ஜெர்மனி, ஜப்பான்
- இந்திய அரசாங்கத்தின் ஐந்து அமைச்சகங்கள்
- பன்னிரண்டு இந்திய ராஜ்யங்கள்
- விவசாய யந்திரங்கள், உரங்கள், பயிர் பாதுகாப்பு சாதனங்கள் மற்றும் ரசாயனங்களைத் தயாரிப்பவர்கள்
- நூதனமான கடை வரிசைகள்,
- கேளிக்கைகள், குழந்தைகளுக்கான பூங்கா பொம்மை ரயில் முதலிய அம்சங்கள்.

கடைகளுக்கு குறிப்பிட்ட அளவே இடம் ஒதுக்கி இருப்பதால்
உடனே விண்ணப்பிக்கவும்

டைரக்டர்,
தேசீய விவசாயப் பொருட்காட்சி,
மவுண்ட் ரோடு, சென்னை-2

பொருட்காட்சி ஏற்பாடு:

**பாரத் கிரிஷக் ஸமாஜ்**

ARUNA

# அன்பே ஆரமுதே

## அத்தியாயம் முப்பத்தியேழு

தி. ஜானகிராமன்

அனந்தசாமி கண்கள் கலங்க, ''வியர்த்தமாகவா?'' என்று வினவியதும் ருக்மிணி தன் மனத்திலுள்ளதை அனைத்தும் கொட்டி விட்டாள். ''சிற்சில விஷயங்களை வாய்விட்டுப் பேசுவது ஏதோ ஒரு நிஜமான கூச்சத்தை உண்டாக்குகிறது. ஆகையால் நான் காரணம் சொல்லாமல் சொல்லுகிறேன். சுப்புசாமி முதலில் ஒரு வீடு பார்த்தார். மாடி யில்லாத வீடு. வேண்டாம் என்று சொல்லி விட்டேன். ட்யூஷன் கியூஷன் என்று மாணவர்கள் யாராவது வந்து கொண்டிருப்பார்கள். மாடி யிருக்கிற வீடாக இருந்தால் நல்லது என்று சொன்னேன். அலையாக அலைந்து ஒரு மாடி வீட்டைப் பிடித்தார். நான் அவரிடம் அப்போது சொன்னது அவ்வளவும் உண்மை யில்லை. அந்த மாடியில் இந்த வைத்தியசாலையும் வைத்தியரும் இருக்க வேண்டும் என்று எனக்கு ஆசை. ஒன்றை நினைத்துக் கொண்டுவிட்டால், அதை நான் மனசுக்குள் போட்டுப் பெரிது பண்ணிக் கொண்டே யிருப்பேன். என் சுபாவம் அந்த மாதிரி. அந்த எண்ணம் மனசிலேயே வளர்ந்து வளர்ந்து கல்லாற் கட்டினாற்போல ஆகிவிடுகிறது. கடைசியில் அது விருப்பமா, எண்ணமா, நிஜமாகவே நடக்கிறதா என்றுகூடச் சொல்ல முடிவதில்லை. நான் கீழே குடி யிருப்பது போலவும் மாடியில் வைத்தியசாலை இருப்பதாகவும் இரண்டு வாரங்களாக நினைத்துக் கொண்டிருக்கிறேன். நான் நினைத்துக் கொண் டிருந்த மாடி வீடு ஏறக்குறைய அப்படியே தான் இருக்கிறது. தெருவில் வீட்டோடு வீடாகச் சேர்ந்த வீடாக நினைத்துக் கொண்டிருந்தேன். ஆனால் சுப்புசாமி பார்த்து ஏற்பாடு செய்த வீடு அப்படியில்லை. வீட்டோடு வீடாகச் சேர்ந்து இல்லாமல் ஒரு காம்பவுண்டுக்குள் சுற்றிலும் பத்துப் பதினைந்தடி அகலத் தோட்டத்துக்கு நடுவில் இருக்கிறது. அதுதான் வித்தியாசம்.''

அனந்தசாமி பேசாமல் கேட்டுக் கொண்டிருந்தார். அவள் முடித்தபிறகு கூட அவருக்கு ஏதும் பேசத் தோன்றவில்லை. அவள் சொன்னதற்குப் பதில் சொல்வதை விட வேறு ஒரு விஷயம் தான் அவர் மனத்தை ஆட்கொண்டிருந்தது. 'இவனுக்கு முன் நான் ஏன் ஒன்றுமே பேசவில்லை? ஏதும் பேசத் தோன்றுவதுமில்லை?' என்ற கேள்வியில் அவர் ஒன்றியிருந்தார்.

நோயாளிகளிடம் அவர் பேசுவது சற்று அதிகப்படிதான். நோயிலிருந்த அவர்கள் மனத்தைத் திருப்பவோ, அல்லது அவர்களுக்குப் பன்னிப் பன்னி எதையாவது பேசித் தைரியமூட்டவோ, தேவைக்கு மேல் பேசும் வழக்கத்தைப் பயிற்சி செய்து வைத்திருந்தார் அவர். அது ஒரளவுக்கு இயற்கையாகக் கூட மாறிவிட்டதுபோல் அவருக்கே சில சமயங்களில் தோன்றும். தன்னையறியாமல் பேச்சு நீண்டுவிட்ட பொழுதெல்லாம் அவருக்கு இந்த அச்சம் ஏற்படும். துறவிகளுக்கு முதல் லட்சணமான மௌனம் அல்லது மிதமான பேச்சு தம்மை அடியோடு கைவிட்டு விட்டதாக அடிக்கடி அவருக்குத் தோன்றுகிற வழக்கம்.

ஆனால் அதே வாய்தான், தனக்கே சற்று அலுப்பூட்டும் அளவுக்குப் பேசுகிற அதே வாய்தான் இவனைக் கண்டு முடங்கி விடுகிறது. அவனை முதன் முதலாகச் சுப்புசாமி வீட்டில் பார்த்தது. பிறகு பார்த்த சந்தர்ப்பங்கள் அனைத்தையும் அவர் நினைத்துப் பார்த்த பொழுது, அவர் நினைத்தது சரியென்றே தோன்றிற்று. அவன் வரும்போதெல்லாம் அவனேதான் பேசி விட்டுப் போய் விடுகிறான்.

இப்பொழுதும் அந்த மௌனம்தான் அவரை அமுக்கிக் கொண்டிருந்தது.

அவர் பதில் பேசாமல் உட்கார்ந்திருந்ததைப் பார்த்து மேலும் சொன்னாள் ருக்மிணி. ''இந்த ஜுரத்தையும் படுக்கையையும் பார்க்கும் பொழுது என் எண்ணம் இன்னும் வலுப்பட்டு நிற்கிறது. நீங்கள் மறுத்தால் நான் எப்படி யெல்லாம் நடந்து கொள்வேன் என்று எனக்குச் சொல்ல முடிய வில்லை. பைத்தியம் பிடித்தாற்போல் கத்தலாம். அல்லது சித்தி மேல் எரிந்து எரிந்து விழலாம். அல்லது நாளைக்குக் கல்லூரிப் பாடத்தைத் தயார் செய்து

கொள்ளாமல் மனசைக் கண்ணுக்குத் தெரியாத சுவர்கள் மீது மோதி மோதி முட்டிக் கொள்ளலாம். என்ன பாவங் களைச் செய்து இந்தச் சிறு விருப்பங்கள் கூட நிறைவேறாமல் இப்படிக் கரை யேறாத கிணற்றில் விழுந்து கிடக்கிறேன் என்று தொண்டை வலிக்க, வலிக்க வாய் விட்டும் கதற முடியாமல் கதறலாம்....''

அனந்தசாமி நிமிர்ந்து பார்த்தார். அந்த வதைகளை அவள் அந்தக் கணத்தி லேயே அனுபவித்துத் துடிப்பது போல் இருந்தது. சட்டென்று குறுக்கிட்டார்.

''நான் மறுக்கவும் இல்லை. சம்ம திக்கவும் இல்லை. இன்னும் பதிலே சொல்ல வில்லையே'' என்று திகைத்துப் போய்க் கூறினார் அவர். அவர் கண் ணில் கண்ட திகைப்பைக் கண்டு சட் டென நிறுத்திக் கொண்டாள் ருக்மிணி. கண்ணை மூடிக் கொண்டாள். ''மன் னிக்க வேண்டும். சில சமயம் நான் என்ன பேசுகிறேன் என்றே எனக்குத் தெரிய மாட்டேன் என்கிறது'' என்று தலையைக் குனிந்து கொண்டாள். முகத் தில் சிவப்பும், உடலில் படபடப்பும் இன்னும் அடங்கவில்லை.

மீண்டும் ஒரு ஐந்து நிமிஷம் மௌனமாகக் கழிந்தது.

''மூன்று நாட்கள் ஒரே இடத்தில் தங்கக் கூடாது என்று துறவிகளுக்கு ஒரு கட்டளை உண்டு. ஓர் இரவு தங்கின இடத்திலேயே மறு இரவும் தங்கக் கூடாது என்று இன்னும் கடுமையான கட்டளை உண்டு. நான் அதையெல் லாம் மீறி இங்கே உட்கார்ந்து கிடக் கிறேன், வருஷக்கணக்காக. இப்போது இந்த வீட்டை விட்டுக் கிளம்பும் நேரம் வந்து விட்டாற் போலிருக்கிறது.''

''நான் இப்போது பார்த்திருக்கிற வீட்டில் மாடியில் ஒரு பெரிய ஹால் இருக்கிறது. நோயாளிகளை அங்கே பார்க்கலாம். அதன் இரு பக்கங்களி லும் இரண்டு அறைகள் இருக்கின்றன. ஹாலைக் கடந்தால் இவ்வளவு பெரி தாக ஒரு மொட்டை மாடியும் இருக் கிறது. ஆனால் அங்கே இந்த மாதிரி சீமை வேம்பு இல்லை. பதிலாக ஒரு ருமானி மாமரம் விழுதி பூசின காய்க



ஞடன் மாடியை உராய்ந்து கொண்டிருக்கிறது. மேலே சிமெண்டால் தொட்டி கட்டி வைத்திருக்கிறதால் மாடியில்கூடத் தண்ணீர் வசதிகளெல்லாம் நன்ருகச் செய்து வைத்திருக்கிருன் வீட்டுக்காரன்'' என்ருள் ருக்மிணி.

''அது சரி....இந்த வீட்டில் ஒரே ஒரு சௌகரியம் உண்டு. சின்ன வீடு. வீட்டோடு வீடாக இருக்கிற வீடு. இரண்டாம் பேர் படாமல் தனித்து நிற்கிற வீடில்லே. ஒரு பங்களாவைப் பார்க்கும் பொழுது 'நான் ஒரு வீடு, தனி வீடு' என்று தன்னைப் பற்றியே அது நினைத்துக் கொண்டு ஒதுங்கியிருப்பது போல் எனக்குத் தோன்றுகிற வழக்கம். இந்த வீட்டுக்கு அந்தப் பெருமை கிடையாது. ஆகவே இங்கு யாரும் தயக்கம் இல்லாமல் வருவார்கள், போவார்கள். ஆனல் நீங்கள் சொல்கிற வீடு அப்படியிராது போல் இருக்கிறதே. காம்பவுண்டுக் கதவைத் திறந்து மாடிப் படியேறியல்லவா வர வேண்டும்?'' என்று யோசித்தார் அவர்.

''ஆமாம். காம்பவுண்டுக் கதவு இருக்கிறது. மேலே தர்ம வைத்திய சாலை என்று போர்டு போட்டால் காம்பவுண்டின் இரும்புக் கம்பிக் கதவு அவ்வளவு பெரிய தடையாக இராது.''

''இந்தப் பிரமாத தர்மத்துக்குப் போர்டு வேறயா?'' என்று கேட்டார் அனந்தசாமி.

ருக்மிணி, ''இது என்றில்லே. எந்தத் தர்மத்துக்குமே போர்டு தேவையில்லே தான்....ஆனல் இந்தக் கேட்டு எப்பொழுதுமே திறந்திருக்கும். மாடிப் படியும் வெளியேதான் வீட்டுக்குப் பக்கவாட்டில் கட்டியிருக்கிருன்'' என்ருள்.

''இஷ்டமில்லாமல் நான் ஏதேதோ சொல்கிறேன் என்று நினைத்துக் கொள்ளக் கூடாது.''

''இல்லே. நான் ஒன்றுமே நினைத்துக் கொள்ள வில்லே'' என்று இடைமறித்தாள் ருக்மிணி.

''மயிலாப்பூரில் ஒரு வீட்டில் நான் மருந்து கொடுத்து வருகிறேன். பெரிய காம்பவுண்டுக்குள் இருக்கிற ஒரு அவுட் ஹவுஸ் அது. வீட்டுக்காரர் நடுவே வீட்டைக் கட்டிக் கொண்டு குடியிருக்கிருர். பின்னல் சின்ன வீடாகக் கட்டி வாடகைக்கு விட்டிருக்கிருர். நான் 'கேட்' தாழ்ப்பாளைத் திறந்து கொண்டு போகும் போதெல்லாம் ஹாலில் அவர் உட்கார்ந்திருக்கிறது தெரியும். வைரக் கடுக்கனும், சந்தனக் கீற்றும், பனியனுமாக என்னைக் கண்கொட்டாமல் நான் அவுட் ஹவுஸ் நடையில் திரும்பி மறைகிற வரையில் பார்ப்பார். தஞ்சாவூர் ஜில்லாவில் நிலபுலன்கள் ஏராளமாக இருக்கின்றனவாம். கிஸான் தொல்லே தாங்க முடியாமல் பட்டணத்தில் ஒரு வீடு வாங்கிப் புதுப்பித்துக் குடியேறி விட்டாராம். வீட்டு வரிக்காவது வரட்டும் என்று பின்னல் ஒரு சின்ன வீட்டைக் கட்டிக் குடி வைத்திருக்கிருராம். எந்தச் சமயத்தில் போனலும் அந்த இடத்தில் தான் உட்கார்ந்திருப்பார் அவர். வாசல் கேட்டின் தாழ்ப்பாள் ஓசை கேட்டதும் திரும்பிப் பார்ப்பார்... 'உள்ளே வருகிறவர்கள் கேட்டைச் சாத்திக் கொண்டு வருகிருர்களா என்று கவனிக்கிற ஒரே வேலேக்காக இத்தனே சொத்தையும் வீட்டையுமா சம்பளமாகக் கொடுத்திருக்கிருர் பகவான்?' என்று தோன்றும். நாலு மாசமாக இப்படியே நடந்து கொண்டிருக்கிறது. அவுட் ஹவுஸில் என் சிநேகிதர் குடியேறின மறுநாளிலிருந்தே அதைக் காலி பண்ணச் சொல்லிக் கேட்டுக் கொண்டிருக்கிருராம் அந்த வீட்டுக்காரர்!... காரணம் என்ன வென்று கேட்டதற்கு, 'உங்கள் வீட்டுக்கு இத்தனே பேர்கள் வருகிருர்களே! ஒவ்வொரு தடவையும் எனக்கு எழுந்து போய்க் கேட்டைச் சாத்தவே பொழுது சரியாக இருக்கிறது' என்ருராம். என் சிநேகிதர் எவ்வளவோ சமாதானம் சொன்னராம். 'இனிமேல் என்னைத் தேடிக் கொண்டு யார் வந்தாலும் உடனே போய் நான் கேட் சாத்தியிருக்கிறதா என்று பார்த்து விட்டுவந்து மறு காரியம் பார்க்கிறேன்' என்று வாக்குக் கொடுத்தாராம். ஒன்றும் பலிக்கவில்லே. 'உங்களுக்கு இந்தச் சிரமம் எல்லாம் வேண்டாம். வேறு வீடு பார்த்துக் கொண்டு போங்கள்' என்று சொல்லி விட்டாராம். நண்பர் இன்னும் காலி பண்ணவில்லே. அவருக்கு வீடு கிடைக்கவில்லே'' என்று ஏதோ கதை ஒன்றைச் சொல்லி நிறுத்தினர் அனந்தசாமி.

ருக்மிணி புன்முறுவலுடன் கேட்டாள். ''பணம் சம்பாதிக்கிற பூதம் போல் வாசல் காக்கிற பூதம்...... அது சரி, இந்தக் கதையைச் சொன்ன காரணம் எனக்குப் பிடிபட வில்லேயே? அவுட் ஹவுஸில் இருக்கிற நண்பருக்கு நான் பார்த்திருக்கிற மாடியைத் தர வேண்டுமா? இல்லே, அந்த வீட்டுக்காரர் மாதிரி நான் வாசல் காக்கக் கூடாது என்று எனக்கு எச்சரிக்கையா?''

''ஒரு காரணமும் இல்லே. ஏதோ ஞாபகம் வந்தது, சொன்னேன். அவ்வளவுதான்'' என்று சட்டென்று விடையிறுத்தார் அவர்.

ருக்மிணி எதிரில் இருக்கும் போது அவருக்குப் பேச வரவில்லே. பேசினல் எதையாவது சம்பந்தமில்லாமல் அர்த்த

---

இந்தக் கதையில் வரும் ஒரு காட்சியை ஓவியர் விஜயா இவ்விதழ் அட்டைச் சித்திரமாக வழங்கி யிருக்கிருர்.

# தலை அலங்கரிப்புக்குத் தகுந்த ஹேர் ஆயில்

பாரத மக்கள் சிறுவயதிலிருந்தே தங்கள் தலை அலங்கரிப்பில் எண்ணெய் தடவி தலை வாருவதில் மிகவும் ஈடுபடுகின்றனர். கூந்தல் மிகவும் அழகாகத் திகழ்வதற்கு மண்டைக்குள் செல்லத் தேவையான நல்லதோர் ஹேர் ஆயில் அவசியம். ஆகையால்தான் மயிர்க்கால்களில் இயற்கையான எண்ணெயுடன் சேர்ந்து திகழச் செய்ய நல்லதோர் ஹேர் ஆயிலை உபயோகிக்கவேண்டும்.

டாடாவின் ஹேர் ஆயில்கள் கூந்தலின் அடிமண்டைக்குள் பாய்ந்து அவை அடர்த்தியாகவும் ஆரோக்கியத்துடனும் இருக்க உதவுகின்றன.

டாடாவின் கோகோனட் மற்றும் கேஸ்டர் ஹேர் ஆயில்கள் நறுமணம் வீசும்படி வாசனை கலக்கப்பட்டு மூன்று விதமான சைஸ்களில் கிடைக்கின்றன.




# டாடாவின் ஹேர் ஆயில்கள்

THOY-15-TAM

மில்லாமல் பேசுகிறோமோ என்று அவருக்கே பட்டது. உள்ளே வரும்போதே தம்மையறியாமல் எதையாவது கொட்டிக் கொண்டோ, இடறிக் கொண்டோ, உதைத்துக் கொண்டோ வந்து சங்கடப் படுத்துவார்களே சில பேர்கள் — அந்த மாதிரியே ருக்மிணியைக் கண்டதும் தம் வாயும் மனமும் இடறி மோதிக் கொண்டு சிரமப்படுவதை உணர முடிந்தது அவருக்கு.

''நான் எந்த விதத்திலும் தொந்தரவு கொடுக்கத் தயாராக இல்லை. இருக்கிறவர்களுக்கோ, வருகிறவர்களுக்கோ எந்தவிதத் தொல்லையும் நான் கொடுக்க மாட்டேன். சித்தியும் அப்படியே பழகினவன்தான். சித்தியை விட்டால் எனக்கு வேறு மனிதர்கள் கிடையாது. அவனுக்கும் என்னை விட்டால் யாரும் கதி இல்லை. மேலே எந்த நோயாளி வருகிறார்கள், எந்த நேரத்துக்கு எந்தவித நோயுடன் வருகிறார்கள் என்பதையெல்லாம் நாங்கள் கவனிக்கவே போகிறதில்லை.''

''நான் மறுபடியும் சொல்கிறேன். நான் ஏதோ வாய் தவறித்தான் தஞ்சாவூர் மிராசுதாரைப் பற்றிச் சொன்னேன். நீங்கள் இவ்வளவு சமாதானம் சொல்லத் தேவையேயில்லை. இந்தச் சமாதானத்தை நீங்கள் ஆரம்பிப்பதற்கு முன்னாலேயே நான் அங்கு குடி வருவதாகத் தீர்மானம் செய்து விட்டேன். என்ன வாடகை பேசியிருக்கிறீர்கள்?''

''வாடகையைப்பற்றிய கவலை, கொடுக்க வேண்டிய கடமை, அதிர்ஷ்டம் எல்லாம் என்னுடையது. அந்தக் கொஞ்ச அதிர்ஷ்டத்தை இன்னொருவரோடு பங்கு போட்டுக் கொள்வதா?''

பேச்சு வளரும், இன்னும் ஏதாவது சம்பந்தமில்லாமல் சொல்லத் தொடங்கும் பயத்தில் அனந்தசாமி பதில் பேசாமல் இருந்தார்.

''வாடகை கொடுக்கிற குடியாக இருந்தால், நான் இங்கு வந்திருக்க வேண்டியதில்லை'' என்றாள் ருக்மிணி.

''சரி, நீங்கள் குடி போய் விட்டீர்களா?''

''நாளைக் காலையில் போகிறோம்.''

''நான் அடுத்த ஞாயிற்றுக்கிழமை வந்து விடுகிறேன்.''

''இன்னும் எட்டு நாட்களுக்குமேல் இருக்கிறதே அடுத்த ஞாயிற்றுக் கிழமைக்கு?''

''ஆமாம்.''

''நான் அவசரப்படுவதைக் கண்டு கோபம் வரக் கூடாது. நான் கொஞ்சம் அதிர்ஷ்டக் கட்டை. கைக்கு எட்டியது வாய்க்கு எட்டாமல் இழந்து போகிற அனுபவம் எனக்குப் பல தடவைகள் ஏற்பட்டிருக்கிறது. எட்டு நாட்கள் என்பது இப்போது எனக்கு அடிவானம் மாதிரி தோன்றுகிறது.''

அனந்தசாமி அதைக் கேட்டுச் சற்றுக் கண்ணை மூடிக் கொண்டு உட்கார்ந்திருந்தார்.

''எட்டு நாட்கள் அவகாசத்தைப் பயன்படுத்திக் கொண்டு மறுபடியும் ஓடிப் போய் விடுவேன் என்று பார்த்தீர்களா?'' என்றார் சற்றுக் கழித்து.

''..............''

''நான் இனிமேல் ஓட இடம் இல்லை. ரிஷிகேசம், கேதார நாதம்,



புத்த கயை — எல்லாம் சென்னையிலே இருக்கின்றன.... ம், சுப்புசாமி, நாகம்மா, சந்திரா எல்லாரும் சௌக்கியம்தானே?'' என்று பேச்சை மாற்றினார் அனந்தசாமி.

''எல்லாரும் சௌக்கியம். சுப்புசாமியின் பிள்ளை லீவில் வரப் போகிறானாம், சீமையிலிருந்து. நேற்றுக் கடிதம் வந்திருக்கிறது.''

''அப்படியா? எப்பொழுது?''

''இன்னும் ஓரிரண்டு மாதங்களில்!''

''குடும்பத்தோடு வருகிறானா? குழந்தைகூட இருக்கிறாற்போலிருக்கிறதே அவனுக்கு.''

''ஒரு பெண் குழந்தை இருக்கிறதாம்!''

அனந்தசாமி அதை நினைத்துக் கொண்டே உட்கார்ந்திருந்தார். ''ஏ, அப்பா! எத்தனை வருஷங்களாச்சு, அவன் போய்...நான் அவனைப் பார்த்ததில்லே. குப்புசாமிக்கு அதுவே ஒரு ஏக்கமாக இருக்கும். ஆனால் ஒன்றையும் காட்டிக் கொள்ள மாட்டார். லெட்டரைப் பார்த்தவுடன் அப்படியே ஆடிப் போயிருப்பாரே.''

''அதெல்லாம் ஒன்றும் இல்லை. ம்ஹூம் என்றார். வெற்றிலையை வாய் கொள்ளாமல் போட்டுக் கொண்டார். உள்ளே போய்க் கையிரண்டையும் உயர்த்தித் தலைக்குப் பின்னால் கோத்துக் கொண்டார். சாய்வு நாற்காலியில் உட்கார்ந்து புகையிலையை அசை போட்டுக் கொண்டிருந்தார். அவ்வளவுதான்.''

''ஒன்றுமே சொல்லவில்லையா?''

''அவ்வளவு புகையிலையோடு என்னத்தைச் சொல்கிறது?''

''மனசுக்குள்ளே இருக்கிறதையெல்லாம் புகையிலையைப் போட்டுக் கடிச்சு அமுக்கிவிட்டாற் போலிருக்கிறது.''

''அப்படித்தான் தோன்றுகிறது. சந்திரா நாற்காலி அருகில் உட்கார்ந்து 'அம்மாஞ்சி அடையாளம் தெரியாமல் மாறியிருப்பார். வேட்டி கட்டிக்கிறது, இலையிலே உட்கார்ந்து சாப்பிடறது, கையாலே உட்கார்ந்து சாப்பிடறது எல்லாம் மறந்துகூடப் போயிருக்கும்' என்று அந்தப் பையனைப் பற்றி ஒரு மணி நேரம் பேசிக் கொண்டிருந்தாள். குப்புசாமி ஒன்றுமே பேசவில்லை. எல்லாவற்றையும் கேட்டுக் கொண்டே உட்கார்ந்திருந்தார். புகையிலையைத் துப்பி விட்டுக் காரில் ஏறிக் கொண்டு வெளியே போய் விட்டார். சந்திரா இன்னும் அம்மாஞ்சியைப் பற்றித்தான் பேசிக் கொண்டிருக்கிறாள்.''

''இங்கேகூட என்னைப் பார்க்க வந்திருந்தாள் சந்திரா'' என்றார் அனந்தசாமி ருக்மிணியிடம்.

''சொன்னாள்.''

''என்ன சொன்னாள்?''

''எல்லாவற்றையும் சொல்லி விட்டாள். நான் வந்த அன்று என்னைப் பீச்சுக்குக் கூட்டிக் கொண்டு போய் எல்லாவற்றையும் சொன்னாள். அழுதாள். மாமா பிள்ளை வரப்போகிறான் என்ற செய்தி வந்ததும் இப்பொழுது அதைப் பற்றியே பேசிப் பேசி எல்லாவற்றையும் மறக்கப் பார்க்கிறாள்.... இந்த ரங்கன் எப்பேர்ப்பட்டவன் என்றே எனக்குப் பிடிபடவில்லையே?''

''உங்களைப் பார்க்காமலா இருக்கப் போகிறான். என்னைப் புது வீட்டில் வந்து பார்க்காமல் இருக்கப் போகிறதில்லை. அப்பொழுது நன்றாக அவனைப் பார்த்துக் கொள்ளலாம்.''

அந்தப் புது வீட்டுக்கு நாலாம் நாளே குடி புகக் கிளம்பி விட்டார் அனந்தசாமி. ஒரு பீரோப் புத்தகம், சமையல் அறையிலிருந்த இரண்டு வெண்கலப் பாத்திரங்கள், நாலு டம்ளர்கள், இரண்டு டபராக்கள், தாழம் பாய், பனங்கட்டை, இரண்டு நாற்காலிகள், எல்லாம் தள்ளு வண்டியில் ஏறிக் கொண்டன.

மங்களப் பாட்டியைச் சமாதானப் படுத்தத்தான் அனந்தசாமி தம் திறமைகளையெல்லாம் இரட்ட வேண்டியிருந்தது. அவளுக்குச் சந்தேகம்; வீட்டைச் சரியான நிலையில், அவருக்குச் சௌகரியமான நிலையில் வைக்கவில்லையோ என்று. வாடகைகூட ஐந்து ரூபாய் குறைத்துக் கொடுப்பதற்கு முன் வந்துவிட்டாள்.

''பாட்டி! வீணாக மனத்தைப் போட்டுக் குழப்பிக் கொள்ளாதீர்கள். எனக்கு வருவோர் போவோர் அதிகமாயிருக்கிறது. கொஞ்சம் விசாலமான இடமாகப் பார்த்துக் கொண்டு போகிறேன். வேறு ஒன்றுமே இல்லை.''

''உங்களுக்கு இந்த இடம் போதாது. எனக்குத் தெரியும். ஊர் முழுக்கக் குடும்பமாயிருக்கிற சந்நியாசி நீங்கள். இருந்தாலும், நான் ஏதாவது உங்களுக்குப் பிடிக்காத வகைக்கு, வீட்டைக் கவனிக்காமல், பழுது பார்க்காமல் இருந்து விட்டேனோ என்று அடித்துக் கொள்கிறது.''

''ஒன்றுமில்லை, பாட்டி! நான்கூட இஷ்டமில்லாமல்தான் போகிறேன்.''

''நீங்கள் போகிறதை நான் தடுக்க முடியாது சுவாமி. வேண்டாம் என்று சொல்ல வில்லை. ஆனால் நல்லவர்களுடைய சங்கம் என்று சொல்கிறார்களே, அது இனிமேல் இங்கே கிடைக்காது. கோயிலிலிருந்து மூலவரை அடியோடு பெயர்த்துக் கொண்டு போய் விட்டால் அப்புறம் கோயிலாக எப்படி இருக்கும் அது? நாடகக் கொட்டகை, மார்க்கெட்டு மண்டபம் எல்லாம் ஒன்றுதான்.... பெரியவர்களைப் பார்க்கிறதே அபூர்வம். பார்த்தாலும் பெரியவர்கள் என்று புரிந்து கொள்கிற புண்ணியம் பண்ணியிருக்கணும். நான் அப்படிப் புண்ணியம் பண்ணினதாகத்தான் நினைச்சிண்டிருந்தேன். மனிதர்களாகப் பிறந்து விட்டு எப்பவும் புண்ணியமே சம்பாதிக்கிறது என்றால் அது நடக்கிற காரியமோ?''

மங்களப் பாட்டி கண்ணீராகச் சொரிந்துவிட்டாள். அந்தச் சாளேசுரக் கண்ணாடிக்குள் ஒரேயடியாக அகன்று தெரிந்த அந்தக் கண்கள் படும் வேதனையை அந்தக் கண்ணாடி இன்னும் பெரிதாகக் காட்டி அவரைச் சிறிது நேரம் கலக்கி விட்டது.

அவள் காலில் விழுந்து நமஸ்கரித்தார் அவர்.

''ஸ்வாமி...ஸ்வாமி!'' என்று பதறினாள் மங்களப் பாட்டி. ''இது என்ன எனக்கு? நீங்கள் சன்னியாசி ஸ்வாமி. அறுபது வயசுகூட இருந்தாலும், சன்னியாசியைவிட மற்றவர்கள் எல்லாம் சிறியவர்கள். என்ன இப்படிப் பண்ணி விட்டீர்களே!'' என்று தீப்பட்ட துடியாகத் துடித்தாள்.

''எந்த சந்யாசியாக இருந்தாலும் தாயாருக்கு அவன் நமஸ்காரம் செய்துதான் ஆக வேண்டும்'' என்று எழுந்தார் அனந்தசாமி.

பதினைந்து நிமிஷங்களுக்கெல்லாம் கிளம்பி விட்டார் அவர். மனத்தில் துன்பமோ, பச்சாத்தாபமோ, ஆவலோ ஒன்றுமில்லாமல் குருவியைப் போல, ஜன்னலுக்கும், கதவுக்கும், உத்தரத்துக்கும், கட்டைச் சுவருக்குமாகக் காரணமில்லாமல் தாவும் குருவியைப் போல் தெருவோடு நடந்து கொண்டிருந்தார். தள்ளு வண்டிக்காரனிடம் விலாசத்தைக் கொடுத்து விட்டு ஒரு சைக்கிள் ரிக்ஷாவைப் பேசி ஏறிக் கொண்டார்.

மாம்பலத்தில் அந்தத் தெரு வந்து விட்டது. வீட்டு நம்பரைப் பார்த்துக் கண்டுபிடிக்க வேண்டிய சிரமம் மிச்சமாகிவிட்டது அவருக்கு. காம்பவுண்டின் சின்னக் கேட்டைத் திறந்து வைத்துக் கொண்டு அவரை எதிர் கொண்டழைக்க ருக்மிணியே நின்று கொண்டிருந்தாள்.

''நிறுத்துப்பா, நிறுத்து!'' என்று அவசரமாகக் கத்தினார் அவர். பெரிய தேரை நிறுத்துகிற அரவத்துடன் 'பிரேக்'கை அழுத்தினான் ரிக்ஷாக்காரன். அடுத்த வீட்டு வாசலில் போய் நின்றது வண்டி.

சில்லறையைக் கொடுத்து விட்டுத் திரும்பி வந்தவர் ருக்மிணியைத் தொடர்ந்து நடந்தார். அவள் சொன்னாற்போலவே நடுத்தரமான வீடு. மாடிப்படி வெளியே பக்கத்தில் கட்டப்பட் டிருந்தது. வீட்டு வெளிச் சுவரெல்லாம் பச்சைச் சாயம் அடித்திருந்தது.

''ஜாகைக்குப் பிறகு போகலாம். முதலில் இங்கே வர வேண்டும்'' என்று உள்ளே அழைத்துப் போனாள் ருக்மிணி.

வாசல் நிலையைக் கடக்கிறபோதே புத்தர் புத்தராக அச்சிட்ட ஒரு நீலத் திரை தொங்கிக் கொண்டிருந்தது. உள்ளேயும் சுவர்களில் பச்சை வர்ணம். சின்ன வராண்டா. அங்கே நாலைந்து கையில்லாத நாற்காலிகள், இரண்டு மர சோபாக்கள். சுவர்களில் ஒன்றுமில்லை. கிழக்கே பார்த்த சுவரில் மட்டும் ஒற்றைப் பச்சைக் கோட்டில் எழுதப்பட்ட ஒரு புத்தர் படம். பச்சை ஓரம். வர்ணம் பளீரென்று ஒருவெள்ளை. வேறு ஒன்றுமே அந்த வராண்டாவில் இல்லை.

ஒரு தடவை நின்று பார்த்தார் அனந்தசாமி. ''சுவர், எல்லை ஒன்றுமே இல்லாத வெளிமாதிரி இருக்கிறதே இந்த இடம்!'' என்று மேலே பார்த்தார்.




சில ஆண்டுகளுக்கு முன் நடந்தது இது. ஜம்ஷெட்பூர் தொழிற்சாலையில், எஃகு உருக்கு நிலையத்தில், 75 டன் உருகிய இரும்புக்குழம்பைத் தாங்கிய ராக்ஷஸ ஏனம் ஒன்று தலைக்கு உயரே இருந்த கிரேனிலிருந்து திடீரென்று கீழே நழுவி விழுந்தது. காதைச் செவிடாக்கும் ஓசை; செந்தணலான இரும்புக்குழம்பு எங்கும் சிதறியது. சற்றுத் தொலைவில் வேலை செய்து கொண்டிருந்த பல கொல்லர்கள் பலத்த காயமுற்றனர். வேதனையால் துடிதுடித்து அவர்கள் எழுப்பிய கூக்குரலும், நீராவி சீறி வரும் ஓசையுமாக ஒரே பேரிரைச்சல்.

முதலில் வந்த ஆம்புலன்ஸ் வண்டியில் காயமுற்றோரில் இருவரைத்தான் ஆஸ்பத்திரிக்கு எடுத்துச்செல்ல முடிந்தது. ஜெனரல் மானேஜர் கீனன் அவர்கள் தமது காரில் மேலும் மூவரை அழைத்துச்செல்ல முன் வந்தார்; எஞ்சியிருப்பவரில், விபத்தில் பிழைக்கக்கூடும் என்று கருதிய மூவரை அவர் தேர்ந்தெடுத்தார். ஆயினும் அந்த மூவருள் ஒருவரான ஒரு ஹிந்து தொழிலாளி ஆஸ்பத்திரி செல்ல மறுத்து விட்டார். ''என்னை அழைத்துச் செல்லாதீர்கள்,'' என்றார் அவர். தமது உடல் வேதனையைப் பொருட் படுத்தாது, அண்டையில் பாதி வெந்து கிடந்த ஒரு முஸ்லிம் தொழிலாளியைச் சுட்டிக்காட்டி, ''ஹமாரே பாய் கோ லே ஜாவோ'' (என் சகோதரனை அழைத்துச் செல்லுங்கள்) என்றார். ஜெனரல் மானேஜர் கீனன் கூறியது போல், ''வேதனையிலும் மரண வாசலிலும் கிடந்த அந்த ஹிந்து தொழிலாளி, அந்த முகமதியனைப் பிறமதத்தானாகக் கருதவில்லை; தனது சொந்த சகோதரனாகவே பாவித்தான்.''

உழைப்பு என்ற பொதுவான பிணைப்பால் பிறந்த இந்த கட்டுணர்ச்சி, ஜம்ஷெட்பூரின் தனிச்சிறப்பியல்பு. அங்கே கனத் தொழில் என்பது பிழைப்பிற்கு வழி மட்டுமன்று: ஒரு தனி வாழ்க்கை முறை.

**ஜம்ஷெட்பூர்**

எஃகு நகரம்

The Tata Iron and Steel Company Limited JWTTN 5350A

''ஏன்?''

''ஒரே பச்சை. இந்தப் புத்தர் ஒருவர்தான் வெள்ளை. வேறு ஒன்றுமே இல்லையா, அதனால்தான் அப்படித் தோன்றுகிறது.''

''உட்காருங்கள்.....ம்... இதுதான் சித்தி'' என்றாள் ருக்மிணி.

அவயாம்பாள் உள்ளே இருந்து வந்து நிலையில் நின்றிருந்தாள்.

''உங்க சித்தியா?'' என்று கேட்டு உட்காரப் போனவர் திரும்பி நிலையைப் பார்த்தார்.

''வாருங்கள்'' என்று அவரையே விக்கினாற்போலப் பார்த்துக்கொண்டே நின்றாள். முகச் சதைகள் இலேசாக அசைந்து கொடுத்தன. அழப் போகிறாளா, சிரிக்கப் போகிறாளா, அப்படியே வாயடைத்து நிற்கப் போகிறாளா, ஒன்றும் புரியவில்லை ருக்மிணிக்கு. சித்தியின் இயல்பான வாய் வெடுக்கு எப்படி வரப் போகிறதோ என்று வயிற்றில் நெருப்பைக் கட்டிக் கொண்டாற் போலப் பார்த்துக் கொண்டே நின்றாள். அவள் கவனத்தை எப்படித் திருப்புவது என்றும் புரியவில்லை.

''சௌக்கியம்தானே?'' என்று அப்பொழுது அனந்தசாமியின் குரல் கேட்டது.

''சௌக்கியம்தான்'' என்றாள் அவயாம்பாள். சட்டென்று அசைந்து முகச் சதை ஒரு வறண்ட புன்சிரிப்பாக மலர்ந்தது. அது மறைவதைத் தடுத்து நிறுத்தி ''உட்காருங்கள்'' என்றாள் அவள். ''நான் பார்த்ததே இல்லை. வண்டியிலே வந்து இறங்கும் பொழுது பார்க்கவில்லை நான். டிபன்கூட நான் கொண்டு வந்து வைக்கவில்லை. மாப்பிள்ளை அழைக்கும்போது பார்த்தால் போதும் என்றிருந்தேன். முப்பது வருஷங்கள் தாமசமாகும் என்று தெரியவில்லை அப்பொழுது'' என்று சிரித்தாள்.

''இப்பொழுது நான் குடியாகவே வந்திருக்கிறேன்.''

''சன்யாசிக்குச் சன்யாசி ஒண்டுக் குடியிருக்கலாம். தப்பில்லை'' என்று சித்தி உள்ளே எழுந்து போனாள். நாலு விநாடிகளுக்குள் திரும்பியும் வந்து விட்டாள் கையில் காப்பியோடு.

ஒன்றும் சொல்லாமல் வாங்கிச் சாப்பிட்டார் அனந்தசாமி.

சாப்பிட்டதும், ''நீங்கள் இன்னும் ஜாகையைப் பார்க்கவே இல்லை. போய்ப் பாருங்கள்'' என்றாள் சித்தி. மீண்டும் வாசல் வழியாக வெளியே வந்து மாடியில் ஏறினாள் ருக்மிணி. அனந்தசாமி பின்னே சென்றார்.

போனவுடன் ஒரு ஹால். நான்கு பக்கமும் நான்கு சுவர்களின் நடுவே நிலைகள். எதிர் நிலை மொட்டை மாடிக்குப் போயிற்று. பக்கத்து நிலைகள் இங்கோர் அறைக்கும் அங்கோர் அறைக்குமாக வழி செய்தவை. வராண்டாவில் நான்கு சுவர்களையும் ஒட்டினாற் போலப் பெஞ்சுகள் போடப்பட்டிருந்தன. நடுவே ஒரு மேஜை. அதைச் சுற்றி மூன்று பக்கமும் மூன்று கையில்லாத நாற்காலிகள். ஒரு பக்கம் ஒரு சுழல் நாற்காலி. எதிர்ச்சுவரின் நிலையின் மேல் அறை மாதிரி பச்சைக் கோட்டில் ஒரு படம். இலேசான மஞ்சள் வர்ணத்தில் — அல்லது பொன் வர்ணத்தில் ஒரு பெண் குழந்தையுடன் படுத்து ஆழ் துயிலில் இமை செருகிக் கிடக்கிறாள். அவளை விட்டு அவளைப் பார்த்துக் கொண்டே பின்னால் நகர்கிறான். அவன் நிறம் வெள்ளை.

அனந்தசாமி ஒரு நிமிஷம் அருகே சென்று அண்ணாந்து அதைப் பார்த்தார். துயிலில் ஆழ்ந்த பெண்ணின் மார்புக் குறக்கத்தின் லயத்துடனும் ஒழுங்குடனும் ஏறியிறங்குவது போல் இருந்தது. அதே சலனம் குழந்தையின் உடம்பிலும் தெரிந்தது.

''படம் ரொம்ப நன்றாயிருக்கிறது'' என்று அதையே பார்த்துக் கொண்டு நின்றார் அவர். ''அச்சடித்த படமாகத் தோன்றவில்லையே?''

''கையால் வரைந்ததுதான்'' என்றாள் ருக்மிணி.

''ம்.....! பேஷ். ஏன் யசோதரை பொன் மாதிரியிருக்கிறாள்! புத்தர் மட்டும் வெள்ளையாக இருக்கிறார்?''

''எனக்கு என்னவோ அந்தப் புத்தர் வெள்ளையாகத்தான் இருந்திருப்பார் என்று தோன்றிற்று.''

''நீங்கள் எழுதினதா இது?''

''ஆமாம்.''

''அப்படியா? பிரமாதமாக இருக்கிறதே! யாரிடம் நீங்கள் கற்றுக் கொண்டீர்கள்?'' என்றார் அனந்தசாமி வியப்புடன்.

''யாரிடமும் கற்கவில்லை. எனக்கு இதெல்லாம் தெரியவும் தெரியாது. டில்லிக்குப் போயிருந்த போது, ஒரு நாள் ரொம்பவும் சோம்பலாக இருந்தது. ஏதோ கலர்க்குச்சி கிடந்தது. கிறுக்கினேன். எனக்கே சுமாராக இருக்கிறது மாதிரி தோன்றியது. சித்திகூட நன்றாக இருக்கிறதடி என்று ஜாக்கிரதையாக எடுத்து வைத்தாள். 'ப்ரேம்' போட்டுக் கொண்டு வந்தாள். அவ்வளவுதான்....'' என்றாள் ருக்மிணி.

''இந்த மாதிரி எழுதுங்களேன், இன்னும்.''

''எழுதிப் பார்த்தேன். வரவில்லை. விட்டு விட்டேன்'' என்றாள் ருக்கு.

''அப்படியா.....!'' என்று மீண்டும் நின்று அதைப் பார்த்து விட்டு வடவண்டை அறைக்குப் போனார். அங்கு ஒன்றும் இல்லை. தென்னண்டை அறைக்கு வந்தார். ஒரு பீரோவும் இரண்டு பெஞ்சுகளும் தவிர அங்கும் வேறு ஒன்றும் இல்லை. பெஞ்சின் மீது ஒரு மலையாளத்துத் தாழம்பாய் புதிதாகச் சுருட்டிக் கிடந்தது.

''சமையலறை அதுதான் போல் இருக்கிறது'' என்றார் அவர்.

''ஆமாம்.''

''அடுப்பு கிடுப்பு ஒன்றும் இல்லை.''

''அடுப்பு கீழே இருக்கிறதே.''

''எங்கே?'' என்று மறுபடியும் அங்கே போய்ப் பார்க்க அடியெடுத்து வைத்தார் அவர்.

''அங்கே இல்லை. கீழே. மாடியில் இல்லை என்று சொன்னேன். நானும் சித்தியும் சாப்பிடுகிறோம். அந்தச் சமையலோடு ஒரு பிடிகூட வடித்தால் போகிறது'' என்றாள் ருக்மிணி.

அனந்தசாமி சற்று யோசித்தார். ''என்னத்துக்குச் சிரமம்?''

''யாருக்கும் சிரமம் இல்லை. மேலும் வயிற்றுக்காக மெனக்கெடும் இந்த நேரத்தை நாலு நோயாளிகளுக்காவது செலவிடலாம் என்றுதான் எனக்குத் தோன்றுகிறது. ஆனால் புதிதாகக் குடி போனால் பால் காய்ச்சிச் சாப்பிடுவது ஒரு பழக்கம்'' என்று வடவண்டை அறையில் இருந்த அலமாரியைத் திறந்து தர்மாஸ் பிளாஸ்கையும் டம்ளரையும் எடுத்து வந்து ஹால் மேஜை மீது வைத்தாள் ருக்மிணி.

''பால் காய்ச்சியே வைத்திருக்கிறாள் சித்தி.''

''அடுப்பு மூட்டிச் சமைக்கிறதாக இருந்தால் அல்லவா அது?''

ருக்மிணி ஒன்றும் சொல்லாமல் பிளாஸ்கில் இருந்த பாலை எடுத்து டம்ளரில் விட்டாள். ''சும்மா பேருக்காகத் துளி சாப்பிடலாம்'' என்றாள்.

''உட்காருங்கள்'' என்று சொல்லிக் கொண்டே சாப்பிட்டார் அனந்தசாமி. ''எங்கு பார்த்தாலும் ஒரே பச்சை வர்ணமாக அடித்திருக்கிறீர்களே?'' என்று சுற்றுமுற்றும் பார்த்தார்.

''நான்தான் அடிக்கச் சொன்னேன். முதலில் வந்து பார்த்தபோது எல்லா வீட்டையும் போல் மஞ்சள் காவி அடித்திருந்தது. எனக்குப் பச்சைதான் பிடிக்கும். சொன்னேன். மாற்றி அடித்து விட்டான்.''

''இந்தப் பச்சை வர்ணம் வெறும் சுவர்கள் – இதனால்தான், எல்லை, வரம்பு, ஒன்றும் இல்லாத வெளியில் நிற்கிறாற் போலத் தோன்றுகிறதோ என்னவோ?'' என்று மீண்டும் சுற்றுமுற்றும் பார்த்தார் அனந்தசாமி.

சற்று நேரம் கழித்து அனந்தசாமி, ''வாடகை இதற்கு என்ன கேட்கிறான் வீட்டுக்காரன்?'' என்றார்.

''மொத்தமாகப் பேசி ஆகிவிட்டது.''

''மாடிக்கு என்று என்ன உத்தேசித்திருக்கிறீர்கள்?''

''சந்நியாசிக்கு வாடகை தர உரிமையோ தெம்போ கிடையாது என்று.''

''மறுபடியும்.....?'' என்று கூச்சம் அவரைத் தடுக்கிற்று.

''ஆமாம். நீங்கள் வாடகை கொடுக்காமல் திமிர் என்று ஒரு நாள் மறைந்து விடுகிறீர்கள்? யார் என்ன செய்ய முடியும்? காஷாயம் ஒன்றைத் தவிர வேறு எதையும் ஜப்தி செய்ய முடியுமா?'' என்றாள் ருக்மிணி.

''நான் அவ்வளவு ஏழைச் சன்யாசி இல்லை. பதினாயிரம் ரூபாய் பாங்கியில் இருக்கிறது.''

''பாங்கியில்தானே இருக்கிறது?... இருந்து விட்டுப் போகிறது.''

''சன்யாசிக்கு எப்படிப் பதினாயிரம் ரூபாய் கிடைத்தது என்று நீங்கள் ஆச்சரியப் படக்கூட மாட்டீர்கள்போல் இருக்கிறதே.''

''ஆச்சரியப்பட ஒன்றும் காணோமே இதில். இந்த உலகத்தில் முக்கால்வாசிப் பணக்காரர்கள் சன்யாசிகள்தான். சில குணங்களை விட்டு விட்டால் பணம் கோடிக்கணக்கில் சம்பாதிக்கலாமே.... முக்கியமாக, கருணை, கொள்கை, பிறர் எப்படி வாழ்வார்கள் என்ற கவலை – இதை யெல்லாம் விட்டு விட்டால் எவ்வளவு வேண்டுமானாலும் பணம் சேர்க்க முடியுமே... பதினாயிரம் ரூபாய் சம்பாதிப்பது பெரிய சாதனை இல்லையே? இது வைத்தியம் செய்து சம்பாதித்த பொருள்தானே.''

''அதுவும் ஒரே ஆளிடத்தில். இலங்கையிலிருந்து ஒரு சாயபுதான் என்னை அழைத்து வந்தார், அவர் வீட்டில் வைத்தியம் செய்ய. குணமாயிற்று. பதினாயிரம் ரூபாயை என்னிடம் கொடுக்க வந்தார். மறுத்துப் பார்த்தேன். கேட்கவில்லை. பாங்கியில் கட்டி விட்டு என்னிடம் செக் புத்தகம் ஒன்றையும் கொடுத்து, 'நீங்கள் என்ன வேண்டுமானாலும் செய்து கொள்ளுங்கள்' என்று சொல்லி விட்டுப் போய் விட்டார். எட்டு வருஷங்களாக அப்படியேதான் இருக்கிறது.''

''தேவலையே. கை ரொம்பக் கெட்டி போல் இருக்கிறது.''

இருவரும் சிரித்தார்கள். (தொடரும்)



## பவுன் சூரியன் மார்க்

## புகையிலை

குணமும்
மணமும்
கொண்டது!

**M/s N. ஆறுமுகம் பிள்ளை**
**காரைக்குடி**

# விளையாட்டில்

## பாபுலர் சீட்டு கட்டுகள்



ஜனங்கள் கூடி விளையாடும்
இடங்களிலெல்லாம் நீங்கள்
எப்பொழுதும் பாபுலர் சீட்டுக்
கட்டையே பார்க்கலாம்.
காரணம் பாபுலர் சீட்டுக்
கட்டுகள் சுலபமாக எடுத்து
விளையாடுவதற்கேற்ற
வழவழப்பான உயர்ரக
போர்டுகளிலிருந்து கவர்ச்
சியான டிசைன்களில்
தயாரிக்கப்படுகின்றன.
இன்றே பாபுலர் சீட்டுக்கட்டு
ஒன்றை வாங்குங்கள்!



பாபுலர் பைன் ஆர்ட் லித்தோ
வொர்க்ஸ் பிரைவேட் லிட்.,
(கிழக்கு) பம்பாய்—33

# 8-ஆரம் அளித்த சிந்தனைகள்

தெருவில் வசந்தமாலை சுட்டிக்காட்டியவர்களைப் பார்த்ததும் சுரமஞ்சரி சற்றே வியப்பு அடைந்தாள். ''முன்பு ஒரு சமயம் புறவீதியில் நம் தேரை வழி மறித்துக்கொண்டு நின்று இளங் குமரனைப் பற்றிக் கேள்வி கேட்டாளே, அந்த மறக்குடிப் பெண்தான் அவள். உடன் போகிறவன் அவளுடைய அண்ணனாக இருப்பான் போல் தெரிகிறது'' என்று வசந்தமாலைக்குப் பதில் கூறிக்கொண்டே அவளைத் தன்னருகில் காணாமல் சுரமஞ்சரி பின்னால் திரும்பியபோது வசந்தமாலை ஊன்றுகோலின் யாளி முகப் பிடியை அதன் தண்டிலே வேகமாகப் பொருத்தித் திருகிக் கொண்டிருந்தாள். ஒரு கணம் அந்தச் செயலால் தன் கவனம் கவரப்பட்டு நின்ற சுரமஞ்சரி தான் அப்போது சொல்ல வந்ததை நிறுத்திக் கொண்டு தோழியிடம் வேறு ஒரு கேள்வியைக் கேட்டாள்.

''வசந்தமாலை! அந்த ஐம்படை ஆரத்தை உள்ளே வைத்துத்தானே திருகுகிறாய்?'' என்று கேட்டாள் சுரமஞ்சரி.

தலைவியின் இந்தக் கேள்விக்கு என்ன பதில் சொல்லுவதென்று சில விநாடிகள் தயங்கியபின்......''ஆமாம்'' என்ற பதில் வசந்தமாலையிட மிருந்து வந்தது. ஆனால் இந்தப் பதிலைக் கூறும்போது அவளுடைய முகம் இயல்பான உணர்வுடன் இல்லை. எதையோ பேச நினைத்துக் கொண்டே அந்த நினைப்புக்கு மாறான வேறொன்றைப் பேசும்போது தெரிகிற இரண்டுங்கெட்ட நிலையையே தோழியின் முகம் காட்டியது. அந்த முகத்தையும் தன் பேச்சையும் சேர்த்தே வீதிக்குத் திருப்பினாள் தோழி.

''சில நாட்களுக்கு முன்னால் புற வீதியில் விசாரித்துத் தெரிந்து கொண்டேனம்மா! இப்போது வீதியில் போய்க் கொண்டிருக்கிறாளே அந்த மறக்குடிப் பெண்ணின் பெயர் முல்லை என்று சொல்கிறார்கள். இந்த இரவு நேரத்தில் இங்கே பட்டினப் பாக்கத்து வீதியில் அவளுக்கும் அவள் தமையனுக்கும் என்ன தான் காரியமிருக்குமோ, தெரியவில்லை.....''

''நீ சொல்வதைப் பார்த்தால் உன்னையும், என்னையும் தவிர வேறு யாருக்குமே இந்தப் பட்டினப் பாக்கத்து வீதியில் எந்தக் காரியமும் இருக்கக் கூடாதென்பதுபோல் அல்லவா பேசுவதாகப் படுகிறது! அவளுக்குப் பட்டினப்பாக்கத்தில் என்ன காரியமோ? எத்தனை காரியமோ?'' என்று சிறிது கடுமையாகவே பதில் சொன்னாள் சுரமஞ்சரி. காரணமின்றித் தலைவியின் குரலில் கடுமை பிறந்ததைப் புரிந்துகொள்ள முடியாமல் ஊன்றுகோலைக் கீழே கொடுத்து அனுப்புவதற்காகப் பணிப்பெண்ணைத் தேடிக்கொண்டு செல்வது போல அங்கிருந்து விலகிச் சென்றாள் வசந்தமாலை. தலைவி ஐம்படைத் தாலியைப் பற்றிக் கேள்வி கேட்டபோது தான் வீதியில் போகிற முல்லையைப் பற்றிச் சொல்லிப் பேச்சை மாற்றியதால் அவளுக்குக் கோபம் வந்திருக்கலாமோ என்ற சந்தேகம் அப்போது வசந்தமாலையின் சிந்தனையில் படர்ந்தது. 'தான் எதற்காகப் பேச்சை மாற்றுவதற்கு முயற்சி செய்தோம்' என்பதை நினைத்தபோது வசந்தமாலைக்குப் பயம் பிடித்துக் கொண்டது. தலைவிக்கு அப்போது தெரிய வேண்டாமென்று தான் மறைவாகச் செய்த தந்திரத்தை வெளிப்படையாகவே தெரிவித்து விடலாமா என்றுகூட எண்ணினாள் அவள். தந்திரங்களிலும், சூழ்ச்சிகளிலும் மனம் வெறுத்தது போலச்



மணிபல்லவம்



நா. பார்த்தசாரதி

சுரமஞ்சரி சற்றுமுன் பேசிய பேச்சை யும் இப்போது நினைத்துக்கொண்டாள் வசந்தமாலை. இதை நினைத்தபோது இந்த நினைவுக்கு முரணான காரியத்தைத் தானே சற்று முன் செய்திருப்பதை எண்ணி நடுங்கினாள் அவள். தான் செய்த தந்திரமே சுரமஞ்சரியின் பார்வைக்கு இலக்காகியிருக்குமோ என்று சந்தேகமும் கொண்டாள் அவள். இந்தச் சந்தேகம் ஏற்பட்ட மறுகணம் ஊன்றுகோலை அப்போதே இழை கொடுத்து அனுப்புகிற எண் ணத்தைக் கைவிட்டாள் வசந்த மாலை. ஏதோ ஒரு தீர்மானத்துக்கு வந் தவள் போல் திரும்பவும் தன் தலைவி யின் அருகே சென்று நின்றாள் அவள். ஊன்றுகோலைத் தந்தையாரிடம் கொடுத்தனுப்புவதாகச் சொல்லிவிட்டுச் சென்ற வசந்தமாலை மறுபடியும் ஊன்று கோலுடனேயே திரும்பி வந்து நிற்ப தைக் கண்டு சுரமஞ்சரி கேட்டாள்:

''என்னடி வசந்தமாலை? ஏன் ஊன்று கோலைத் திரும்பக் கொண்டு வந்து விட்டாய்?''

''இதோ பாருங்கள் அம்மா!'' என்று ஊன்றுகோலை அப்படியே தலைவி யின் கைகளில் கொடுத்தாள் தோழி வசந்தமாலை.

''இன்னும் நான் பார்க்க இதில் என்ன இருக்கிறது? இதை மறுபடியும் பார்க்க வேண்டாமென்றுதானே உன்னிடம் கொடுத்து அனுப்பினேன். மறுபடி எதற் காக என்னிடமே கொண்டு வந்து கொடுக்கிறாய்? இன்று நீ ஏன் இப்படித் திடீர் திடீரென்று மாறி மாறி நடந்து கொள்கிறாய்?''

''மீண்டும் ஒருமுறைதான் இதைப் பாருங்களேன் அம்மா! இப்போது பார்க்கச் சொல்வதற்குக் காரணம் இருக்கிறது. முன்பு பார்த்ததில் இப் போது ஏதாவது குறைகிறதா என்றும் பாருங்கள்...'' என்று தன் இதழ்களில் சிரிப்பை வரவழைக்க முயன்று கொண்டே வசந்தமாலை மறுமொழி கூறிய போது சுரமஞ்சரி அவள் முகத் தைக் கூர்ந்து நோக்கிவிட்டுப் பின்பு மெல்ல மெல்ல ஊன்றுகோலின் யாளி முகப் பிடியைக் கழற்றினாள்.

ஊன்றுகோலை அவள் ஒவ்வொரு மரையாகக் கழற்றக் கழற்றப் பிடி யோடு சேர்த்துத் தன் நினைவும் ஒவ் வொன்றாகத் திருகப்படுவது போல உணர்ந்தாள் வசந்தமாலை.

சுரமஞ்சரி பிடியை நன்றாகக் கழற்றிக் குழலைக் கவிழ்த்தாள். முகத்தில் சந்தே கமும் பயமும் விளைந்திட மறுபடியும் ஆட்டி அசைத்துக் கொட்டுவது போல் ஊன்றுகோலின் குழலைக் கவிழ்த்தாள். கவிழ்க்கப்பட்ட இடத்தில் எந்தப் பொருளும் கவிழவில்லை. சூனியம்தான் இருந்தது. அந்த இடத்தின் வெறு மையைப் பார்த்துக்கொண்டே கண் களில் கோபம் பிறக்கத் தலை நிமிர்ந்து வசந்தமாலையின் முகத்தைச் சந்தித்தாள் சுரமஞ்சரி.

''வசந்தமாலை! முன்பு இருந்ததில் இப்போது ஏதாவது குறைகிறதா என்று கேட்டாய் அல்லவா? கேட்டுக்கொள். குறைவது ஒன்றல்ல. ஒரே சமயத்தில் இரண்டு பொருள்கள் குறைகின்றன. முதலில் எனக்கு உன்மேலிருந்த நம் பிக்கை குறைகிறது. இரண்டாவதாக இதில் என்ன குறைகிறதென்று உனக்கே நன்கு தெரியும்!''

இதைக் கேட்டு வசந்தமாலை சிரித் தாள். சிரித்துக் கொண்டே இடுப்பி லிருந்து அதுவரை அங்கே ஒளித்து வைக்கப்பட்டிருந்த அந்த ஐம்படைத் தாலியை எடுத்தாள்.

''நம்பிக்கை குறையும் போதே உங்க ளுக்குக் கோபம் பெருகுகிறதே, அம்மா? நாம் தெரிந்து கொள்ளத் தவிக்கும் உண் மைகள் நமக்கு விரைவில் தெரியவேண் டுமானால் இந்த ஐம்படை ஆரத்தை உள்ளே வைக்காமலே ஊன்றுகோலைத் தந்தையாருக்குத் திருப்பிக் கொடுத் தனுப்பவேண்டும். ஒரு பொருள் இன்றி யமையாதது அல்லவா என்பதை யும், அந்தப் பொருளைத் தன்னிடம் வைத்திருப்பவருக்கு அது எவ்வளவு அவசியம் என்பதையும், அறிய வேண்டு மானால் அதை அவரிடமிருந்து பிரித்து அவர் வசம் இல்லாமற் செய்து பார்த் தால்தானே அறிய முடியும்? உங்கள் தந்தையார் இந்த ஐம்படைத் தாலியை இவ்வளவு பத்திரமாக வைத்திருப் பதன் இரகசியத்தை நீங்களும் நானும் தெரிந்து கொள்ள வேண்டுமானால் அதற்கு ஒரே வழி இதை அவரிடம் இல்லாமற் செய்வதுதான் அம்மா! உங்க ளிடம் சொன்னால் கோபித்துக் கொள் வீர்களோ என்று பயந்துதான் நானாகவே இந்த வேலையைச் செய்தேன்.''

''எந்த வேலையைப் பிறர் செய்வதால் குழப்பங்கள் வளருகின்றன என்று நான் வருந்தினேனோ அதே வேலையை நீயும் செய்கிறாயடி வசந்தமாலை!''

''அப்படியல்ல அம்மா! 'இது என்ன இரகசியம்' என்று ஒன்றும் புரியாமல் மனத்தில் எண்ணி எண்ணிக் குழப்பம் அடைவதைக் காட்டிலும் நம்முடைய குழப்பங்களைத் தீர்த்துக் கொள்ள முயல் வது நல்லதுதானே?''

சுரமஞ்சரி பதில் பேசாமல் மௌன மாகத் தோழியின் கையிலிருந்த அந்தப்



பொன் ஆரத்தைப் பார்த்தபடியே நின்று கொண்டிருந்தாள்.

''நாளைக்கு விடிந்ததும் இந்த ஊன்று கோலை மட்டும் தந்தையாரிடம் சேர்த்து விடும்படி கொடுத்தனுப்புகிறேன். ஆரத்தை இங்கேயே வைத்துக் கொள்கிறேன். தேடித் தேடித் தவித்த பின் அவர் இங்கேயும் வருவார். அப்போது தான் இது அவருக்கு எவ்வளவு அவசியமென்று நமக்குத் தெரியும்'' என்றாள் தோழி வசந்தமாலை.

''எப்படியோ உனக்குத் தோன்றுவது போல் செய்'' என்று வேண்டா வெறுப்பாகக் கூறிவிட்டு உறங்கச் சென்றாள் சுரமஞ்சரி. மறுநாள் வைகறையில் அவள் கண் விழித்தபோது, அவள் செவியில் ஒலித்த முதல் வார்த்தைகள் தோழியினுடையனவாக இருந்தன.

''அம்மா! போது விடிந்ததும் முதல் வேலையாக ஐம்படை ஆரத்தை உள்ளே வைக்காமலே அந்த ஊன்றுகோலைக் கொடுத்து அனுப்பி விட்டேன். நகைவேழம்பரும் இன்று காலையில் கடற் பயணத்திலிருந்து வந்து விட்டாராம். உங்கள் தந்தையாரும் நகைவேழம்பரும் கீழே ஏதோ கடுமையாகப் பேசிக்கொண்டிருந்ததனால் உள்ளே போவதற்குப் பயந்து தந்தையாருடைய பள்ளியறை வாயிலிலேயே அவர் பார்வையில் படுகிற இடமாகப் பார்த்து ஊன்றுகோலை வைத்துவிட்டு வந்ததாகப் பணிப் பெண் கூறினாள்'' என்றாள் வசந்தமாலை. சுரமஞ்சரி அதைக் கேட்டு விட்டுத் தான் எந்தவிதமான உணர்வும் அடைந்ததாகக் காண்பித்துக் கொள்ளவில்லை.

''வசந்தமாலை! இன்றிலிருந்து என்னிடம் இத்தகைய குழப்பமான எண்ணங்களைப் பற்றியே பேசாதே. நேற்றிரவு நீண்ட நேரம் சிந்தனை செய்தபின் நான் ஒரு புதிய முடிவுக்கு வந்திருக்கிறேன்.

இன்று இந்த விநாடியிலிருந்து என்னுடைய வாழ்க்கையில் எனக்குப் புதியநாள் விடிகிறது. புதிய நோக்கம் புலர்கிறது. தந்தையாருடைய ஊன்றுகோலுக்குள் இருந்த ஐம்படைத் தாலியின் இரகசியத்தைத் தெரிந்து கொள்வதை விட அதிக ஆவலோடு தெரிந்து கொள்ள வேண்டிய வேறு துறைகளில் இப்போது என் மனம் செல்கிறது.''

'அப்படி உங்கள் ஆவலைக் கவர்ந்த துறைகள் என்ன?' என்று கேட்கும் விருப்பமும் 'இப்போது நம் தலைவி இருக்கும் நிலையில் இதைக் கேட்கலாமா வேண்டாமா' என்ற பயமுமாகச் சுரமஞ்சரியைப் பார்த்தாள் வசந்தமாலை. அப்போது சுரமஞ்சரியின் முகமானது பொழுது புலர்கின்ற நேரத்தின் அழகுகள் யாவும் ஒன்று சேர்ந்து மங்கலமாய் நிறைந்தாற் போல அமைதியா யிருந்தது. எதற்காகவும் பரபரப்புக் காட்டாதது போன்ற நிறைவு அவளுடைய கண்களில் தெரிந்தது.

அதிகாலையில் தோன்றி வளர்கின்ற நேரத்து ஒளிக்கே உரிய சுறுசுறுப்போடு மாடத்தில் நுழையும் செங்கதிர்க் கற்றைகளிலே பட்டு அவளுடைய முகமும் கைகளும், பாதங்களும் நெருப்பிலே குளித்து இளகும் பொன் வெள்ளமாய்த் தெரிந்தன.

''மன்னிக்க வேண்டும் அம்மா! பொது விடிந்து எழுந்ததும் எழுந்திராதுமாக நிற்கிற உங்களிடம்தான்



எதையோ வேண்டாததைச் சொல்லி மனத்தைப் புண்படுத்தி விட்டேன் போலிருக்கிறது. நீங்கள் ஆசைப்படுகிற புதிய துறைகளில் உங்கள் நாட்கள் பெருக வேண்டும். வளர்ந்து பொலிக உங்கள் ஆவல். உங்கள் மனத்துக்கு விருப்பம் இருக்குமானால் தயைகூர்ந்து எனக்கும் அதைப் பற்றிச் சொல்லுங்கள். இப்போது விருப்ப மில்லா விட்டால் விருப்பம் வருகிறபோது என்னிடம் சொன்னால் போதும்'' என்று பணிவாகக் கூறி வணங்கிவிட்டு அப்பாற் சென்றாள் தோழி வசந்தமாலை.

## 9 - செவ்வேள் திருக்கோயில்

மாலை மயங்கி இருள் சூழ்ந்து கொண்டு வரும் நேரத்துக்கு முல்லையும், கதக்கண்ணனும் வீதியில் அந்தப் பெரு மாளிகையைக் கடந்து சென்றபோது அதன் மாடத்தில் தென்பட்ட சுரமஞ்சரியையும், அவள் தோழியையும் பற்றித் தங்களுக்குள் சிறிது தொலைவு வரை பேசிக்கொண்டே போனார்கள்; அவர்கள் அப்போது பட்டினப்பாக்கத்து அரசர் பெருந்தெருவுக்கு அப்பால் உள்ள செவ்வேள் கோவிலுக்குப் போகவேண்டி யிருந்தது.

''இந்தப் பெண்தான் அன்று அன்றொரு நாள் நாளங்காடியில் அவர் சமயவாதம் புரிந்து கொண்டிருந்த போது குடலை நிறைய மலர்களைக் குவித்துக்கொண்டு வந்து அதில் மறைந்து வைத்திருந்த நச்சுப் பாம்பினால் அவரையே கொன்றுவிட முயன்றாள். இவள் பொல்லாத சூனியக்காரியாய் இருப்பாள் போல் தோன்றுகிறது. கூட்டத்தில் இருந்தவர்கள் தடுத்து விட்டார்களாம்.

# அறிவிப்பு

# ஸ்டேட் பாங்க் ஆப் இந்தியா

**1962 ஜனவரி 1-ம் தேதியிலிருந்து அமுலில் கொண்டுவரும்**

## விசேஷ வரவுநிதி மாற்றல் முறையை

**மகிழ்ச்சியுடன் அறிவிக்கிறார்கள்**

மேற்படி முறையினால் பாங்கியில் தனிநபர் கணக்கு வைத்திருக்கும் எந்த வாடிக்கைக்காரரும் எந்த ஒரு சமயத்திலும் ரூ. 1,000 வரையில் ரொக்கமாகப் பணத்தைச் செலுத்தித் தன்னுடைய கணக்கில் வரவு ஆவதற்காகக் **கட்டண மின்றி** மாற்றிக்கொள்ள பாங்கியின் எந்த ஆபீஸையும் உபயோகித்துக் கொள்ள முடியும்.

பாங்கியில் பணம் போட்டு வைக்கும் சம்பந்தத்தினால் இந்த இலவசமான **விசேஷ வரவுநிதி மாற்றல்** வசதியைப் பெற தேச முழுவதும் உள்ள பாங்கியின் 900 ஆபீஸ்களில் எந்த ஒன்றையும் பயன்படுத்திக் கொள்ளும் உரிமை கிடைக்கிறது.

**விவரங்களுக்கு**

**தயவு செய்து ஸ்டேட் பாங்கின் எந்த ஆபீஸையாவது அணுகுங்கள். அங்கே உங்களுக்குத் துணை செய்யும் ஒரு நண்பரை எப்பொழுதும் காணலாம்.**

## ஸ்டேட் பாங்க் ஆப் இந்தியா

**தேச சேவையில் இந்தியாவின் முன்னணியிலுள்ள பாங்க்**

இல்லாவிட்டால் ஆலமுற்றத்துத் தாத் தாவும் மற்றவர்களும் அங்கேயே இவள் கழுத்தைத் திருகிக் கொன்றிருப்பார் கள்.....'' என்று ஆத்திரத்தோடு பேசிக் கொண்டே வந்த போது முல்லையின் முகம் போன போக்கைப் பார்த்துக் கதக்கண்ணன் மெல்ல நகைத்தான்.

''ஏதேது? அந்தப் பெண்ணின்மேல் உனக்கு இருக்கும் ஆத்திரத்தைப் பார்த் தால் அவளைக் கொல்ல நீ ஒருத்தியே போதும் போலத் தோன்றுகிறதே !''

''தோன்றுவது என்ன? அப்படி ஒரு சமயம் நேர்ந்தால் அதைச் செய்வதற் கும் என் கைகளுக்கு வலு உண்டு அண்ணா! நிச்சயமாக அந்தப் பெண்ணை விட நான்தான் பலசாலியாயிருப்பேன். ஒருவேளை தோற்றத்திலும், அழகிலும் வேண்டுமானால் அவள் என்னைக் காட்டி லும் சிறந்தவளாக இருக்கலாம்.''

''அது சரி! ஆனால் தோற்றத்தில் அழகாயிருப்பவர்களுக்கு அப்படி அழகா யிருப்பதும் ஒரு பெரிய பலம் ஆயிற்றே, முல்லை?'' என்று சொல்லிக் குறும்பாகச் சிரித்தான் அவள் தமையன்.

''அழகாகவும், மணமாகவும் இருக் கிற பூக்களில் எல்லாம் முள்ளும் அதிக மாக இருக்கும் அண்ணா ! தாழம்பூவில் மடல் முழுவதும் முள்ளாயிருப்பதைப் போலத் தோற்றம் நிறைய அழகையும், மனம் நிறையக் கெட்ட எண்ணத்தை யும் வைத்துக் கொண்டிருப்பவர்களுக்கு அதையே பலம் என்று எப்படிச் சொல்ல முடியும்...?''

''முடியுமோ, முடியாதோ? அந்தப் பட்டினப்பாக்கத்துப் பெண்ணிடம் மற் றவர்கள் அழகாக நினைக்கக்கூடிய அம் சங்கள் இரண்டு மூன்று இருக்கின்றன. முதலில் அவளுடைய செல்வமே அவ ளுக்கு ஓர் அழகு. அப்புறம் அவளிடம் இயற்கையாக அமைந்திருக்கிற அழகு அவளுக்கு இன்னொரு செல்வம். அந்த அழகில் அமைந்திருக்கிற வசீகரத் தன்மை மற்றொரு செல்வம். ஆனால் இவற்றை யெல்லாம் நீ ஒப்புக் கொள்ள மாட்டாய். தன்னைத் தவிர இன்னொரு பெண்ணும் அழகாயிருக்கிறாள் என்று ஒப்புக்கொள்கிற பெண்கள் இந்த உலகத் தில் மிகவும் குறைவு. இந்த விஷயத்தில் பெண்களும் கலைஞர்களைப் போன்ற வர்களே. பிறருடைய திறமையில் பொறாமை காணாத உண்மைக் கலைஞ னைத் தேடியும் கண்டுபிடிக்க முடியாதது போல் பிறருடைய அழகில் பொறாமை கொள்ளாத பெண்ணையும் உலகில் காண முடியாது போலிருக்கிறது, முல்லை!''

முல்லையின் முகத்தில் எள்ளும் கொள் ளும் வெடிப்பது போல் கொதிப்புத் தெரிந்தது. சீற்றத்தோடு வீதியில் நடப் பதை நிறுத்திவிட்டுத் தன் தமையனை நிமிர்ந்து பார்த்தாள் அவள்.

''சீற்றமடையாதே, முல்லை! உன் மனத்தில் இருக்கிற எல்லாக் கோபத் தையும் உள்ளே சிறிதும் தங்கி விடாமல் அப்படியே முகத்தில் வரவழைத்துப் பார்க்கவேண்டுமென்று எனக்கு ஆசை யாயிருந்தது. அதற்காகத்தான் வேண்டு மென்றே இப்படிப் பேசினேன்.''

கதக்கண்ணன் தங்கையை நோக்கிக் கைகொட்டிச் சிரித்தான். உடனே பதி லுக்குப் பதில் கேட்டுவிடத் துடிப்பவள் போல் சிரித்துக்கொண்டே அவனைக் கேட் டாள் முல்லை.

''பெண்களை மட்டும் குறை சொல்ல வந்து விட்டீர்களே? இன்னொருவனு டைய வீரத்தில் பொறாமைப்படாத வீரன், இன்னொருவனுடைய அறிவிலே பொறாமைப் படாத அறிவாளி உலகத் தில் எங்காவது இருக்கிறானா? நீங்கள் எல்லாம் உங்களை ஒத்த வீரர்களை வெற்றி கொள்ளத் தவிக்கிறீர்கள். அவரைப் போன்றவர்கள் தம்மை ஒத்த அறிவாளிகளை வெற்றி கொள்ளத் தவிக்கிறார்கள்.''

''எவரைப் போன்றவர்களைச் சொல் கிறாய் முல்லை?''

''அவர்தான்! அன்றைக்குக் கப்பலில் ஏறும்போது 'போய்விட்டு வருகிறேன் முல்லை'-என்று என்னிடம் ஒரு வார்த்தை சொல்வதற்குக் கூடத் தோன்றாமல் முகத்தைத் தூக்கிக் கொண்டு போனாரே; அந்த மனிதரைத்தான் சொல்கிறேன் அண்ணா'' - என்று பேசிக்கொண்டே குனிந்து தரையைப் பார்த்தாள் முல்லை. அந்த நேரத்தில் தன் முகத்தைத் தமை யன் பார்க்கவிடலாகாது என்று தோன் றியது அவளுக்கு. ஆனாலும் அவன் பார்த்து விட்டான்.

''புரிகிறது முல்லை! இப்போதுகூட நீயும் நானும் அவருடைய கோவிலுக் குத்தானே வணங்குவதற்குப் போய்க் கொண்டிருக்கிறோம்? முருகக் கடவு ளாகிய செவ்வேளுக்குத் தானே இளங் குமரன் என்று மற்றொரு பெயர் கூறுகிறார்கள்? அவருடைய ஞாபகம் வந்ததனால்தானோ என்னவோ இன்று மாலை நீ ஒரு நாளுமில்லாத் திரு நாளாய்ப் பட்டினப்பாக்கத்துக்கு வந்து இளங்குமரக் கடவுளாகிய செவ்வேள் திருக்கோவிலை வணங்க வேண்டும் என்றாய்! உன்னுடைய திருட்டுத்தன மான மனக் குறிப்பு இப்போதல்லவா எனக்குப் புரிகிறது?''-என்று கதக்கண் ணன் அவளை வம்புக்கிழுக்கத் தொடங் கியபோது அந்த வம்பு தன்னிடம் படிப் படியாய் விளைவிக்கும் நாணங்களை மறைக்க விரும்புகிறவள்போல் அரசர்



பத்திரிகை நிருபர்:—இருட்டிலே பயப்படாமே நீங்க எப்படித் திருடன் தலையிலே ஒரு போடு போட்டீங்க?

அம்மணி:—இருளில் வந்தது என் கணவராக்கும் என்று நினைத்து விட்டேன்

பெருந் தெருவின் அகன்ற சாலையில் விரைந்து நடந்தான் முல்லை. கதக்கண்ணனும் தொடர்ந்து அவள் வேகத்துக்கு இணையாக நடந்தான். மாபெரும் அரண்மனையும் அதைச் சுற்றிலும் கண் பார்வைக்கு எட்டும் தொலைவு வரை அரண்மனையைப் போலவே தெரிந்த வேறு பல பெருமாளிகைகளுமாகத் தோன்றின. பூம்புகார் நகரத்தின் இதயம் போன்ற ஆரவாரமான பகுதிக்குள் புகுந்து வந்திருந்தார்கள் அவர்கள். இன்னும் சிறிது தொலைவு சென்று அடுத்த வீதியில் திரும்பினால் அறுமுகச் செவ்வேளாகிய முருகப் பெருமானின் அணிதிகழ் கோவில் தென்படும். கோவிலின் மேலே ஒளி வீசிப் பறக்கும் சேவற் கொடி அப்போது அவர்கள் நடந்து கொண்டிருந்த இடத்திலிருந்தே நன்றாகத் தெரிந்தது. அரண்மனையின் முரச மண்டபத்தில் மாலை நேரத்து மங்கல வாத்தியங்கள் முழங்கிப் பரவிக் கொண்டிருந்தன. பல்வேறு பூக்களின் நறுமணமும், தீப வரிசைகளின் ஒளியும் தேரும், குதிரையும், யானையும், சிவிகையும் நிறைந்த இராச வீதியின் கலகலப்பும் இந்திரனுடைய தேவருலகத்துத் தலைநகரமாகிய அமராபதியின் வீதிகளில் நடந்து போய்க் கொண்டிருப்பதைப் போன்ற உணர்வை முல்லையின் மனத்தில் ஏற்படுத்தின. செவ்வேள் கோவில் மாடத்தின்மேல்தெரிந்த சேவற் கொடி இளங்குமரன் அன்று நாளங்காடியில் ஏந்தி நின்ற ஞானக்கொடியாக மாறி அதைப் பற்றிக்கொண்டு அவனே நிற்பதைப் போல அவள் கண்களுக்கு மட்டும் தெரிவதுபோலிருந்தது. தனக்கு நினைவு தெரிந்த நாளிலிருந்து இளங்குமரனுடன்தான் பழக நேர்ந்த காலத்து நிகழ்ச்சிகள் ஒவ்வொன்றாகத் தன் மனக் கண்களில் அவளுக்குத் தெரிந்தன. அவள் அப்போது உணர்ச்சிமயமாக நெகிழ்ந்த மனத்துடனிருந்தாள். அறுமுகச் செவ்வேளாகிய குமரக் கடவுளின் அணிதிகழ் கோவிலுக்குள் நுழைந்தபோது அதற்கு முன்பே தன் மனத்தில் நுழைந்து கோவில் கொண்டு விட்ட மற்றொரு குமரனையும் வணங்கிக் கொண்டிருந்தாள் முல்லை. அப்போது அவளுடைய மன நிலைக்குப் பொருத்தமான உற்சாகப் பேச்சு ஒன்றை அவளுடைய தமையனும் தொடங்கினான்:-

''முல்லை! அந்த இளங்குமரன் மேல் ஆசைப்படுகிற பெண்கள் மட்டும்தானே உன்னுடைய பொறாமைக்கும் உரியவர்கள்? இந்த இளங்குமரனைத் தேடி வருகிறவர்களையும் அப்படி நினைத்து விடாதே. இவன் இந்தக் காவிரிப்பூம் பட்டினத்திலுள்ள எல்லாரும் ஆசைப்படுவதற்கு உரியவன். இவனையாவது எல்லாரும் நினைக்கவும் ஆசைப்படவும் நீ உரிமை தருவாயோ இல்லையோ?''-என்று கோவிலுக்குள்ளிருந்த குமரக் கடவுளைக் காட்டி நகைச்சுவையாகக் கதக்கண்ணன் கூறிய சொற்கள் முல்லையின் மனத்தில் மணமிக்க மலர்களை அள்ளிச் சொரிந்தாற்போல் பதிந்தன.

அப்போது செவ்வேள் கோவிலில் மணி ஒலித்தது. கண் முன் தெரிந்த கோவிலில் காவிரிப்பூம் பட்டினத்துத் தெய்வமான இளங் குமரனையும், - தன் மனத்தில் கோவில் கொண்டு தனக்குத் தெய்வமாகிவிட்ட இளங்குமரனையும் சேர்த்தே வணங்கினாள் முல்லை.

''உன்னுடைய இளங்குமரன் கப்பலில் ஏறி மணிபல்லவத்துக்குப் போய்க் கொண்டிருக்கிறான் முல்லை. இந்த இளங்குமரனோ எங்கும் நகரவே முடியாமல் இந்தப்பட்டினப் பாக்கத்துக் கோவிலில் பெரிய பெரிய செல்வர்களின் வணக்கங்களை எல்லாம் ஏற்றுக் கொண்டு இங்கேயே நிற்கிறான்'' என்று கதக்கண்ணன் விளையாட்டாகக் கூறியபோது அந்த இளங்குமரனும் இந்தச் செவ்வேளைப் போலவேதான் மட்டும் வணங்க முடிந்த கோவில் ஒன்றில் நகராமல் தெய்வமாக நின்று விட்டால் எவ்வளவு நலமாக இருக்குமென்று விநோதமானதொரு கற்பனை நினைப்பில் மூழ்கினாள் முல்லை.

''அடடா! இந்தக் குமரனையும் உனக்கே தனி யுரிமையாக்கிக் கொண்டு விடுவாய் போலிருக்கிறதே முல்லை. நாம் வந்து நேரமாகிவிட்டது. திரும்பலாம் அல்லவா?''-என்று தமையன் நினைவூட்டியபோதுதான் செவ்வேள் கோவிலிருந்து திரும்பி வீட்டுக்குப் புறப்படும் நினைவு வந்தது அவளுக்கு. (தொடரும்)

# இந்தியாவில் கிரிக்கெட்

குண்டுமணி

இந்தியாவில் கட்ச்சில் 1725-ம் வருஷம் கடலில் வந்து இறங்கிய ஆங்கில மாலுமிகளே முதன் முதலில் கிரிக்கெட் ஆட்டத்துக்கு வித்தூன்றியவர்கள்.

அதற்குப் பிறகு இந்தியாவில் தங்கிய ஆங்கிலேயர்கள் ராணுவப் படைத்தளங்களிலும், வியாபார ஸ்தலங்களுக்கு அருகிலும் கிரிக்கெட் ஆடுவது வழக்கமாயிருந்தது. முதன் முதலில் கிரிக்கெட் பந்தயம்-1804-ம் வருஷம் கல்கத்தாவில் நடைபெற்றது. இந்தப் பந்தயத்தைக் கல்கத்தாப் பிரமுகர்களும் ஈதோனியர்களும் ஆடினர். இந்த வகையிலே கல்கத்தாவிலேயுள்ள ஈடன் கார்டன் கிரிக்கெட் மைதானம் உலகத்திலேயே பழைமையான கிரிக்கெட் மைதானத்திலே இரண்டாவது ஸ்தானத்தை வகிக்கிறது. இந்தக் கிரிக்கெட் மைதானம் இன்று நவீன வசதிகள் படைத்துப் பல்லாயிரக்கணக்கான பேர்கள் அமருவதற்கு லாயக்காக உள்ளது. ஆனால் நூற்றைம்பத்தேழு வருஷங்களுக்கு முன் இந்த ஈடன் மைதானம் சிறியதுதான். ஓர் அரச மரத்தடியிலே விளையாட்டுக்காரர்களும் ஆட்டத்தைக் கண்காணிப்பவர்களும் அமர்ந்திருந்திருக்கிறார்கள். இம்மரம் இன்றும் நின்று பழம் சரித்திரத்தைப் பகர்ந்து கொண்டிருக்கிறது.

பம்பாயிலே பார்ஸிகள் 1848-ல் கிரிக்கெட் சங்கம் நிறுவி ஆடத் தொடங்கினர். ராணுவத் தளங்களிலும் கோட்டைகளிலும் ஆங்கிலேயர்கள் கிரிக்கெட் ஆடிக் கொண்டிருப்பார்கள். இதைப் பார்ஸிச் சிறுவர்கள் வேடிக்கை பார்ப்பது வழக்கம். சில சமயம் ஆங்கிலேயர்கள் இந்தச் சிறுவர்களை ஆட்டத்திலே சேர்த்துக் கொள்வதுமுண்டு. இந்த ஆர்வமே பார்ஸிச் சிறுவர்களை 1848-ல் ஓரியண்டல் கிரிக்கெட் சங்கம் நிறுவத் தூண்டியது. போதிய ஆதரவில்லாததால் இந்தக் கிரிக்கெட் சங்கம் நீண்ட நாட்கள் நீடித்து நிற்கவில்லை. இதில் ஆர்வமுள்ள இளைஞர்கள் சிலர் டாட்டாக்களையும், வாடியாக்களையும் அணுகி நிதி உதவி பெற்று 1850-ம் ஆண்டு ஜோராஸ்டிரியன் கிளப்பைத் தோற்றுவித்தனர். பம்பாய் எஸ்பிளனேடில் மைதானம் பெற்று அவர்கள் ஆடத் தொடங்கினர்.

முதல் ஆங்கிலேய-இந்திய கிரிக்கெட் மாட்ச் 1877-ம் வருஷம் பம்பாயில் நடைபெற்றது. இந்தப் பந்தயத்தில் ஆங்கிலேயரும் பார்ஸிக்களும் ஆடினர்: இந்த ஆட்டத்தில் அதிசயம் என்ன தெரியுமா? பவுண்டரி எண்ணிக்கை கிடையாது. இரு விக்கெட்டுகளுக்கு நடுவில் ஓடும் ரன்களே கணக்கு. வேடிக்கையாக இல்லையா?

1886-ம் வருஷம் பார்ஸிக்கோஷ்டி இங்கிலாந்துக்கும் போய் ஆடி விட்டு வந்திருக்கிறது. இந்தியாவுக்கு விஜயம் செய்த இரு ஆங்கிலேய கிரிக்கெட் கோஷ்டியினரைப் பார்ஸிக்கள் வென்றிருக்கிறார்களாம்!

சென்னையில் 1855 ம் வருஷம் ஐலண்ட் மைதானத்தில் முதன் முதலாகக் கிரிக்கெட் ஆடப் பட்டது. கிரிக்கெட், கல்லூரி மாணவர்களிடையே நன்கு பரவுவதற்காக பென்னிகுயிக் கோப்பைப் பந்தயம் நிறுவப்பட்டது. மேலும் வெர்னன் தலைமையில் வந்த ஆங்கில கிரிக்கெட் கோஷ்டியினரும், லார்ட் ஹாக் கோஷ்டியினரும் சென்னையில் கிரிக்கெட் ஆவல் வளரத் தூண்டுகோலா யிருந்தனர்.

இதே தருணத்தில்தான் பிரபல கிரிக்கெட் ஆட்டக்காரர் ரஞ்சி, தமது ஆட்டத்திறனால் இங்கிலாந்துமக்களைக் கலக்கியதும் இந்திய ஆட்டக்காரர்களின் கவனத்தைக் கவர்ந்தது. 1911ம் ஆண்டு இங்கிலாந்துக்கு இந்திய கிரிக்கெட் கோஷ்டி ஒன்று விளையாடப் புறப்பட்டுவிட்டது என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்!

இந்தியாவுக்கு மேற்கிந்தியத் தீவுகள், ஆஸ்திரேலியா, பாகிஸ்தான் கோஷ்டிகள் சென்ற பல ஆண்டுகளில் வந்து ஆடியுள்ளன. 1959-ல் ஆஸ்திரேலியக் கோஷ்டியைக் கான்பூரில் இந்தியா வென்றது இந்திய கிரிக்கெட் வளர்ச்சியின் சிறப்புக்குச் சான்று. இப்பொழுது இங்கிலாந்திலிருந்து வந்துள்ள எம். ஸி. ஸி. கிரிக்கெட் குழுவினர் இந்திய கோஷ்டியுடன் இரண்டு டெஸ்ட் பந்தயங்கள் ஆடிவிட்டனர். இரண்டு டெஸ்ட் பந்தயங்களுமே வெற்றி தோல்வியின்றி முடிந்துவிட்டன. இனி வரப்போகும் டெஸ்டிலாவது இந்தியா தன் திறமையை நிரூபிக்கும் என்று எதிர்பார்ப்போம்.

# வட்டமேஜை



## அபிவிருத்தி யாருக்கு?

நான் கோவை யருகேயுள்ள சின்னத் தடாகக் கிராமத்தைச் சேர்ந்த ஒரு சிறிய விவசாயி. என் நிலத்தைச் சமநிலப்படுத்துவதற்காக புல்டோசர் வாங்க உத்தேசித்து என் பூமியை ஈடு வைத்துக் கொண்டு எனக்கு ரூ. 1000 கடன் கோரிப் பெரியநாயக்கன் பாளையம் வட்டார அபிவிருத்தி அதிகாரிக்கு 30-1-61-ம் தேதி மனு அனுப்பினேன். ஆறு மாதங்கள் வரை அதற்கு எத்தவிதமான பதிலும் கிடைக்கவில்லை. பிறகு ''ரூபாய் முப்பது கடனில் பூமியின் மண் வளத்தைப் பாதுகாத்துத் தருகிறோம். அதை இப்பொழுது செய்து கொள்ளுங்கள்'' என்று தெரிவித்தார்கள். அதற்கு ஒப்பந்தமும் எழுதிக் கொடுத்தேன். நாளது வரையில் என் நிலத்தில் எவ்வித முன்னேற்றமும் செய்யவில்லை. ரூபாய் ஆயிரம் கடன் கேட்ட மனுவுக்கும் பதிலும் கிடைக்கவில்லை.

இது வட்டார அபிவிருத்தியா, அல்லது குறிப்பிட்ட வர்க்கத்தினரின் அபிவிருத்தியா?

சின்னத்தடாகம்
29-11-61 — ஆர். முத்துஸ்வாமி

## சொல்லொன்று செயலொன்று

மதுரை மாவட்டம் பெரியகுளம் தாலூக்காவிலுள்ள பண்ணைப்புரத்தில் சர்க்கார் புறம்போக்கு நிலங்களில் சுமார் நூறு வீடுகள் கட்டிக்கொண்டு வீடில்லா ஏழை மக்கள் எட்டு ஆண்டுகாலமாக வாழ்ந்து வந்தனர். வீடுகளால் போக்குவரத்துக்கு இடைஞ்சலாக உள்ளது என்று காரணம் காட்டித் தற்போது அவை இடிக்கப்பட்டு விட்டன.

''ஏழை மக்களுக்கு வீடுகள் கட்டிக்கொடுக்கிறோம்'' என்று கனம் மந்திரிகள் மேடையேறி முழங்குகிறார்கள். ஆனால் இங்கோ கட்டிய வீடுகளெல்லாம் இடிக்கப்பட்டு விட்டன. எட்டு ஆண்டு காலமாகப் போக்குவரத்துக்கு இடையூறாக இல்லா அவ் வீடுகள் இன்று திடீரென்று இடிபடுதலின் காரணம்தான் புரியவில்லை. பனி கொட்டும் இத்தருணத்தில் பொதுமக்களுக்கு வேறு வீட்டு வசதி கிடைக்குமுன் இவ்வாறு செய்திருப்பது நியாயமா?

பண்ணைப்புரம்
27-11-61 — இரா. மதியன்

## குழலோசை கேளோமோ?

இன்று காலை சென்னை-தாம்பரம் பகுதியிலோடிய ஒரு மின்சார வண்டியின் குழல் சரியாக இயங்கவில்லை. நம்பர் 4 இலக்கமிட்ட அந்த வண்டி எல்லா ஸ்டேஷன்களிலும் குழலோசை செய்யாமலே புறப்பட்டது. ஸ்டேஷன்மாஸ்டர் விசில் ஊதுவதைவிட வண்டி புறப்படுவதைக் குறிக்க குழலோசையே சிறந்த எச்சரிக்கையாகும். இந்த எச்சரிக்கை இல்லாமல் வண்டி புறப்படுவதால் விபத்துக்கள் ஏற்படக் கூடும். ஆகையால் இவ் விஷயத்தில் ரயில்வே அதிகாரிகள் தக்க நடவடிக்கை எடுக்க வேண்டும்.

அடையாறு
2-12-61 — எஸ். என். ராஜன், எஸ். ஆர். குமார்

## மாற்றறியும் சொழும் பசும் பொன்

பவுன் என்பது 91⅔ சத விகிதம் தங்கமும் 8⅓ சதம் செம்பும் கலந்தது என்று நிர்ணயம் செய்யப் பட்டிருக்கிறது. பதினைந்து ஆண்டுகளுக்கு முன் நகைக் கடைகளில் பத்துக்கு ஒன்று என்ற விகிதத்தில் தங்கத்துடன் செம்பு கலந்து நகை செய்து விற்று வந்தார்கள். தற்போதோ நகைக் கடைக்காரர்களில் பலர் எட்டுக்கு இரண்டு என்று செம்பு கலந்து நகைகள் செய்து, தம் விலாசத்தைச் சீல் இட்டு எப்போது திருப்பிக் கொடுத்தாலும் அந்தக் கால நிலவரப்படி பணம் திருப்பிக் கொடுப்பதாக உத்தரவாதம் அளிக்கிறார்கள். பவுன் விலை ரூ. 100- ஆக இருக்கும்போது மூசைத் தங்கம் தோலா ரூ. 125-க்கு விற்கிறது. எட்டு தோலா மூசைத் தங்கத்தை வாங்கி இரண்டு தோலா செம்பு கலந்தால் கிடைக்கும் பத்து தோலா அல்லது பதினாறு பவுன் ரூ. 1000-க்குக் கிடைக்கிறது. அதாவது பவுனுக்கு ரூ. 62.50தான் அசல் விலையாகிறது. இதையே பவுன் ரூ. 100 விற்கும்போது ''இனம்'' என்ற பெயரால் பவுன் எடை ரூ. 97-க்கு விற்பனை செய்கிறார்கள். அதாவது ஒரு பவுனுக்குச் சுமார் ரூ. 30 லாபம் கிடைக்கிறது.

சில பொருள்களுக்குத் தர நிர்ணயம்செய்து சர்டிபிகேட் வழங்கி வரும் சர்க்கார் தங்கத்துக்கும் ஏன் தர நிர்ணயம் செய்யக் கூடாது?

அந்தியூர் — உண்மை விளம்பி

## வள்ளுவர் வாசகம்

நமது தலைவர் ராஜாஜி அவர்கள் ஆக்ரா மகாநாட்டில் ''விவசாயிக்கு நிலம் இரண்டாவது மனைவி. அதன் மீது கைவைக்க யாருக்கும் உரிமை கிடையாது'' என்று கூறியிருக்கிறார் அல்லவா? இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பிருந்த திருவள்ளுவரே நிலம் இரண்டாவது மனைவி என்று சொல்லி யிருப்பது இங்கு குறிப்பிடத் தக்கதாகும்.

''செல்லான்கிழவன் இருப்பின் நிலம்புலந்து
இல்லாளின் ஊடிவிடும்''

என்கிறார் திருவள்ளுவர்.

நிலத்துக்கு உரியவன் தானே அதில் நேரடியாகக் கவனம் செலுத்தாமல் வீட்டில் இருந்தால் அந்த நிலமானது மனைவியைப்போல் ஊடல் செய்யும் என்பதே இதன் பொருள்.

மாயூரம் 8
28-11-61 — மு. வைத்தியநாதன்

# இப்பொழுது எல்லாவகை

# டெக்

## டூத்பிரஷ்களும்

# கிருமிகளை எதிர்க்கும் சக்தி வாய்ந்தவை!

டெக் டூத்பிரஷ்கள் கிருமிகளை அணுகின மாத்திரத்தில் எதிர்ப்பதற்கு பிரத்தியேக முறையில் தயாரிக்கப்பட்டவை. அவை வாயில் நோய்கள் வாராமல் பாதுகாப்பவை. டெக் ஆன்டி - ஜெர்ம் டூத்பிரஷ்கள் பல் துலக்கும்போதும், பிறகு உபயோகிப்பதற்காக வைக்கப்பட்டிருக்கும்போதும், கிருமிகளை அணுகின மாத்திரத்தில் எதிர்க்கின்றன. டெக் ஆன்டி-ஜெர்ம் டூத்பிரஷ்களின் கிருமிகளை எதிர்க்கும் இந்த சக்தியானது கடைசிவரை இருக்கும்.

டெக் ஆன்டி-ஜெர்ம் பிரஷ்களின் பலவேறு ரகங்களிலிருந்து உங்களுக்குத் தேவையானதைப் பொறுக்கி எடுங்கள் ... இணையற்ற டெக் டீலக்ஸ் ரகம் தொட்டு குழந்தைகளுக்கான 'டெக் சைல்டு' வரை எல்லா ரக டூத்பிரஷ்களும் உள்ளன. டெக் ஆன்டி-ஜெர்ம் டூத்பிரஷ்கள் மிருதுவான, எனினும் துப்புரவாகச் சுத்தம் செய்யக்கூடிய குச்சங்களைப் பெற்றிருக்கின்றன. அவைகளின் சிறப்பான அம்சங்களைப் பாருங்கள் ...வேலைப்பாடுடன் கூடிய கைப்பிடிகள், 'மிரகிள் க்ரிப்'பிடிகள், அழகிய டீலக்ஸ் கைப்பிடிகள்...விதவிதமான கலர்கள்...கவரில் மாட்டக் கூடிய அழகான பிளாஸ்டிக் உறை! இத்தனை ரம்மியமான வகைகளில் டெக் ஆன்டி-ஜெர்ம் டூத்பிரஷ்கள் இருக்கும்பொழுது நீங்கள் ஏன் மட்டரக பிரஷ்களை வாங்கவேண்டும்!

**டெக்** ஒன்றுதான் கிருமிகளை எதிர்க்கக் கூடியது!

ஜான்ஸன் அண்டு ஜான்ஸன் ஆப் இந்தியா லிமிடெட்

JWT-TEK-3716

# நேர்மை

## கே. வேங்கடராமன்

**வி**டிந்தால் கிறிஸ்துமஸ்.

பாளையங்கோட்டை ஊசிக் கோபுர மாதா கோயில் தீபாலங்காரத்தில் கொள்ளையழகுடன் காட்சி யளித்துக் கொண்டிருந்தது!

வானுற ஓங்கி நிற்கும் அதன் கம்பிரத்தைக் கண்டபடி எண்ணற்ற கிறிஸ்தவர்கள் சாரிசாரியாய்த் தேவராலயத்தினுள் வருவோரும் போவோருமாக இருந்தனர். கர்த்தரின் பாதார விந்தத்தில் அவர் நாமம் பரவத் தம் வாழ்வை அவருக்கே அர்ப்பணித்து விட்ட பாதிரியார்கள் அமைதியே உருவமாய் அங்குமிங்கும் சென்று கொண்டிருந்தனர்.

'பாவிகளை இரட்சிக்க இயேசு உலகில் வந்தார்' என்ற சொற்றொடர் பலகை மதிற் சுவரை அடுத்து வெளியில் தலையை நீட்டிக் கொண்டிருந்தது. அதனடியில் நின்று கொண்டிருந்தார் கான்ஸ்டேபிள் மரியானந்தம். அன்று அவருக்கு அங்கே 'பீட்'.

அமெரிக்காவிலிருந்து பிரக்கியாதி பெற்ற கிறிஸ்துவ மத பிரசாரகர் ஒருவர் கடந்த ஒரு வார காலமாய்ப் பாளையங்கோட்டையில் தங்கி இயேசு பெருமானின் வாழ்க்கையையும் அவரது அருள் உபதேசங்களையும் மக்களுக்கு எடுத்துக் கூறி வந்தார். திருநெல்வேலி ஜில்லாவிலே, கிறிஸ்துவ மதத்தைச் சேர்ந்தவர்கள் நிறைய வாழும் ஊராயிற்றே பாளையங்கோட்டை!



நாசரேத், உடன்குடி, அடைக்கலா புரம் இப்படிப்பட்ட அருகிலுள்ள ஊரினரெல்லாம் திரள் திரளாக வந்து கர்த்தரின் குரலைக் கேட்டவண்ணம், நாள்தோறும் வந்து சென்றுகொண்டிருந்தனர். அவரது வருகையாலும் பிரசங்கத்தாலும் பாளையங்கோட்டை நகரமே திருவிழாக் கோலம் பூண்டிருந்தது.

கூட்டம் இருக்கிற இடத்தில்தானே திருடர்களுக்கு வேலை! திருடர்கள் இருக்கிற இடத்தில்தானே போலீசுக்கு வேலை! இடது கக்கத்தில் கைத்தடியை இடுக்கிக் கொண்டு மரியானந்தம் 'பீட்'டுக்கு வந்து விட்டார். 'ஜே ஜே' என்றிருந்த ஜனக் கூட்டத்தினிடையே அவரது அனுபவப்பட்ட கண்கள் மனிதர்களை நல்லவராகவும் கெட்டவராகவும் பிரித்தன. கெட்டவரிடமிருந்து நல்லவர்களையும் அவர்களது உடைமைகளையும் காப்பாற்றுவதுதானே அவர் மேற்கொண்டிருந்த தொழில்.

'டக் 'டக்' என்று பூட்ஸ் ஒலி எழுப்ப மரியானந்தம் கம்பீரமாக நடந்தாலும் அவர் மனம் என்னமோ கூனிக் குறுகித்தான் கிடந்தது!

விடிந்தால் கிறிஸ்துமஸ்!

குஞ்சும் குளுவான்களுமாக வீடே நிறைந்து 'அப்பா அது வாங்கி வருவார், இது வாங்கி வருவார்' என்று அவரது வரவை எதிர்நோக்கிக் காத்திருக்கிறதே, அதற்காகக் கூட அவர் கவலைப்படவில்லை.

அவரது அருமை மகள் தெரோசா காலனோடு போராடிக் கொண்டு எலும்பும் தோலுமாய்ப் படுக்கையில் கிடக்கிறாளே, அவளை அவரால் காப்பாற்ற முடிந்ததா?

நேர்மை, நேர்மை என்று உத்தியோகத்தின் ஊதியத்தைத் தவிர வேறு எதையும் கண்ணால் கூடக் காணாது கடமை, கண்ணியம் என்று இத்தனை நாட்கள் வாழ்ந்தாரே, அதில் மரியானந்தம் கண்ட பலன்தான் என்ன?

மரியானந்தம் தலையைப் பிடித்துக் கொண்டார். குலம் தழைக்கக் கொழு கம்பைப் பற்றிக் கொண்டவள் அவரது மகள் தெரோசா. முதல் பூ பூத்த பொழுதே கொடி பலவீன மடைந்து வாடியது. இரண்டாவது பூத்த பூவும் போய், கொடியும் வாடி வதங்கிக் கருகிவிடும் என்ற நிலை வந்ததும்,—

தெரோசாவை மாப்பிள்ளையிடமிருந்து அழைத்துக் கொண்டு வந்து விட்டார் மரியானந்தம்.

தேய்ந்துவிட்ட தெரோசாவை எப்பாடுபட்டாவது திருமண விழாவின் பொழுது அவள் இருந்தாளே குண்டு குண்டாய், அந்நிலைக்கு உடம்பைத் தேற்றி அவள் கணவனிடம் சேர்ப்பித்துவிட வேண்டும் என்று கச்சை கட்டிக் கொண்டார் மரியானந்தம்.

நாலணா, எட்டணா மருந்தில் குணமாகிற நோயானால் அவர் சம்பளம் போதும், தெரோசாவைக் குணமாக்க.

வைத்தியம் தனது கோரமான வாயை அகலத் திறந்தபொழுது தம் சக்திக்குமீறி அவர் அதற்கு ஆகாரம்போட்டும் அதன் கோரப் பசி அடங்கவில்லை.

டாக்டர் சொல்லி விட்டார், 'பணத் தையே பணம் என்று பாராமல் செலவழித்தால்தான் உம் மகள் பிழைப்பாள்' என்று.

பணத்தைப் பணம் என்று பாராமல் தண்ணீராகச் செலவழிக்கத் தயாராயிருந்தார் மரியானந்தம். ஆனால் பணம் இருக்கிற இடம்தானே அவருக்குத்தெரியவில்லை.



பிரசங்கம் நடக்கத் தொடங்கி நேரமாக ஆக, கூட்டம் வந்து குவிந்து கொண்டிருந்தது.

மரியானந்தம் ஜனங்களிடையே வளைய வளைய வந்து கொண்டிருந்தார். பணக்காரர்கள் தங்கள் மஸ்லின் ஜிப்பா பையில் கத்தை கத்தையாய் நோட்டுகள் தெரிய வந்தனர். வியாபாரிகள் ஒன்றுக்கு நாலாய் விலை கூறிப் பொருள்களை விற்றுக் கொள்ளை லாபமடித்துக் காரில் வந்திறங்கினர். வட்டிக்குப் பணம் கொடுத்தே பெருமாள் புரத்தில் வீடுகள் வரிசை வரிசையாகக் கட்டினவர்களும் வந்தனர். ஒருவருக்கொருவர் அறியாமல் மோசடி செய்தே பணம் சம்பாதித்துப் பகட்டாய் இந்த உலகில் வாழும் மனிதர்களைக் கண்டார் மரியானந்தம்.

நேர்மையான வழியில் வாழ்ந்தால் மனத் திருப்தி ஒன்றுதான் ஏற்படும். கூடவே வறுமையும் தீராத நோய்களும் ஏற்படும். வாழ்வு சிறக்க இன்றியமையாத பொருள் பணம். அதை நேர்மையான வாழ்வு தராதென்றால் அதை அடையும் வழி?......

கைத்தடியைச் சுழற்றிக் கொண்டே கூட்டத்தில் நுழைந்தார் மரியானந்தம். கண்ணுக்குக் கண்ணாய் அவர் வளர்த்த தெரோசா இன்று போதிய வைத்திய வசதியில்லாது கண் திறவாமல் கிடப்பதற்குக் காரணம் பணமில்லாததால்தான்!

டாக்டர் சொன்னபடி பணத்தைப் பணம் என்று பார்க்கக் கூடாது. அப்போதுதான் தெரோசா பிழைத்துக் கொள்வாள். தெரோசா பிழைக்க வேண்டுமானால், அவருடைய அருமை மகள் பிழைக்க வேண்டுமானால் அவருக்குப் பணம் வேண்டும்.

''திருடன்!...திருடன்!'' என்ற கூக்குரல் கூட்டத்திலிருந்து கேட்டது. உடனே ஒரு பரபரப்பு கூட்டம் முழுதும் அலை அலையாக விரிந்தது. திருடினவனைக் காணாது பணம் பறிகொடுத்த கிழவர் ஒருவர், ''ஐயோ! என் பணம் போச்சே! பரமண்டலத்திலிருக்கும் பரம பிதாவே, என் பொருள் போச்சே!'' என்று வாயிலும் வயிற்றிலும் அடித்துக் கொண்டார்.

'பணம், பணம்' என்ற சிந்தனையில் வந்து கொண்டிருந்த மரியானந்தத்தின் செவிகளில் 'திருடன், திருடன்' என்ற ஓலம் விழுந்ததும் அவரது ஐம்புலன்களும் சுறுசுறுப்படைந்தன. பழக்கப்பட்ட கண்கள் ரங்கராட்டினமாய்ச் சுழன்று கூட்டத்தைத் துருவித் துளைத்த பொழுது கூட்டத்தை விட்டுக் கோயில் மதில் சுவரின் பின்னேயுள்ள செடிகளினிடையே எவனோ ஒருவன் பதுங்கிப் பதுங்கிச் செல்வதைக் கண்டு பிடித்துவிட்டன!

மெள்ள மெள்ள அவனையறியாது பூனைபோலச் சென்றார் மரியானந்தம். போலீஸ்காரர் ஒருவர் தன்னைத் தொடர்வதைக் கண்டதும் திருடன் சுவரேறிக் குதித்து வயல்வரப்பில் ஓடினான். மரியானந்தமா பின்வாங்குபவர்?

ஒரே தாவலில் சுவரைத் தாண்டி நாலே எட்டில் வயல் வரப்பில் பாய்ந்து ஓடிக் கையும் களவுமாகப் பிடித்து விட்டார் திருடனை.

''என்னை மன்னிச்சுடுங்க ஐயா! பசிக் கொடுமையிலே திருடிப்பிட்டேன்.... நான் பிள்ளைகுட்டிக்காரன் ஐயா! ஐயா...ஐயா! இனி நான் திருட மாட்டேன் ஐயா!'' என்று திருடன் அவருடைய காலைப் பிடித்துக் கொண்டு கெஞ்சினான். மாலை மாலையாகக் கண்ணீர் விட்டான்.

மணிபர்ஸை அவனிடமிருந்து பிடுங்கித் திறந்து பார்த்தார் மரியானந்தம். அவருடைய கண்களை அவரால் நம்ப

# பயர்ஸ்டோன்

# Firestone

## உங்களுக்குக் கூடுதலான பாதுகாப்பை - நீண்ட காலத்திற்கு அளிப்பதற்கு

# இதுவே காரணம்




**பயர்ஸ்டோனின் இன்னமும் பிரத்தியேகமான பாதுகாப்பளிக்கும் டிரெட் டிசைன்** அதன் ஆயிரக்கணக்கான, வழுக்குவதைத் தடுக்கும், கோணங்கள் மூலம் பிரேக் பிடிப்பதற்கு மிக்க உறுதியளிக்கிறது.

**பிரத்தியேகமான முறையில் கலவை செய்யப்பட்ட பயர்ஸ்டோன் ரப்பர்,** நீடித்து உழைப்பதுடன், தேய்வு பெறாமல் உங்களுக்குப் பாதுகாப்பளிக்கிறது — நீடித்த காலத்திற்கு.

**மிக உயர்ந்த தரமான தயாரிப்பு -** எல்லா பயர்ஸ்டோன் டயர்களும், உலக மோட்டாரோட்டப் பந்தயக் காரர்கள் தங்களுடைய உயிர்ப் பாதுகாப்புக்கு எந்தத் தொழிலியல் திறமையை நம்பியிருக்கிறார்களோ, அதே தொழில் திறனின் தயாரிப்புகள்.

## பயர்ஸ்டோன்

பொருத்துங்கள்

**நியூ டிலக்ஸ் சாம்பியன் டயர்கள்**

**இன்று சிறந்தவை - நாளை மேலும் சிறந்தவை**

முடியவில்லை. கண்ணை வாயாகிப் பணத்தை எண்ணியது. இருநூறு ரூபாய்க்கும் மேலிருக்கும். கர்த்தர் அவருடைய கஷ்டத்தை அறிந்து உதவுகிறாரா?

''நட ஸ்டேஷனுக்கு!'' என்றார் மரியானந்தம் திருடனை.

அவருடைய காலைக் கட்டிக் கொண்டு விட மறுத்தான் திருடன். ''இனி ஏழேழு ஜென்மத்துக்கும் திருடமாட்டேனுங்க! என்னை விட்டுப்பிடுங்க, ஐயா! தெரியாத்தனமா களவாடிப்பிட்டேன்! நான் செயிலுக்குப் போயிட்டா என் பெண்டாட்டி பிள்ளை எல்லாம் நடுத் தெருவிலே தவிக்கும்,—ஐயா!'' என்று புலம்பினான் திருடன்.

''இனிமே திருட மாட்டாயே?''

''முருகன் மேலே ஆணைங்க! திருட மாட்டேன்!''

''திருடினே?''

''செயில்லே போடுங்க!''

''ஓடு! திரும்பிப் பார்க்காமல் ஓடு!'' என்று அவனது பிடரியில் ஓங்கி ஓர் அடி அடித்தார் மரியானந்தம்.

பொறியில் அகப்பட்ட எலிதப்பி ஓடுவது நடக்குமா? . தப்பிவிட்ட திருடனுக்கு நடப்பது கனவா நனவா என்று தெரியவில்லை. கண் மண் தெரியாமல் விழுந்தடித்துக் கொண்டு வேகமாக ஓடி மறைந்தான்!

மணிபர்சை எடுத்து மார்போடு அணைத்துக் கொண்டு மரியானந்தம் நிமிர்ந்தபொழுது அவரது பார்வையில் பட்டது வானத்தை அளவெடுத்துக் கொண்டிருந்த ஊசிக் கோபுரத்தின் மேலேயுள்ள சிலுவை!

'கர்த்தரே! நான் அறிந்து செய்யும் இந்தப் பாபத்துக்குப் பாவ மன்னிப்புக் கிடையாது! பாபிகளை இரட்சிக்க வந்த இயேசு கிறிஸ்துவே இந்தப் பாபியையும் இரட்சிப்பீரா?'

மார்பிலும் நெற்றியிலும் சிலுவைக் குறி இட்டுக் கொண்டார் மரியானந்தம். மணிபர்ஸைத் தமது பனியனுக்குள் போட்டுக் கொண்டு கூட்டத்தை நோக்கி நடந்தார்.

பணத்தைப் பறி கொடுத்தவருக்கு அறுபது, எழுபது வயதிருக்கும். 'ஐய்யோ முறையோ' என்று அலறிக் கொண்டிருந்தார். அவரைப் பார்க்கவே பரிதாபமாக இருந்தது. என்ன காரியத்துக்காக எவ்வளவு பணம், எங்கே கடன் வாங்கிக்கொண்டு வந்தாரோ அவர்? குமுறிக் குமுறி அழுது கொண்டிருந்தார்.

''அழாதீங்க, பெரியவரே! கர்த்தர் அவனைத் தண்டிப்பார்!'' என்றார் ஓர் அனுதாபி.

''என் பணம் போச்சே! என் பணம் போச்சே!'' என்று பிரலாபித்தார் கிழவர்.

''இங்கே போலீஸ்காரர் இருந்தாரே, அவர் எங்கே காணோம்?'' என்று தேடினார் ஜிப்பாக்காரர் ஒருவர்.

மரியானந்தம் கோவில் மதில் சுவரில் பதுங்கிக் கொண்டார். தம்மையே திருடனாக எண்ணி அனைவரும் தேடுவது போலவும் தம்மை இன்னும் சிறிது நேரத்தில் கையும் மெய்யுமாக அவர்கள் பிடித்துக் கொண்டு விடுவார்கள் போலவும் பிரமை உண்டாயிற்று மரியானந்தத்துக்கு. அடிமேல்



அடி எடுத்து வைத்து மடமடவென்று கோயிலினுள்ளே நுழைந்து மறைந்து விட்டார்! காக்கிச் சட்டைகள் வியர்வையில் தெப்பமாக நனைந்தன! இதயம் படபடவென்று அடித்துக் கொண்டது!

கூட்டம் கொஞ்சம் கொஞ்சமாகக் கரையத் தொடங்கியதும் மரியானந்தம் வெளியில் வந்து பார்த்தார். பணத்தைப் பறி கொடுத்த கிழவரைக் காணோம்!

'டியூட்'டியை முடித்துக் கொண்டு வீட்டை நோக்கி நடந்தார் மரியானந்தம். இடியாய்க் கனத்து, அவரை தொய்ந்து நடக்கும்படி செய்து விட்டது பனியனுள் அவர் போட்டிருந்த மணிபர்ஸ்.

டாக்டர் வீடும், மருந்துக் கடைகளும் வாய்க்காலை அடுத்த வீதியில் தான் இருந்தன. அவைகளைக் கடந்து சென்றார் மரியானந்தம்.

வீட்டுக்குப் போய்த் தோட்டத்தை அடைந்து தோட்டத்தில் புன்னை மரத்தடியில் உட்கார்ந்து ஒரு குரல் அழுதால்தான் சமாதானம் உண்டாகும் போலிருந்தது அவருக்கு.

கிழவரின் பரிதாபமான தோற்றமும் பணத்தைப் பறி கொடுத்துவிட்டு அவர் வாயிலும் வயிற்றிலும் அடித்துக் கொண்ட காட்சியும் மரியானந்தத்தின் மனச்சாட்சியை வாட்டி வதைத்தன. இத்தனை நாட்கள் அவர் கட்டிக் காப்பாற்றி வந்த நேர்மையும், கண்ணியமும் ஒரு நொடியில் அவரை விட்டு அகன்று விட்டன. திருடனிலும் திருடனாகிவிட்ட அவரைப் பிடிக்கும் போலீஸ் ஏது?

வீட்டினுள்ளே பேச்சுக் குரல் கேட்கவே வாசலில் நின்று கவனித்தார் மரியானந்தம்.

சற்று முன்பு கூட்டத்தில் மணிபர்ஸைப் பறி கொடுத்தாரே, ஒரு கிழவர், அவர்தான் தெரோசாவின் கட்டிலின் அருகே ஒரு ஸ்டூல் மீது உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தார்.

''உனக்கு உதவி செய்யத்தான் அம்மா இருநூறு ரூபாய் கடன் வாங்கிக்கிட்டு வந்தேன். பெத்தால் தான் மகளா? நீ எனக்குச் செய்த உதவிக்கு என் தோலைச் செருப்பாகத் தைச்சுப் போட்டாலும் தகும்மா? நீ நோய் நொடியாப் படுத்துக் கெடக்கிறதை உன் புருஷன் மூலமாத் தெரிஞ்சுக்கிட்டு உனக்கு உதவத்தானம்மா ஓடி வந்தேன். பணத்தை எந்தப் படுபாவியோ திருடிக்கிட்டுப் போயிட்டான்! நீ செய்த உதவிக்கு என்னாலே கைம்மாறு செய்ய முடியாமல் போயிடிச்சே!'' என்று வருந்தினார் அவர்.

''நீங்க கைம்மாறு செய்யும்படியாக நான் ஒண்ணும் பிரமாதமா செய்து விடவில்லையே!'' என்றாள் தெரோசா.

''அப்படிச் சொல்லாதே, அம்மா! சமயமும் சந்தர்ப்பமும் என்னைக் கள்வன் எனக் குற்றம் சாட்டிச் சிறைக்கனுப்பினப்போ உண்மையிலே எனக்காகக் கண்ணீர் விட்டதும் நீயும் உன் புருஷனும்தானம்மா! பிள்ளைகளும் பெண்களும் சீரும் சிறப்புமாக இருந்தும் நான் ஜெயில்லேயிருந்து வந்ததும் நான் அந்த ஊரிலேயே இருக்கிறது அவமானமென்று, அவங்க என்னை அடி அடியாய் அடிச்சு ஊரைவிட்டு விரட்டினப்போ, நான் மயக்கமாய் விழுந்தேனே, அப்போ என்னைக் கவனிச்சுச் சோறும் தண்ணியும் கொடுத்து, எனக்கு உயிர் கொடுத்தவளாயிற்றே, அம்மா நீ. பெற்ற குழந்தைகளை விட ஒரு நொடியிலே பெரியவளாக நீ என் மனத்திலே உயர்ந்து என்னை



உன் அப்பனைப் போல் நினைச்சு, மில்லிலே உன் புருஷன் மூலமா ஒரு வேலையும் வாங்கிக் கொடுத்தியே! வேலைக்கு, 'டிபாஸிட்' நானூறு ரூபாய் கட்டணும்னு மில்லுக்காரங்க சொன்னதும் கொஞ்சங்கூட யோசிக்காமல் உன் தங்கச் சங்கிலியைக் கழற்றி என் கையிலே கொடுத்தியே, அதை எப்படியம்மா நான் மறக்கலாம்! குளத்திலே முழுகறப்போ சங்கிலி தொலைஞ்சுச்சின்னு உன் புருஷன்கிட்டே நீ பொய் சொன்னதுக்கு அவர் உன்னை அடிச்ச அடியும் உதைச்ச உதையும் எப்படியம்மா என் நெஞ்சை விட்டு அகலும்?'' என்றார் அந்தப் பெரியவர் கண்ணீர் விட்டபடி.

தமது மகளின் தியாகக் கதையைக் கேட்டு மரியானந்தம் கண்ணீர் விட்டார். எத்தனை பெருமைப்படத்தக்க மகளை அவர் அடைந்திருக்கிறார். ஆனால் அவரோ? நேர்மை வழியிலிருந்து நழுவி விட்டாரே!

''உனக்காகக் கொண்டு வந்த பணம் உன்னைக் காப்பாற்ற முடியாமல்



''நான் நேற்றிரவு படுத்ததே தெரியாமல் ஒரு மரக்கட்டை மாதிரி தூங்கினேன்!''

''அதோடு இல்லை! மரக்கட்டையை ரம்பம் போட்டு அறுக்கற மாதிரி சப்தம் போட்டுக் கொண்டு தூங்கினீர்!''

பறிபோய் விட்டதம்மா, பறிபோய் விட்டது!'' என்று கதறினார் அந்தப் பெரியவர்.

''இல்லை பெரியவரே! அதைத் திருடனிடமிருந்து மீட்டு வந்து விட்டேன்!... இதோ பார்ஸ்!'' என்று உள்ளே ஓடிப் பர்ஸைப் பெரியவரிடம் கொடுத்தார் மரியானந்தம்.

''எங்கப்பா இவர் தான்! வேலையிலே ரொம்பக் கறார்! ரொம்பவும் நேர்மையாளர்! பிறர் பொருளுக்கு ஆசைப்படாதவர்! அதனால் கஷ்டப்படுகிறவர்!'' என்று கூறிச் சிரித்தாள் தெரோசா.

''உன்னைப் பெற்ற அப்பா தங்கமா இல்லாமல் எப்படியம்மா இருக்க முடியும்!'' என்றார் பெரியவர்.

தமது நேர்மையினால் வந்த கஷ்டத்தைப் பலகாலம் தாங்கிக் கொண்ட மரியானந்தம் நேர்மை தவறியதால் ஏற்பட்ட கஷ்டத்தைச் சில நிமிஷங்களுக்குக்கூடப் பொறுத்துக் கொள்ள முடியாமல் தாம் திணறியதை எண்ணிப் பின்புறம் திரும்பிக் கண்ணீர் ததும்பும் தம்முடைய கண்களை மறைத்துக் கொண்டார்.

## மதுவாணி நிதி

செங்காலிபுரம் பிரம்மஸ்ரீ அனந்தராம தீக்ஷிதர் அவர்கள் கல்கத்தா மாநகரில் மகாபாரதப் பிரவசனம் செய்து வருகிறார்களல்லவா? தீக்ஷிதரின் இந்த வங்க விஜயத்தை ஒட்டி ஒர் அருமையான காரியத்தைச் செய்திருக்கிறது கல்கத்தாவிலுள்ள தேவவாணி பரிஷத். சென்ற நவம்பர் 5-ந் தேதியன்று பரிஷத்தின் ஆதரவில் நடைபெற்ற ஒரு விழாவில் பண்டித பட்டாபிராம சாஸ்திரி அவர்கள் ஸ்ரீ தீக்ஷிதர் அவர்களுக்கு மதுவாணி நிதி என்ற பட்டத்தை வழங்கினார். இவ் வைபவத்துக்குத் தலைமை தாங்கிய டாக்டர் வி. பி. ராமசுவாமி அய்யரவர்கள் பாரத தர்மத்தைப் பரப்புவதே தமது ஸ்வதர்மமாகக் கருதித் தீக்ஷிதர் அவர்கள் செய்து வரும் அரும்பணியைப் பாராட்டிப் பேசினார். ஸ்ரீ டி. எஸ். சீதாபதி அவர்கள் கல்கத்தாவாசிகளின் பிரதிநிதியாகத் தீக்ஷிதருக்கு நன்றி தெரிவித்தார். இதே கூட்டத்தில் பண்டித மதுசூதன் தர்காச்சாரியா அவர்களுக்கு ஜகத்குரு ஸ்ரீ சிருங்கேரி சங்கராச்சாரிய சுவாமிகள் வழங்கியுள்ள தர்க்காலங்கார என்ற பட்டம் அளிக்கப்பட்டது. வங்கம், கர்நாடகம், தமிழகம் இம்மூன்று பிரதேசங்களும் இணைந்த விழா இது. தெரியாமலா கற்றோருக்குச் சென்ற இடமெல்லாம் சிறப்பு என்று சொன்னார்கள்?



# உங்கள் சிந்தனைக்கு...

**நியூட்டன் புவியீர்ப்புச் சக்தியைப் பற்றி அறிந்துகொண்டது எப்போது?**

நியூட்டனே சொல்கிறார் கேளுங்கள்: ''ஒரு நாள் ஏதோ சிந்தனையுடன் மரத்தடியில் உட்கார்ந்திருந்தேன். ஓர் ஆப்பிள் பழம் விழுந்தது. ஏன் விழுந்தது? பழம் பழுத்து விட்டது! இல்லை. பின் ஏன் விழுந்தது? ஏதோ பிடித்துப் பழத்தை இழுக்கிறது. ஆம்! இல்லாவிட்டால் உயரே தூக்கி வெறியும் கல் கீழே விழுமா? பொருள்கள் எல்லாம் பூமியை நோக்கி வருகின்றன. பூமி இழுக்கிறது. அதுதான் புவியீர்ப்புச் சக்தியாகும்!''

**பெட்ரோமாக்ஸ் 'மாண்டில்' பிறந்த கதை என்ன?**

வெல்ஸ் பாஹ் என்பவர் ஒளிச் சுடரில் தோரியம் சீரியம் கலந்த கலவையைக் காட்டினார். அது ஒளி விட்டுப் பிரகாசித்தது. இதன் பயனாகத்தான் பெட்ரோமாக்ஸுக்கு மாண்டில் (பட்டு வலை) செய்யும் தொழிலே பிறந்தது. ஜெர்மனியிலே இந்தத் தொழில் பெரிய அளவில் நடைபெற்றது. பட்டு வலையை ஒரு சதவிகிதம் சீரியம் ஆக்சைடு, 99 சதவிகிதம் தோரியம். ஆக்சைடு சேர்ந்த கலவையில் தோய்த்து எரித்தால் மாண்டில் பிரகாசத்தைத் தருகிறது. மாண்டிலில் வலை எரிந்து போனதும் தோரிய சீரியக் கலவை கூடுபோல் நிற்கிறது.

**தற்செயலாகத் தோன்றிய செயற்கைச் சாயம் பற்றித் தெரியுமா?**

'குவினைன்' என்ற மருந்துப் பொருள் செய்வதற்காகக் கறுப்புத் தாரை எடுத்துக் கொண்டு சில சோதனைகள் செய்தார். அதைச் சாராயத்தில் கரைத்தால் ஒரே நீல நிறம்! இப்படித்தான் பெர்கின் என்ற பதினெட்டு வயது இளைஞர் முதன் முதல் செயற்கைச் சாயத்தைக் கண்டுபிடித்தார். இதனால் இந்தியாவிலிருந்து ஏற்றுமதியாகி வந்த அவுரிச் சாயத் தொழில் படுத்துவிட்டது!

**இடிமின்னலால் மின்சாரம் உண்டாவதைக் கண்டுபிடித்தது யார்?**

1750-ல் பெஞ்சமின் பிராங்க்ளின் இவர் பல சோதனைகளை நடத்தினார். அவர் இடியும் மின்னலும் தோன்றும்போது வானில் ஒரு பட்டத்தைப் பறக்க விட்டார். மின்னலில் தோன்றிய மின்சாரம், பட்டக் கயிறு வழியே வந்தது. அதன் அருகே ஓர் இரும்புக் கம்பியைக்கொண்டு போனதும் பொறி ஏற்பட்டது. இடி மின்னலின்போது வானில் மின்சாரம் உண்டாகிறது என்று கண்டார். நல்ல வேளையாக அவர் கையில் பிடித்திருந்த கயிறு மின்சாரம் பாயாத உலர்ந்த பட்டாலானது. மழையால் ஈரமாகாமல் இருக்க ஒரு கொட்டகையின் கீழ் நின்று கொண்டிருந்தார்.

**பெனிசிலின் என்பது எவ்வாறு கண்டு பிடிக்கப்பட்டது?**

அலெக்சாந்தர் பிளெமிங் பாக்டீரியா இருந்த ஒரு கண்ணாடித் தட்டை அப்படியே விட்டு விட்டுப் போயிருந்தார். மீண்டும் அதைப் பார்த்தபோது அங்கே காளான் முளைத்திருந்தது. 'அடடா! வீணாகி விட்டது' என்று கொட்டப் போனார். ஒரு நினைவு. அதைத்தான் என்னவென்று பார்ப்போமே என்று. பார்த்தார். இந்தக் காளானுக்கருகில் இருந்த பாக்டீரியாக்கள் இறந்து கிடந்தன. அந்தக் காளான்தான் பெனிசிலினை உண்டு பண்ணியது.

**கொதிக்கும் வெந்நீர்க் கெட்டில் எந்த ஆராய்ச்சிக்கு அடிகோலியது?**

கொதிக்கும் வெந்நீர்க் கெட்டிலை மூடியிருக்கும் தட்டு நீராவியினால் தூக்கி வெறியப் படுவதைக் கண்டான் சிறு பையனான ஜேம்ஸ்வாட். அவனே பின்னால் நீராவியைக் கொண்டு ரயிலை ஓட்டலாம் என்று கண்டுபிடித்தான்.

**கறுப்புக் கண்ணாடியைப் பற்றி...**

குளிர்ச்சி தரும் மூக்குக் கண்ணாடியைச் சில சமயம் குருக்ஸ் கண்ணாடி என்று சொல்லக் கேட்டிருப்பீர்கள். குருக்ஸ் என்பவர் செய்த கண்ணாடி நம் கண்ணுக்குப் புலனாகாத புற ஊதாக் கதிர்களை இழுத்துக்கொண்டு தெரியும் ஒளியை மட்டுமே கண்ணுக்கு அனுப்புகிறது. கெடுதல் விளைக்கும் புற ஊதாக் கதிர்களை இது எடுத்துக் கொள்வதால் வெயில் காலங்களில் கண்ணுக்குக் குளிர்ச்சி தருகிறது.

**'பிளாஸ்டர் ஆப் பாரீஸ்' என்பதென்ன?**

ஜிப்சம் எனப்படும் கால்சியம் சல்பேட் தமிழில் கிலாசத்து எனப்படும். இதைச் சுமார் 130 டிகிரிக்குச் சூடேற்றினால் சிறிதளவு நீர் போய் 'பிளாஸ்டர் ஆப் பாரிஸ்' ஆகிறது. இதைத் தண்ணீருடன் சேர்த்துக் கால்கை ஒடிந்தபோது கட்டுப்போடப் பயன்படுத்துகிறார்கள்.

**நவச்சாரத்தின் உபயோகம் என்ன?**

அம்மோனியம் குளோரைடு எனப்படும் நவச்சாரம் பாட்டரி விளக்குக்கு வேண்டிய 'செல்' தயாரிப்பதிலும், ஈயம் பூசுவதிலும் உபயோகப் படுகிறது. ஈயம் பூசும்போது அம்மோனியா வெளியேறிய பிறகு மிகுந்திருக்கும் ஹைட்ரஜன் குளோரைடு உலோக ஆக்சைடுகளைக் கரைத்து ஆவியாகிறது. கறைகளில்லாமல் ஈயம் பளபளவென ஒளிவிட அம்மோனியம் குளோரைடுதான் காரணம்.

**படிகாரத்தைப் பற்றிக் கொஞ்சம் தெரிந்துகொள்ளலாமா?**

ஆலம் அல்லது படிகாரம் நிறமற்ற படிக வடிவம் கொண்டது. தண்ணீர் கலங்கலாக இருக்குமானால் அதைத் தெளிவிக்கப் படிகாரம் போடப் படுகிறது. படிகாரத்திலிருந்து அலுமினியம் ஹைட்ராக்சைடு தயாரித்து அதை அலுமினாவாக்கி அதிலிருந்து செயற்கை வைரங்கள் செய்கிறார்கள்! தோல் பதனிடுவதிலும், சாயத்தொழிலும் கூட இது பயன்படுகிறது.

தொகுத்தவர்
உதயமூர்த்தி

# புலியுடன் போர்

பிலோ இருதய நாத்



குறும்பர்களைப்பற்றி நான் ஆராய்ச்சி நடத்த அவர்களிடையே தங்கியிருந்த போது ஒரு குறும்பன் ரசமான சம்பவமொன்றைச் சொன்னான். அது புலி வேட்டையைப் பற்றியது.

ஒரு சமயம் அவன் உதவியுடன் ஓர் ஆங்கிலேய துரை புலி வேட்டைக்குக் கிளம்பினாராம். அந்தப் பக்கத்து கிராமத்தில் அடிக்கடி புகுந்து ஆடு மாடுகளுக்குத் தொல்லை கொடுத்து வந்தது ஒரு புலி. அந்தக் கிராமம் அந்தத் துரையின் எஸ்டேட்டுக்குச் சொந்தமானது. ஆகவே புலியைக் கொல்ல வேண்டியது அவரது கடமையாகி விட்டது. தவிர புலி வேட்டையில் எப்போதுமே ஆங்கிலேயர்களுக்கு ஆர்வம் உண்டல்லவா?

தடம் பார்த்துப் பின்தொடர்ந்தவருக்குப் புலி தட்டுப் பட்டது. குறி பார்த்துச் சுட்டார். அடிபட்ட புலி சாகவில்லை. எங்கோ தப்பிச் சென்று பதுங்கி விட்டது. வெகு நேரம் தேடிக் களைத்தவர் வீடு திரும்பினார். மனைவியிடம் நடந்ததைக் கூறியபோது அவள் கலங்கிப் போனாள். ''புலியைக் காயப் படுத்தித் தப்பவிடுவது அபாயமல்லவா? காயம் பட்ட புலி வஞ்சம் தீர்த்துக் கொள்ளக் காத்திருக்குமே?'' என்றாள். தவிரப் புலியைக் கொல்லாமல் தப்ப விட்டதை அவர்கள் சமூகத்தினர் கேள்விப் பட்டால் அவருடைய வீரத்தையும் பற்றிக் குறைவாகப் பேசுவார்களே என்றும் வருத்தப் பட்டாள். ஆகவே துரை மறுநாள் எப்படியும் புலியைத் தேடிக் கண்டுபிடித்துக் கொன்று விடுவதென்ற தீர்மானத்துடன் குறும்பனுடன் ஜீப் காரில் கிளம்பினார்.

முதல் நாள் குண்டடி பட்டுக் குருதி சிந்தியுள்ள இடத்துக்கு வந்ததும் காரை நிறுத்தி விட்டுக் கீழே இறங்கி ரத்தக் கறை அடையாளத்தைப் பார்த்துக் கொண்டு குறும்பனும் துரையும் முன்னேறினார்கள். டிரைவர் ஒரு பாறைமீது ஏறி உட்கார்ந்து கொண்டான். கொஞ்ச நேரம்தான் ஆகியிருக்கும். ஏதோ சத்தம் கேட்டு டிரைவர் திரும்பிப் பார்த்தான். மறு விநாடி அவன் விழிகள் பிதுங்க 'ஐயோ' என்றலறியபடி பாறையிலிருந்து கீழே குதித்தான். அவனைத் தொடர்ந்து புலியும் குதித்தது. டிரைவரிடம் துரையின் மற்றொரு துப்பாக்கியிருந்தது. தன் மீது பாய்ந்த புலியின் பிளந்த வாயில் துப்பாக்கிக் கட்டையைக் கொடுத்தான் டிரைவர். ஆனால் குழந்தையின் கையிலுள்ள பொருளைப் பிடுங்குவது போலத் துப்பாக்கியைக் கௌவிக் கடித்துத் தூர வீசியது புலி. அது டிரைவரின் மார்பில் கால்களை ஊன்றி நின்று கொண்டு அவன் குரல் வளையை நோக்கித் தனது பயங்கரமான வாயைக் கொண்டு வந்தது. பீதியில் பாதி உயிர் போய் விட்டது டிரைவருக்கு. அதன் வாய்க்குள் தனது கையைக் கொடுத்து அதன் செய்கையைத் தடுக்க முயன்றான்.

அந்தச் சத்தத்தைக் கேட்டுக் குறும்பனும் துரையும் ஓடோடி வந்தார்கள். துரை புலியின்மீது பாய்ந்து உட்கார்ந்து அதன் வாயைப் பிளந்து டிரைவரை அது கடிக்காமல் செய்தார். உடனே புலி டிரைவரை விட்டு விட்டுத் துரையைத் தாக்க ஆரம்பித்தது. துரை பாதையின் பக்கமாகத் திரும்பி நின்றபடி அதைச் சமாளித்தார். புலி அவரது தோளைக் கௌவிக் கடிக்கலாயிற்று. டிரைவர் கீழே நினைவிழந்து கிடந்தான். துரை உடனே குறும்பனிடம் ''புலியைத் தலையில் சுடு. தாமதம் செய்யாதே'' என்று கத்தினார்.

ஆனால் பாவம், குறும்பன் தவித்தான். புலியின் தலையும் துரையின் தலையும் ஒரே கோணத்தில் அருகருகே இருந்தன. புலியைச் சுட்டால் துரையின் தலையிலும் குண்டு பாயும். இந்தச் சங்கடத்தைக் குறும்பன் அறிவித்தபோது புலி புதிய குரல் அருகே கேட்பதைக் கண்டு திரும்பிக் குறும்பனைப் பார்த்தது. அந்த ஒரு விநாடியில் துரையின் தலை அருகிலிருந்து புலியின் தலை சற்றே விலகியது. உடனே குறும்பன் அதைப் பயன்படுத்திக் கொண்டு இமைக்கும் நேரத்தில் அதன் தலைக்குக் குறி வைத்துச் சுட்டான். குறும்பர்களின் குறி என்றுமே தவறுவதில்லை. புலி செத்து விழுந்தது.

துரை செத்த புலியுடன் டிரைவரைத் தூக்கிக் காரில் போட்டுக் கொண்டு ஆஸ்பத்திரிக்குச் சென்றார். உதகை வைத்திய சாலையில் டிரைவரின் கை துண்டித்து எடுக்கப்பட்டது. குறும்பனுக்கும் டிரைவருக்கும் துரை ஏராளமான பரிசுகளும் பணமும் வழங்கினார். இருவருக்கும் தமது தொழிற்சாலையில் ஒரு வேலை கொடுத்து வைத்துக் கொண்டாராம்.

# மனக்கொதிப்பும் கவலையும் ஜீரணத்தை பாதிக்கின்றன



நம் வயிறும், மூளையும் நரம்புகளின் மூலம் ஒன்றோடொன்று இணைக்கப்பட்டிருக்கின்றன. ஒவ்வொரு முறையும் நாம் மனக் கொதிப்பினாலோ அல்லது கவலையினாலோ பாதிக்கப்படும்பொழுது இந்த நரம்புகள் ஜீரணம் செய்வதை தற்காலிகமாக தடுப்பதுடன் ஆட்ரினலின் என்ற சக்திவாய்ந்த அமிலத்தை வெளிப்படுத்தி ரத்தத்துடன் கலக்கிறது. ஓடியாடி வேலை செய்வோருக்கு இந்த அமிலம் மனக்கொதிப்பை எதிர்த்துப் போராட உதவுகிறது. ஆனால் மற்றவர்கள் விஷயத்தில் இது தீமையைப் பயக்குவதுடன் அவர்கள் ஜீரண சக்தியையும் குறைக்கிறது அதனால்தான் வியாபாரத் துறையிலுள்ளவர்களில் 10 பேர்களில் 6 பேர் அஜீரணத்திற்குள்ளாகி, அதன் விளைவாக சாப்பிட்ட பின் வயிற்று வலியினால் கஷ்டப்படுகிறார்கள்.






ஹ்யூலட்ஸ் மிக்சர் வயிற்று வலியை விரைவாகவும் அடியோடும் நிவர்த்திக்கிறது. எரிச்சலை உண்டாக்கும் அமிலத்திலிருந்து இரைப்பையின் சுவற்றைக் காப்பாற்றுவதோடு உணவை நன்றாக கரைத்து ஜீரண சக்தி ஏற்படுவதற்கும் உதவுகிறது. 80 வருஷங்களுக்கு மேலாக உலகத்திலுள்ள எல்லா டாக்டர்களும் சிபாரிசு செய்யும் மருந்து இதுவே. குழந்தைகளின் வயிற்று உபாதைகளையும் தீர்க்க வல்லது ஹ்யூலட்ஸ் மிக்சர்.

வயிற்றுக் கடுப்புக்கு அபினி கலந்த ஹ்யூலட்ஸ் மிக்சரை உபயோகியுங்கள்.

## "ஹ்யூலட்ஸ் மிக்சரை

உபயோகிக்க ஆரம்பித்ததிலிருந்து
நான் நன்றாக சாப்பிட முடிகிறது"



ஸி. ஜே. ஹ்யூலட் & ஸன் (இந்தியா) பிரைவேட் லிமிடெட்
86/A, நைனியப்ப நாயக்கன் தெரு, மதராஸ்-3

JWT-CJH-3162




## தமிழழகன் கவிதைகள்

கவிஞர் தமிழழகனின் கவிதைகள் தமிழ் நாட்டு வாசகர்களுக்கு மிகவும் பழக்கமானவை. இப்போது வாழும் புதிய தலைமுறைத் தமிழ்க் கவிகளில் அவருக்கு நல்ல இடமுண்டு. தெளிவு - வாக்கு நயம் - நல்ல சந்தம் இவற்றைத் தமிழழகன் கவிதைகள் யாவற்றிலும் காண்கிறோம்.

அவருடைய கவிதைகள் தொகுதியாக வெளிவந்து பரவ வேண்டுமென்று ஆசைப்பட்டவர்கள் பலர். அந்த ஆசையை இப்போது பழநியப்பா பிரதர்ஸ் நிறைவேற்றியுள்ளார்கள்.

தமிழழகனின் 55 தலைப்புக்களுக்கு அடங்கிய சிறந்த கவிதைகள் இதில் தொகுக்கப்பெற்று நூலாக வந்துள்ளன.

அழகு, கற்பனை, இயற்கை எழில், மழலைச் செல்வம் எல்லாத் துறைகள் பற்றியும் இவர் கவிதைகள் பொலிவுடன் ஒளிர்கின்றன.

வெளியீடு: பழநியப்பா பிரதர்ஸ், சென்னை-5, விலை: ரூ. 1-75.

## மிஸ்டர் கப்பு

உயர்ந்த லட்சியங்களைப் பற்றிக் கொண்டு தமது கதாபாத்திரங்களை இல்லாத தொல்லைகளுக்கெல்லாம் ஆளாக்கி, தாமும் அவஸ்தைப்பட்டு வாசகர்களையும் சிரமப்படுத்தும் வழக்கம் திரு தமிலன் அவர்களிடம் என்றைக்குமே இருந்ததில்லை. அவர் எழுதுவதெல்லாம் அன்றாட வாழ்க்கையில் நாம் காணும் சாதாரண மக்களின் சாதாரணமான வாழ்க்கையைப் பற்றித்தான். அதனால் கதையே சாதாரணம் தான் என்று முடிவு கட்டி 'சாதாரணக் கதை' என்று பட்டமளித்து விடுவதில் பொருளில்லை. உண்மையில் சாதாரண மக்களின் வாழ்க்கையைப் பற்றிச் சுவைபட வாசகர்களுக்கு அலுப்புத் தட்டாத வண்ணம் எழுதுவது மிகக் கடினமான காரியம். இதில் தமிலன் அவர்கள் கைதேர்ந்த பழம் புள்ளி.

தமிலன் அவர்கள் எழுதுகிறார் என்றாலே நாலு பக்கத்துக்கு ஒரு 'களுக்'குச் சிரிப்பு வரும் என்று எதிர்பார்க்கலாம். மிஸ்டர் கப்புவிலோ பக்கத்துக்கு நாலு 'களுக்'குச் சிரிப்பும் நாலு பக்கத்துக்கு ஒரு 'குபீர்'ச்சிரிப்பும் வருகின்றன.

இன்றையத் தமிலன் எழுதும் நவீனங்கள் 'வயது வந்தவர்களுக்கு மட்டுமே' என்று கருதுபவர்களும் உண்டு. குழந்தைகளுக்காக எழுதப்பட்டவை யல்லவே என்று திருப்பிக் கேட்கலாம். அதற்காக விரசத்தில் இறங்க வேண்டுமென்பது மில்லையல்லவா? மிஸ்டர் கப்புவை எழுதியது இன்றையத் தமிலன் அல்ல. பல வருஷங்களுக்கு முன்பே அவரால் எழுதப்பட்டது. அதனால்தானோ என்னவோ சிற்சில இடங்களில் விரசத்தில் கொண்டு போய் விட்டு விடுமோ என்று நினைக்கையில் ஆசிரியர் சமத்காரமாக இப்பால் தப்பித்துக் கொண்டு ஓடி வந்து விடுகிறார்.

சுவாரஸ்யமான கதை ஓட்டம்; விறுவிறுப்பான நடை; கொப்பளிக்கும் ஹாஸ்யம்- வேறென்ன வேண்டும்?

பிரசுரம்: இன்பநிலையம் மயிலாப்பூர், சென்னை-4; விலை ரூ. 3.

## பறவையுடன் போட்டி

பட்டணத்தில் வசிப்பவர்களுக்கும் கூட வானத்தில் விமானம் பறக்கும் ஒலி கேட்டால் வாசலுக்கு ஓடி வந்து அண்ணாந்து பார்க்க வேண்டும் என்ற ஆர்வத்தைக் கட்டுப்படுத்த முடிவதில்லை. சிறுவர்களோ இது வைக்கௌண்ட், இது ஸ்கைமாஸ்டர், இது டகோடா, இது ஸூபர் கான்ஸ்டலேஷன், இது போயிங், இது காமெட் என்றெல்லாம் பல்வேறு விமானங்களை அடையாளம் கண்டு கொண்டு பாகுபாடு செய்யும் திறனைப் பெற்றிருக்கிறார்கள். இந்த அளவுக்கு விமானங்கள் நம் கவனத்தைக் கவர்ந்துள்ள போதிலும் அதில் ஏறிப் பறந்து செல்லும் வாய்ப்பு அனைவருக்கும் எளிதில் கிடைத்து விடுவதில்லை தான். ஆனால் விமானங்கள் எப்படி இயங்குகின்றன என்பதை தெரிந்து வைத்துக்கொள்ளலாம் அல்லவா?

மனிதன் பறவைகளைப் பார்த்துப் பறக்க வேண்டும் என்று ஆசை கொண்டான். பத்தாம் நூற்றாண்டு வரை பறவைகளைப்போல் இறக்கை கட்டிக் கொண்டு பறக்க முயன்று கை கால்களை முறித்துக் கொண்ட 'பைத்தியங்கள்' உண்மையில் பைத்தியங்களே யல்ல. பிற்காலத்தில் விமானங்கள் தோன்றி வியப்புக்குரிய வேகத்தில் வளர்ச்சியுற அன்றைக்கு வித்திட்டவர்கள் அவர்கள். விஞ்ஞானமேதைகளின் சித்தனையை அந்தத் திசையில் திருப்பி விட்டதியாகிகளாகவே அவர்களைக்கருதலாம்.

லியனார்டோவின் ஆரம்பகால ஆராய்ச்சிகள் முதல் இன்றைய ராக்கெட்டுகள் வரை, வானில் பறப்பதில் மனிதன் அடைந்துள்ள முன்னேற்றங்களைச் சுவைபட விரிவாக எடுத்துச் சொல்கிறது இந் நூல். போற்றப்பட வேண்டிய மிக நல்ல முயற்சி. இல்லாமலா தமிழ் வளர்ச்சிக் கழகத்தின் பரிசு இதற்குக் கிடைத்திருக்கிறது?

ஆசிரியருக்கு ஹாஸ்ய நடை கைவந்திருக்கிறது. அதனை இன்னும் சற்றுத் தாராளமாகப் பயன்படுத்தியிருக்கலாம்.

ஆசிரியர்: நா. கி. நாகராஜன் எம்.ஏ., பிரசுரம்: வள்ளுவர் பண்ணை, சென்னை-1 விலை ரூ. 5.

## ஒத்தெல்லோ

நாடக இலக்கிய வரலாற்றிலே சாகாவரம் பெற்றுள்ள வில்லியம் ஷேக்ஸ்பியர் எழுதிய சிறந்த நாடகங்களுள் 'ஒத்தெல்லோ' அழியாப் புகழ் பெற்றதாகும். இயாகோ என்பவன் இந்த நாடகத்தின் கதாபோக்கிரி. சாதாரணமாக நாம் காணும் நாடகங்களிலே தன் நடை, உடை, பாவனை, பேச்சு இவற்றைக் கொண்டே இவன் கதாநாயகன், இவன் கதாபோக்கிரி என்று தீர்மானித்து விடக்கூடும். ஆனால் இயாகோவென்னும் பாத்திரம் கதை போகும் போக்கைக் கொண்டு கதாபோக்கிரியாகத் தோற்றமளிக்கும் வகையில் சித்திரிக்கப் பட்டுள்ளது. எல்லோருக்கும் நல்லவனாக நடிக்கும் இயாகோ பாத்திரமே நாடக இலக்கிய உலகில் சிறந்த 'கதா-போக்கிரி' என்று ரசிகர்களும் இலக்கிய விமரிசகர்களும் கருதுகிறார்கள். டெஸ்டிமோனாவைப்போன்ற கற்புக்கரசியையும் ஒத்தெல்லோவைப் போன்ற உண்மைக் காதலும் வீரமும் கொண்டவனையும் எமிலியாவைப் போன்ற நல்ல குணம் படைத்த பெண்மணியையும் திறம்படப்படைத்த ஷேக்ஸ்பியருக்கு அகில உலக இலக்கியத்திலும் அழியாப்பெயர் கிடைத்ததில் ஆச்சரியமொன்றுமில்லை.

அத்தகைய ஷேக்ஸ்பியரின் நாடகங்களை இந்திய மொழிகளில் கொண்டு வர சாகித்ய அகாடமியினர் எடுத்துக் கொண்டுள்ள முயற்சி பாராட்டுதற்குரியது. நம் இனிய தமிழ் மொழியிலே இந் நாடகத்தைத் தந்துள்ளவர் டாக்டர் அ. சிதம்பரநாதச் செட்டியார் ஆவர். லோடவிகோ என்பவனைப் பல இடங்களில் லோடரிகோ ஆக்கியிருப்பது ஏனோ?

தமிழாக்கம் தெள்ளிய நடையில் ஆங்கில வாடை வீசாமல் இருந்திருந்தால், நன்றாக இருந்திருக்கும்.

பிரசுரம்: பழனியப்பா பிரதர்ஸ், சென்னை: திருச்சி. விலை ரூ. 2.75.

## பெண்களும் ஆரோக்கியமும்
## பெண்களும் நோய்களும்

நோய்களைப் பற்றியும் அவற்றுக்குச் சிகிச்சை அளிக்க வேண்டிய முறைகளைப் பற்றியும் அரைகுறையாகத் தெரிந்து வைத்துக் கொள்வதில் ஆபத்துண்டு. மிகச் சிறிய கோளாறைப் பெரிதுபடுத்தி என்னமோ ஏதோ என்று பயந்து போவார்கள். அஜீரணத்தினால் ஏற்படக்கூடிய நெஞ்சு வலியை இருதய நோய் கண்டுவிட்டதாக எண்ணி ஏமாறுவார்கள். மாறாக இருதய நோயை வெறும் வாயுப் பிடிப்புத்தான் எனக் கருதிச் சிலர் அலட்சியம் செய்து விடுவார்கள். விபரீதமாக முடியும். வைத்தியரைக் காட்டிலும் தமக்கு அதிகமாக எல்லாம் தெரியும் என்று தங்களைத் தாங்களே நம்ப வைத்துக் கொண்டு தாறுமாறாக மருந்துகளை விழுங்கி வைப்பவர்கள் அநேகர். ஆகக் கூடி நோய்களையும் அவற்றின் சிகிச்சை முறைகளையும் பற்றித் தெரிந்து வைத்துக் கொள்வதைக் காட்டிலும் ஆரோக்கியமான வாழ்க்கை நடத்தத் தெரிந்துகொண்டு நோய்களை அண்ட விடாமல் தடுப்பதே சாலச் சிறந்ததாகும். பெண்களும் ஆரோக்கியமும் என்ற நூலிலே உடலழகுக்கும் தேக ஆரோக்கியத்துக்கும் நெருங்கிய தொடர்புண்டு என்பதைத் தெளிவாக உணர்த்துகிறார் டாக்டர் கல்யாணி. இரண்டையுமே சரியாகப் பாதுகாத்து சந்தோஷமாக வாழ வழி வகைகளை விவரிக்கிறார். பெண்கள் அனைவருமே படித்துப் பயனடையக் கூடிய அரிய நூல்.

நோய்களின் எத்தனையோ வகைகள். அவ்வளவும் ஒருவருக்கே, ஏன் ஒரு குடும்பத்தில் உள்ள பலருக்கே கூட வரும் என்று எதிர்பார்ப்பதற்கில்லை. ஆகவே மருத்துவத் துறையில் விசேஷமாகப் பற்றுதலோ அவாவோ இருந்தாலொழியப் பற்பல நோய்களைப் பற்றியும் அவற்றுக்கான சிகிச்சை முறைகளைப் பற்றியும் அறிந்து வைத்துக் கொள்வதில் அநேகருக்குச் சிரத்தை இராது என்பதோடு அருவருப்பே கூட ஏற்படலாம். அன்றாடக் குடும்ப வாழ்க்கையில் ஈடுபட்டுள்ளோர் ஏதேனும் நோய் ஏற்பட்டால் மருத்துவரிடம் சென்று சிகிச்சை முறைகளைக் கேட்டு அறிந்து கொள்வதே முறை. பெண்களும் நோய்களும் என்ற இந்நூல் நோயாளிகளைப் பராமரிக்கும் நர்ஸ்களுக்குப் பெரிதும் பயன்படும். பணிமகளிர்களுக்காகவே முக்கியமாக எழுதப் பட்டது என்பதனை முன்னுரையில் தெளிவு படுத்தியுள்ளார் ஆசிரியர்; நன்றி!

ஆசிரியர்: எஸ். கல்யாணி. பிரசுரம்: இன்ப நிலையம், மயிலாப்பூர், சென்னை - 4. விலை ஒவ்வொன்றும் ரூபாய் இரண்டு.

## கை விலங்கு

ஜெயில் சூழ்நிலை—அதில் விலங்கு பூட்டிக் கொண்டு கைதியாக இருக்கிறவனின் விலங்கு பூட்டப்படாத மன உணர்ச்சிகள் இவற்றைச் சொல்ல வேண்டுமென்று முயன்று தமிழில் கதைகள், நாவல்கள் பல வந்துள்ளன. தேசப் போராட்டம் காரணமாகச் சிறை சென்றவர்களை வைத்தே ஜெயில் கதைகள் அதிகம் வந்தது உண்டு. அதன் காரணமாக அவை சிறை வாழ்வின் ஒரு பகுதியையே சித்திரிக்க முடிந்தது. முழுப் பக்குவமும் அமையவில்லை. ஆனால் கைவிலங்கு ஒரு புதுமை. குற்றம் செய்தவனை— ஜெயில் வாழ்க்கையில் சித்திரித்துக் காட்டுகிற நாவல் இது. சிறையைப் பற்றிய சூழ்நிலையைப் பலரிடம் கேட்டுச் சிந்தித்து எதைச் செய்கிறோமோ, அதற்காக உழைத்துப் பின்பு எழுதிய பக்குவம் 'கை விலங்கு' நாவலில் தெரிகிறது. ஜெயிலர் ராகவையர், கதாநாயகன் மாணிக்கம் ஆகியோர் தவிரக் கதையில் வருகிற சாமுண்டிக் கிராமணி போன்ற சிறு சிறு பாத்திரங்கள் கூட நன்றாக உருவாக்கப்பட்டுள்ளன. ஆனைக்குன்றம் ஜெயில் வருணனை மிகவும் தத்ரூபமாக வாய்த்திருக்கிறது. 'அன்பின் மிகுதியிலும் செய்கிற குற்றம் உண்டு. அல்லது குற்றத்தின் மிகுதியிலும் அன்பு செய்கிற மனம் உண்டு' இந்த இரண்டு குண சித்திரங்களாக ஜெயிலர் ராகவையரையும், மாணிக்கத்தையும் மாறி மாறிக் காண்கிறோம். சிறந்த குறுநாவல் இது.

ஆசிரியர்: ஜெயகாந்தன். வெளியீடு: மீனாட்சி புத்தக நிலையம், மேலக்கோபுர வீதி, மதுரை. விலை ரூ. 1—75.

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited, at the Kalki Press, Kilpauk, Madras-10.
Managing Editor, T. Sadasivam.

## இக்கால இல்லங்களிலே ஸர்ப்...

# 'வெள்ளோட்டம் பாருங்களேன்...'

என்கிறார் வங்காளப் பெண்மணி ஸ்ரீமதி நந்திதா ராய்.

'புதுமை நாடிய எனக்குப் பூரண திருப்தி அளித்து விட்டது புதுமை மயமான ஸர்ப். இன்று எல்லாத் துணிகளுக்கும் நான் உபயோகிப்பது ஸர்ப்' என்று கூறும் ஸ்ரீமதி ராய் பல்வேறான ஈடுபாடுகள் உடையவர். 'ஸர்ப் உபயோகிக்கிறேனே, ஒய்வு நேரம் மிஞ்சுகிறது; அவ்வளவு இலகுவான சலவை. வெள்ளை வெளேரென்ற சலவை!' என்கிறார் அவர்.






## ஸர்ப் மூலம் உங்களுக்கு

# வெள்ளை வெளேரென்ற சலவை

இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு.

SU.21-X52 TM

